உ

ப. இராமசாமி



# ஆத்திசூடி வெண்பா

## மூலமும் உரையும்.



உ

சிவமயம்

இராமபாரதியார்

இயற்றிய

# ஆத்திசூடி வெண்பா

## மூலமும்,

ஜீவகசிந்தாமணி வசனம், அரிச்சந்திர புராண வசனம், அருணா
சல புராண வசனம், ஸ்ரீ பகவத்கீதை வசனம் முதலிய நூல்
களின் ஆசிரியரும், ஆத்திசூடிப் புராணம், கந்தர்
சஷ்டி கவசம், விவேகசிந்தாமணி முதலிய நூல்
களின் உரையாசிரியருமாகிய

மதுரை ஜில்லா சேம்பூர் வித்வான்

**ஸ்ரீமத். வீ. ஆறுமுகஞ்சேர்வை அவர்களால்**

இயற்றப்பெற்ற

## உரையும்.

---

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1925

விலை ரூபா 1

# முகவுரை



செந்தமிழறிவிற் சிறந்த நண்பர்களே!

"ஆத்திசூடி வெண்பா," என்னும் பெயரிய இந் நூலானது, ஸ்ரீமத் "இராமபாரதி" என்னும் தமிழ்ப் புலவரால், "புன்னை வனநாதன்" என்னும் பிரபுவை முன்னிலையாக்கி, ஆத்திசூடிக் கருத்துக்களையும், அவற்றிற் குதாரணமாகிய பல சரித்திரங்களையும் விரவி, ஔவையின் நீதிகள் விளங்குமாறு ஒவ்வொரு செய்யுளின் ஈற்றிலும் ஆத்திசூடி வாக்கியத்தை அமைத்துச் செம்பாகமான நேரிசை வெண்பாக்களால் இயற்றப்பெற்றது. இதில் இங்ஙனம் ஆத்திசூடி நீதிகளே விரவப்பெற்ற வெண்பாக்கள் நிறைந்திருப்பதனாலே இதற்கு, "ஆத்திசூடி வெண்பா," என்னும் பெயரிடப் பட்டிருக்கிறது. இந் நூலின் ஒவ்வொரு செய்யுளிலும், புன்னை வனநாதன் புகழும், ஆத்திசூடி வாக்கியமும் நீதியும், அந் நீதிக் குதாரணமாகிய சரித்திரமும் அடங்கியிருத்தலால், இந் நூலைப் படிப்போர் அம் மூன்றையும் ஏக காலத்தில் எளிதில் உணரலாம்.

இஃது இங்ஙனம் அருமை பெருமை வாய்ந்த நூலாயிருந்தும், சிறந்த கல்விமான்களால் முகவுரை முதலியவற்றோடு நன்காராய்ந்து அச்சிடப்படாமையானும், உரையொன் றெழுதப்படாமையானும், பல வழுக்கள் நிறைந்ததாயும், நூலாசிரியர் ஊர், பாட்டுடைத் தலைவன் பெயர், செய்யுட்களி லடங்கிய சரித்திரங்கள் முதலியவற்றை விளக்கமாக உணர்ந்துகொள்ளக் கூடாததாயு மிருந்து வந்தது. ஆதலின், சில தமிழபிமானிகள் இதற்குரையொன் றியற்றுமாறு என்பாற் றெரிவித்தனர். அதனால், இவ் வுரையை எழுதி வெளியிடலாயினேன். இவ்வுரை எழுதுதற்குதவியாக இந்நூலின்

மூலமட்டும் அடங்கிய பழைய அச்சுப் பிரதியொன்று கிடைத்தது. அதைக்கொண்டு உரை எழுதும்பொருட்டு ஆராய்ச்சி செய்ய, அப் பிரதியில் பாடல்களெல்லாம் வழுக்கள் செறிந்தனவாயும், அவற்றுட் சில பொருளே விளங்காதவையாயும், சில சரித்திரங்களுக்கு மாறுபட்டவைகளாயும், சில சரித்திரங்கள் தெரிந்துகொள்ளக் கூடாதவைகளாயு மிருந்தன. ஆதலின், அவற்றையெல்லாம் வழுக்களைந்து சீர்ப்படுத்தி, அவற்றிலுள்ள சரித்திரங்களைத் தேடி யறியும்பொட்டுப் பல நூல்களையும் ஆராய்ச்சி செய்தேன்; அங்ஙனஞ் செய்த ஆராய்ச்சியால், பெரும்பான்மையான கதைகள் கிடைத்தன; சிற்சில கதைகள் கிடைக்கா தொழிந்தன; சிற்சில கதைகள் ஒவ்வொரு நூலிலும் ஒவ்வொரு விதமாக மாறுபட்டுக் கிடந்தன. ஆதலின், அவ்வாறு கிடைத்த கதைகளுக்குரிய செய்யுட்களை அவற்றிற் கேற்பத் திருத்தி அவற்றைத் தழுவி அவைகளுக்கு உரையெழுதி அடியிற் சரித்திரங்களை விளக்கிக் காட்டியும், கிடைக்காதொழிந்த கதைகளுக்குரிய செய்யுட்களை என் புத்திக் கெட்டியமட்டும் ஒருவாறு திருத்தி, கூடியவரை திருத்தமாக அவற்றிற் குரைவரைந்தும், அவற்றின் கீழ்ச் சிற்சில சரித்திரங்களை உத்தேசமாக எழுதியும், முழுதும் விளங்காதிருந்த கதைகளை விடுத்தும், பலவிதமாக மாறுபட்டுக் கிடந்த கதைகளை ஒரு வகையாகத் துணிந்தெழுதி அவற்றிற் கேற்ப அவற்றின் செய்யுட்களுக்கு உரைவரைந்தும் இந்நூலுரையைப் பூர்த்தி செய்தேன். இதில் சிற்சில கதைகள் விடுபட்டுப் போயினும், மற்றைய கதைகளெல்லாம் பெரும்பான்மையும் விளக்கி எழுதப்பட்டு, அவ்வவற்றிற்குரிய செய்யுட்களுக்குத் தெளிவான உரையும் வரையப்பட் டிருத்தலின், இந்நூலுரையைப் பார்ப்போர்க்கு, இது மூலமாயிருக்கும்போது உதவிய பிரயோசனத்தைக் காட்டினும் எத்தனையோமடங் கதிகமான பயனைத் தருமென்பது திண்ணம். இந்நூலுரையை விருப்புடன்

படித்துணர்வார்க்கு, சரித்திரங்களைத் தேடியுணரும் விஷயத்திலும், வழுக்கள் செறிந்திருந்த பாடல்களைத் திருத்தி அவற்றிற் குரையெழுதும் விஷயத்திலும் நான் எடுத்துக்கொண்ட பிரயாசை நன்கு விளங்காமற்போகாது. இன்னும் இதில் ஒவ்வொரு செய்யுட்கு மேலும், 'இது இன்ன ஆத்திசூடி சூத்திரத்தைச் சார்ந்தது,' என்பதையும், 'இன்ன சரித்திரத்தைச் சார்ந்தது,' என்பதையும் எளிதி லுணர்ந்துகொள்ளும்பொருட்டு ஒவ்வொரு ஆத்திசூடி சூத்திரமும், சரித்திரக் குறிப்பும் எழுதப்பட்டுள்ளன. ஒவ்வொரு செய்யுளுரையி னிடையிலும், ஆத்திசூடி நீதிக்கும், சரித்திரத்துக்கும் இயையுமாறு பல விஷயங்கள் வருவித்து விரிவாக எழுதப்பட்டுள்ளன. ஆதலின், இவ் வுரையைப் படித்து விஷயங்களை உணர்தல் சிறுவர்க்கும் எளிதாயிருக்கும்.

இந் நூலின் செய்யுட்களை, சரித்திரங்களுக்கும் பொருட் பொருத்தத்திற்கும் எற்பத் திருத்திய விஷயத்திலும், பொருள் எழுதியதிலும், ஒன்றிற்கொன்று மாறுகக்கிடந்த சரித்திரங்களைப் பல நூல்களிலிருந்து தேர்ந்தெடுத்து ஒப்பு நோக்கி ஒருவிதமாகத் துணிந்தெழுதிய விஷயத்திலும் என் புத்திக் குறைவால் இதில் சிற்சில பிழைகள் நேர்ந்திருக்கவுங் கூடும். அவ்விதப் பிழைகள் காணப்படினும், அறிவுடையோர், நன்ருக எழுதப்பட்டிருக்கும் மற்றைய பாகங்களை நோக்கி, 'இந்நூல் முன்னிருந்ததற்கு இவ் வளவாவது விளக்கத்தோடு வெளி வந்தது நன்மைதானே,' என்று திருப்தியடைந்து, என்மீது வெறுப்புருமல் அவ் வழுக்களை எனக்குத் தெரிவிப்பின் வந்தனத்துடன் எற்று மறு பதிப்பில் திருத்திக்கொள்வேன். இன்னும் இதில் விடுபட்டுப்போன கதைகளையும், நூல்களிற் பலவிதமாக விருந்து சந்தேகத்துடன் எழுதப்பட்டிருக்கும் சரித்திரங்களையும் சரியான விதத்தில் அறிந்தோர் தெரிவிப்பின் அவற்றையும் அவர் பெயருடன் அடு

த்த பதிப்பில் திருத்தி வெளியிடுவேன். இந் நூலின் செய்யுட்களாலும், ஈற்றிலுள்ள சாற்றுக்கவி யொன்றாலும், பாட்டுடைத் தலைவர் பெயர், 'புன்னைவனநாதன்,' என்பதும், அவர், 'கணபதிமால் செல்வன்,' என்பதும், 'தொண்டை நாட்டின் திலகர்,' என்பதும், 'வேளாள குலத்தினர்,' என்பதுமே விளங்குகின்றன. அவர் பெயரும், ஊர்ப்பெயர் முதலியனவும் சரியாக விளங்கவில்லை; நூலாசிரியர் பெயர், 'இராமபாரதி,' என்பது மாத்திரம் விளங்குகின்றதே யன்றி, அவர் ஊர் முதலிய விவரங்களும் விளங்கவில்லை. ஆதலின், இவ் விவரங்களை அறிந்தோர் தெரிவிப்பினும் இவற்றையும் மறு பதிப்பில் எழுதிச் சேர்த்துக்கொள்வேன்.

இவ்வாறு விளக்கமான உரையுடன் வெளிப்பட் டிருக்கும் இந் நூலானது, ஆத்திசூடி நீதியை யுணர்த்துதல், புன்னைவனநாதன் புகழை வெளிப்படுத்தல், அநேகம் நீதிக் கதைகளை விளக்கிக் காட்டுதல் என்னும் மூவகைப் பிரயோசனங்களையுடையதாய்ச் சிறப்புற்று விளங்குதலினாலே, இதனைத் தமிழ் விருப்புள்ள நண்பர் ஒவ்வொருவரும் வாங்கி ஆதரித்துக் கொண்டாடி, எனக்கும் இதனை வெளியிடுவித்தவர்க்கும், மேன்மேலும் இத்தகைய நூல்களை வெளிப்படுத்துதற்காம் ஊக்கத்தை விளைவிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். இதனை வெளிப்படுத்துமாறு தூண்டுதல் புரிந்த நண்பர்க்கும், இதனை விருப்புடனேற் றுதரிக்கும் கனவான்கட்கும் எல்லாம் வல்ல இறைவன் திருவருள் புரிவானாக.

இங்ஙனம்:

☞ வீ. ஆறுமுகன்.

---

இந்நூலுக்குரிய

# சாற்றுக் கவி

பாரோர் புகழ்ராம பாரதிசொல் பாகனைய
சீராத்தி சூடி செழுந்தமிழைப்—பேராக
நாகரிகன் புன்னைவன நாதமகி பன்புனைந்தான்
வாகுவினிற் கீர்த்தி வர.

(ப - ரை) பாரோர் - பூமியிலுள்ளவர்கள், புகழ் - துதிக்கின்ற, ராமபாரதி - இராமபாரதி யென்னுங் கலைவல்லோன், சொல் - கூறிய, பாகு அனைய - சருக்கரைக் குழம்பை நிகர்த்த சுவை பொருந்திய, சீர் - சிறப்புற்ற, ஆத்திசூடி - ஆத்திசூடி நீதி வாக்கியங்கள் விரவப்பெற்ற, செழும் தமிழை - செழித்த தமிழாலாகிய ஆத்திசூடி வெண்பா வென்னும் இந்நூலை, பேர் ஆக - தன்னுடைய பெயர் எங்கும் பரவுதலாகும்படிக்கும், கீர்த்தி வர - புகழானது தனக்குவந்து சேரும்படிக்கும், நாகரிகன்-புத்திசாதுரிய முள்ளவனாகிய, புன்னைவனநாத மகிபன் - புன்னைவனத்திலுள்ள தலைவனாகிய வேளாள பூபதி, வாகுவினில் - புயங்களிலே, புனைந்தான் - சூடினான்.

(வி - ரை) செழுந்தமிழ் - ஆகுபெயராய்த் தன்னாலாகிய ஆத்திசூடி வெண்பா வென்னும் நூலை யுணர்த்திற்று. நூல்கள் பெரும்பாலும் தலைவனுடைய புஜபலத்தையே சிறப்பித்துக் கூறப்படுவன வாதலின், அவற்றை வாகுவிற் சூடியதாகக் கூறுவது தொன்று தொட்டவழக்கம்; அதுபற்றியே இச் செய்யுளை யியற்றினோரும், 'வாகுவினிற் புனைந்தான்,' என்று கூறினார். இவ் வெண்பாவானது, பாயிரச் செய்யுள் போன்றுளது. இதனை இயற்றினோர் இன்னவரென்பது புலப்படவில்லை. ஒரு சமயம் இந் நூலாசிரியரே இதனை யியற்றி யிருக்கவுங் கூடும்.

உ
சிவமயம்

# ஆத்திசூடி வெண்பாவின்
# விஷய அட்டவணை

## விஷய அட்டவணை

விஷய அட்டவணை முற்றிற்று.

---

சிவமயம்

ஆத்திசூடி வெண்பாவின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி



செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

---

உ

கடவுள் துணை

# ஆத்திசூடி வெண்பா

## மூலமும் உரையும்

### தெய்வ வணக்கம்

விநாயகர் துதி

நேரிசை வெண்பா

உலகம் புகழ்பாகை யோங்குதொண்டை நாட்டின்
திலகன் கணபதிமால் செல்வன்—நலமிகுந்த
வாழ்வாகும் புன்னை வனநாத னற்றமிழ்க்குச்
சூழாத்தி சூடி துணை.

(பதவுரை) உலகம் - பூவுலகிலுள்ளவர்கள், புகழ் - துதித்துக் கொண்டாடுகின்ற, பாகை - (பூவைசியருடைய) தலைப்பாகையானது, ஓங்கு - உயர்ந்து விளங்குகின்ற, தொண்டைநாட்டின் - தொண்டைநாட்டி லுள்ளவர்க்கு, திலகன் - நெற்றித்திலகமானவனாகிய, மால் - காத்தற்றொழிலில் திருமால் போன்ற, கணபதி - கணபதியென்பானுடைய, செல்வன் - செல்வமானவனும், நலம் மிகுந்த-நன்மை அதிகரித்த, வாழ்வு ஆகும்-வாழ்க்கை விருத்தி யடைகின்ற, புன்னைவனநாதன் - புன்னைவன நாதனுமாகிய மகிபனுடைய, நல் தமிழ்க்கு - நல்ல தமிழாற் செய்யப்படும் இந்

நூலுக்கு (இஃதினிது முடிதற்பொருட்டு) சூழ் - மார்பில் வளைந்து கிடக்கும்படியான, ஆத்தி சூடி - கொன்றைமாலையைச் சூடுபவனாகிய விநாயகக் கடவுள், துணை - உதவியாவன்.

(விசேடவுரை) உலகம் - இடவாகுபெயர்; அதிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. புகழ் பாகை - வினைத்தொகை. அரசர்க்குக் கிரீடஞ் சிறந்து விளங்குதல்போல் வைசியர்க்கும் சூத்திரர்க்கும் தலைப்பாகை சிறந்து விளங்கி அவர்கள் செல்வ மிகுதியைக் காட்டக்கூடியதாதலின், 'பாகை யோங்கு தொண்டை நாடு,' என்றார் ஆசிரியர். தொண்டைநாடு - இடவாகுபெயர்; அந் நாட்டிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. 'நாட்டிற்குத் திலகன்' என நான்காம் வேற்றுமை தகுதியுடைப்பொருள்பற்றிய குவ்வுருபு பெற்று வருந் தொடர், 'நாட்டின் திலகன்' என ஏழாம் வேற்றுமை இன்னுருபு பெற்று வந்தது, உருபு மயக்கத்தான்; "யாத னுருபிற் கூறிற் றாயினும், பொருள்சென் மருங்கில் வேற்றுமை சாரும்," என்பது சூத்திரம். திலகன் - பண்புத்தொகை; இஃதுவமத்தொகையுமாம்; அங்ஙனம் உவமத்தொகையாகக் கொள்ளுமிடத்துத் திலகம் போன்றவன் என விரியும். திருமாலைப்போல உலகத்தைக் காக்கும் ஆற்றலுடையவனாதலின், 'கணபதி மால்' என்றார். செல்வன் - பண்புத்தொகை. பொருட்பேறு, கல்விப்பேறு, புத்திரப் பேறு ஆகிய மூன்றுமே இல்வாழ்வோர்க்கு முக்கிய செல்வங்களாதலின் இங்ஙனம் பண்புத்தொகையாகக் கொண்டு, 'செல்வமாகியவன்' எனப் பிரித்தலே சிறப்புடைத்து. இன்னும் தந்தை செல்வத்திற்குப் புத்திரன் உரியவனாதலின், 'செல்வன்' என்பதை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக் கொண்டு, 'கணபதி மாலினது செல்வத்தை யுடையவன்' எனப் பொருள் கோடலுமொன்று; இஃதத்துணைச் சிறப்பன்று. 'தமிழ்' என்பது கருவியாகுபெயராய் அதனாலாகிய நூலை யுணர்த்திற்று. விநாயகக்கடவு

ளே எல்லாத் தேவர்க்கும் மேம்பட்ட தேவராயும், விக்கினங் களைத் தீர்க்கக்கூடியவராயும், ஒரு காரியத்தைத் தொடங்கும் போது முதலில் வணங்கத்தக்க கடவுளாயு மிருத்தலால், இங்கு 'ஆத்திசூடி' என்பதற்கு விநாயகக்கடவுள் என்று பொருளுரைத் தாம். சிவனுக்குரிய சின்னங்க ளெல்லாம் கணபதிக்கு முண்டாக லின், ஆத்திசூடியென்னும் பெயர் அவர்க்குத் தகுமென்க. விநாய கக்கடவுள், வக்கிரதுண்ட விநாயகராய்த் தோன்றிய காலத்தில் சந்திரஹாரம், கொன்றைமாலை முதலியவற்றை யுடையராய் விளங்கின ரென்பதை விநாயகபுராணம் மூவர் உபாசித்தபடலத் திற் காண்க. இன்னும் சிவசின்னங்கள் விநாயகர்க்கு முண்டென் பது, 'திங்களும் பனிநீர்க் கங்கையு மணிந்த செஞ்சடை விநாயகப் பெருமான்,' என்ற விநாயகபுராணம், வக்கிரதுண்ட விநாயகர் திருவவதாரப் படலம் முதற் செய்யுளடி முதலியவற்றானு முணரப் படும். இஃதுணராதார், 'ஆத்திசூடி' என்பதற்குச் 'சிவன்' எனப் பொருள் கூறி யிடர்ப்படுவர். ஆத்தி யென்னும் மரத்தின் பெயர் மலருக்காய், மலரின் பெயர் மாலைக்காயினமையின் இஃது இரு மடியாகுபெயர். சூடி-வினையாலணையும் பெயர்; சூடுவோன் என விரியும்; இதில் இ-ஆண்பாற் படர்க்கை விகுதி. இந்நூலில் ஆத்தி சூடி சூத்திரங்களே விரவி யிருத்தலின், 'ஆத்திசூடி துணை' என்ப தற்கு, 'ஆத்திசூடி யென்னும் நூலே இந் நூலுக்குத் துணையாம்,' எனச் சிலேடையாகப் பொருள் கோடலு மொன்று. தொண்டை நாடு - மேற்கில் பவளமலையையும், கிழக்கில் கடலையும், தெற்கில் பிணாகினி நதியையும், வடக்கில் திருவேங்கடத்தையும் எல்லை யாகக் கொண்ட நாடு; கரிகாலச்சோழன் வேட்டைக்குச் சென் றிருந்தபோது நாககன்னியைக் கண்டு மோகங் கொள்ள, அவள் அச் சமயத்தில் அரசனை நோக்கி, 'என்னிடம் பிறக்கும் புதல்வ னுக்கு நீ அரசு கொடுப்பதாயிருந்தால் மாத்திரம் உன்னைக் கூடு வேன்,' என்று சொல்ல, அரசன் அதற்கிசைந்து, 'உன்னிடம்

பிறக்கும் புதல்வனுக்குக் குமாரப்பருவம் வந்தவுடன் அவனை நான் என்னுடைய குமாரனென் றறிந்துகொள்ளும்படி நாமிருக்கும் இவ் விடத்திலுள்ள ஆதொண்ட மலர்மாலையைச் சூட்டி என்னிடம் அனுப்புவையாயின், நான் அவ்வாறே செய்கின்றேன்,' என்று உறுதி கூறினன். அதன்மேல் நாககன்னிகை அரசனைக் கலந்து கருக்கொண்டு தன்னுலகஞ் சென்று ஓர் புத்திரனைப்பெற்று வளர்த்து, அவனுக்குக் குமாரப்பருவம் வந்தவுடன் ஆதொண்டை மாலையைச் சூட்டி அவனைக் கடலில் விட்டனள். கடல் அலையால் ஒதுக்கி அவனைச் சோழராஜனுடைய நாட்டின் கரையிற் சேர்த்தது. அவன் அலையினால் ஒதுக்கப்பட்ட காரணத்தால், 'திரையன்' என்னுந் திருநாம முடையனாய்க் கரிகாலச்சோழன் சபைக்குச் சென்று தன் வரவை அவனுக்கறிவிக்க, அவன் திரையனைத் தன் பிள்ளை யன்றென்று மறுத்தனன். அதன்மேல் ஆகாயவாணி உண்மையைக் கூற, அதனாலும், திரையன் ஆதொண்டைமாலை சூடியிருந்ததாலும் அவனைத் தன் பிள்ளையென்று நிச்சயித்து, தன் இளவரசான புத்திரனுக்குக் காவிரிக் கரையைச் சார்ந்த நாட்டைக் கொடுத்து, நாககன்னியின் குமாரனாகிய திரையனுக்குக் காஞ்சிமண்டலமாகிய இந் நாட்டைக் கொடுத்து, 'ஆதொண்டைச் சக்கரவர்த்தி,' என்ற பட்டப்பெயரு மளித்தனன். அதுமுதல் அவன் இந்த நாட்டை ஆண்டுவந்தன னாதலின் இது, 'தொண்டை நாடு' எனவும், 'தொண்டைமண்டலம்' எனவும் பெயர் பெற்றது.

---

# நூல்

## "அறஞ்செய விரும்பு."

என்றதற்கேற்ப அறத்தின் பெருமையை விளக்கும்

## கபிலை கதை

நேரிசை வெண்பா

1. அருளார் கபிலை யறமே சயமென்
றிருளகல வேங்கைக் கியம்பும்—பெருமையினல்
மாவளரும் புன்னை வனநாதா மெய்த்துணையா
மேவியறஞ் செய்ய விரும்பு.

(ப - ரை) அருள் ஆர்-கிருபை பொருந்திய, கபிலை-பசுவும், அறமே - தருமமே, சயம் என்று-எப் பகையும் நீங்க வெற்றியாவதாம் என்று கருதி, இருள் அகல - அஞ்ஞானமாகிய இருட்டு நீங்கும்படி, வேங்கைக்கு - ஒரு புலிக்கு, இயம்பும் - உண்மை கூறி நன்மை யடையத்தக்க, பெருமையினல் - அவ்வறத்தின் உயர்விஞலே, (தருமத்தால் நன்மை வருமென்பதை நீயு மாராய்ந்துணர்ந்து) மாவளரும்-மாமரங்கள் செழித்து வளர்ந்திருக்கின்ற, புன்னைவனநாதா-புன்னை வனத்திற்குத் தலைவனே!, மெய் துணையா - உண்மைத் துணையாகும்படி, மேவி - அறநூல் மார்க்கத்தைச் சார்ந்து, ('அறஞ்செய விரும்பு' என்று ஔவை கூறிய நீதிப்படி) அறம் செய்ய - தருமம் புரிய, விரும்பு - நீ பிரியங் கொள்வாயாக.

(வி-ரை) கபிலையும் 'அறமே சயம்' என்று புலிக்கு அஞ்ஞானம் நீங்கும்படி உண்மை கூறும்படி சிறந்த அவ் வறத்தின் பெருமையினலே உண்டாகும் நன்மையை உணர்ந்து நீயும் அறஞ்செய்ய விரும்புவா யென்பது இதன் கருத்து.

கபிலை: தெய்வப்பசு; இது ஒரு சமயம் தன் தேகத்தில் அக்கினிக் கிடங்கொடுத்துத் தேவர்களாலே புண்ணியப் பயன் அடைந்

தது; இது, திருப்பாற்கடலில் உற்பவித்து நந்திதேவரை விரும்பியிருக்கும். இதன் இனம்: நந்தை, சுபத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என ஐவகைப்படும். இவற்றுள், நந்தை கபில நிறமுள்ளது; சுபத்திரை கருமை நிறமுடையது; சுரபி அழகுள்ள வெண்மைநிறம் பொருந்தியது; சுசீலை புகைநிறமார்ந்தது; சுமனை தாமிரநிறம் பெற்றது. இவை, தேவபூசை முதலியவற்றிற் குதவியாய்ப் பால், தயிர், நெய், கோமயம், கோசலம், கோரோசனை முதலியவற்றை உதவுவன. இவ்வினங்களைச் சார்ந்த பசுக்களில் ஒரு பசு ஒரு தினம் ஒரு புலியினிடம் அகப்பட்டுக்கொண்டு தான் சாகப்போகுஞ் சமயத்தில் தன் கன்றுக்குப் பால் கொடுத்துவிட்டுத் திரும்பி வருவதாக உறுதி கூறி அதனிடம் விடைபெற்றுச் சென்று கன்றுக்குப் பால் கொடுத்து, சொன்ன வாக்குத் தவறாமல் திரும்பிவர அப் பசுவின் செய்கையால் புலியும் ஞானத்தை யடைந்து அதனைக் கொல்லாமல் விட, தேவர்கள் அவ் விரண்டின் செய்கைகளையும் பார்த்து மகிழ்ந்து அவற்றிற்கு நற்கதி கொடுத்தன ரென்பது புராணகதை. (க)

---

"ஆறுவது சினம்."

என்பதற்கேற்ப கோப மின்மையின் உயர்வை விளக்கும்

சடபரதர் கதை.

2. ஆதிசவ்வீ ரன்சிவிகைக் காளாய்ச் சடபரதர்
தீது பொறுத்துச் சிறப்புற்றார்—சோதிப்
புயமா வளர்கின்ற புன்னைவன நாதா
செயமா றுவது சினம்.

(ப - ரை) சோதி - இரத்தினாபரணங்களின் பிரகாசந் தங்கிய, மா வளர்கின்ற - வீரலட்சுமி தங்கி வாழ்கின்ற, புயம் - புஜங்களையுடைய, புன்னைவன நாதா - புன்னவனத்திற் கிறைவ

னே!, ஆதி - முற்காலத்திலே, சடபரதர் - சடபரதரென்பவர், சவ்வீரன் சிவிகைக்கு ஆளாய் - சவ்வீர தேசாதிபதியின் சிவிகை சுமத்தற்குரிய சுமையாளாகப் பொருந்தி, தீது - அவன் செய்த தீங்கை, பொறுத்து - சகித்துக் கோபங் கொள்ளாமல், சிறப்புற்ருர் - அந்தப் பொறுமையினுலே சிறப்படைந்தனர்; (ஆதலால், 'ஆறுவது சினம்' என்று ஔவை கூறிய நீதிப்படி) சினம் ஆறுவது - எச் சமயத்திலும் கோபந் தணிந்திருப்பது, செயம் - வெற்றியைத் தருவதாகும்.

(வி - ரை) 'புயமா வளர்கின்ற' என்பதை, 'மா வளர்கின்ற புயம்' என மாற்றுக.

சடபரதர் கதை:—ஆதியில் இருஷபருக்குச் சயந்தியினிடமாகப் பரதரென்பவர் உதித்தார்; இவர், பஞ்சசேநி யென்பவளை மணந்து இப் பாதகண்டத்தைக் கோடி வருடங்கள்வரை அரசாண்டு, முடிவில் புலகாராச்சிரமத்தை யடைந்து யோகத்திருந்தனர்; அங்ஙன மிருக்கும்போது ஒரு தினம், கண்டகி நதிதீரத்திற் சென்று சந்தியாவந்தனஞ் செய்யுந் தருணத்தில், கருக்கொண்ட பெண்மானென்று, சிங்க முழக்கத்தைக் கேட்டுப் பதறிப் பயந்து உடனே குட்டியை யீன்று, உயிர் துறந்தது. அதைக் கண்டவுடன் இராஜ ரிஷியாகிய பரதர் அம் மானின் விஷயத்தில் இரக்கமுற்று, அஃதீன்ற குட்டியை எடுத்துச் சென்று ஆச்சிரமத்தில் வைத்து அருமையாக வளர்த்து வந்து அவருக்கு மரணகாலங் கிட்டியபோது அந்த மான் குட்டியின்மீது ஞாபகத்தோடு உயிர் விட்டனர். அதனுல் அவர், மறு பிறப்பில் அந்த மானுருவத்தை யடைந்து, முன் ஜன்மத்தின் நினைவு மறவாதவராய்ச் சில காலங் கழித்துப் பின்னர் அப் பிறவியும் நீங்கி, ஆங்கீரச கோத்திரத்துள்ள ஒரு பிராமணனுடைய இரண்டு மனைவியரில் இளையவளிடத் துதித்த இரட்டைப் பிள்ளைகளில் ஆண் பிள்ளையாகப் பிற

ந்து, வளர்ந்து 'சடபாதர்' என்னும் பெயர் கொண்டு பித்தனைப் போன்று திரிந்தனர். இவரே சடபாதராவர். இவர் அவ்வாறு திரியுங் காலத்தில், ஒருவன், புத்திரப்பேறு பெறுதற்கு நரபலி கொடுக்கும்பொருட்டு இவரைக் காளி கோவிலுக்குக் கொண்டு செல்ல, உடனே காளி இவர்பொருட் டிரங்கி அந்தப் பாதகனைச் சங்கரித்தனள். பின்னர் இவர், இட்சுக்மதி தீரத்தில், அவ்வாறே உன்மத்தராய்த் திரிந்தனர். அக்காலத்தில், சவ்வீர தேசாதிபனாகிய இரகுகுணனுடையபல்லக்குச்சுமப்பவர், இவரைத் தம்மோடு சேர்த் திழுத்துக்கொண்டுபோய்ப் பல்லக்குச் சுமக்கும்படி செய்ய, இவர் பல்லக்கைச் சுமந்து மெல்லச் சென்றபடியால், அவ்வரசன் இவரைக் கோபித்தனன். அதற்கிவர் கோபத்தை யடக்கிக் கொண்டு தக்கவாறு விடைகூறித் தம்முடைய உயர்வை விளக்கினர். அதனால், அவன் இவரை, மெய்யுணர்ந்தவ ரென் றறிந்து, இவரிடம் ஞானோபதேசம் பெற்றுய்ந்தனன்.

---

## "இயல்வது கரவேல்"

என்று ஔவை கூறியதற்கேற்ப ஈகையின் பெருமையை விளக்கும்

### அரிச்சந்திரன் கதை.

3. இந்துமதி விற்றுமலேந் தீனனுக்கா ளாகிபரிச்
சந்திரனே தன்னிலைமை தப்பாதான்—அந்த
மனுநெறிதேர் புன்னை வனநாதா பூமி
யினியியல்வ துகர வேல்.

(ப - ரை) ('இயல்வது கரவேல்' என்று ஔவை கூறிய நீதிப்படி தன்னால் கொடுக்க இயல்வதை மறைக்காத இயல்பினாலே, விசுவாமித்திரர் கேட்ட காலத்தில், நாடு நகரம் முதலிய

எல்லாவற்றையும் அவருக்குக் கொடுத்ததோடு மேலும் விசுவா மித்திரர் செய்த வஞ்சனையால் கடன்பட்டு அக் கடனைத் தீர்த்தற் பொருட்டு,) இந்துமதி - தன் மனைவியாகிய சந்திரமதியை, விற்றும் - அந்தணர்க்கு விலை செய்தும், (அக் கடன் தீராமையால்) அலைந்து-மேலும் காசி நகரத்தின் பல தெருக்கடோறுந் திரிந்து, ஈனனுக்கு-தாழ்ந்த ஜாதியானுகிய நீசனுக்கு, ஆள் ஆகி அடிமை-யாகி, (சத்தியத்தை நிலைநிறுத்தியபடியால்) தன் நிலைமை தப்பா தான் - தான் உயர்ந்த பதவியி லிருத்தலாகிய தன்னுடைய நிலைமையை விட்டு நீங்காதவன், அரிச்சந்திரனே-அரிச்சந்திர னென்னும் மன்னனேயாவன் (ஆதலால்), அந்த மனு நெறி - அந்த அரிச்சந்திரன் கொண்டிருந்த மனுநீதியை, தேர் - அறிந்திருக்கின்ற, புன்னைவன நாதா - புன்னைவன பூபதியே!, பூமியினில் - இப் பூமண்டலத்தில், (அந்த அரிச்சந்திரனைப்போலவே) இயல்வது - உன்னுல் யாசகர்க்குக் கொடுக்கக் கூடிய பொருளை, கரவேல்-நீ மறைக்காதே, (அவன் போலவே இயல்வது கரவாமற் கொடுத்துச் சத்தியத்தை நிலைநிறுத்தி மேலான பதவியைப் பெற்றுக்கொள்வாயாக.)

(வி - ரை) 'இந்துமதி விற்றும்,' என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவியதாதலால் அதற்கேற்ப, அரிச்சந்திரன் நாடு நகரம் முதலியவற்றை விசுவாமித்திரர்க்குக் கொடுத்த விஷயம் வருவித் துரைக்கப்பட்டது. அரிச்சந்திரன் அடைந்த நிலைமையைப் போன்ற நிலைமையை வேறொருவரு மடைந்திலரென்பது தோன்ற ஆசிரியர், 'அரிச்சந்திரனே' எனத் தேற்றங்கொடுத்தோதினர். 'பூமியினில்' என்பதில் ஏழாம் வேற்றுமை யுருபாகிய இல்லிற்கு முன்னுள்ள இன் சாரியை.

அரிச்சந்திரன் கதையாவது:—அரிச்சந்திரன், திரிசங்கு என்னும் சூரியகுலத் தரசனுக்குப் புத்திரனு யுதித்தவன்; இவன் ஒரு

காலத்தில், வருணனிடத்தில், "எனக்குப் புத்திர னுண்டானால், அவனை யாகப் பசுவாக்கி உனக்குத் திருப்தியை யுண்டாக்கு கிறேன்," என்று சொல்லி அவ்வாறே புத்திர னுதிக்க அவனை யாகப் பசுவாக்கி வருணனுக்குத் திருப்தி செய்யாம லிருந்தான். அப்போது, இப்படி யிருந்த தந்தையின் செய்கையை யுணர்ந்த அக் குமாரன், தன்னுடைய நிலைமையையு மறிந்துகொண்டு பய முற்றுக் காட்டிற் புகுந்து வசித்தான். அதன்மேல் வருணன், தனக்குச் சொன்னபடி அரிச்சந்திரன் நிறைவேற்றாததற்காக இவனுக்கு மகோதர நோயை யுண்டாக்கினன். அவ்வாறு நோயுண் டாய் வருந்த, காட்டிற் சென்ற இவன் புத்திரன், இவனுடைய வருத்தத்தை யுணர்ந்து அதைத் தீர்க்கக் கருதி நகர நோக்கிப் புறப்பட்டு வந்து, இந்திரனால் ஆறு வருடங்கள்வரை தடைப்பட்டு, அந்த ஆறும்வருடக் கடைசியில், அசிகிரதன் என்பவனிடத்தில் சுனச்சேப னென்பவனை விலைக்கு வாங்கி இவனுக் களித்தனன். இவன் அந்த சுனச்சேபனை யாகப் பசுவாக்கி வருணனுக்குத் திருப்தியை யுண்டாக்கினன். அதனால், வருணனுடைய கோபத்தா லுண்டாகியிருந்த மகோதர நோய் நீங்கிற்று. இவன், இராஜசூய யாகஞ் செய்து சாம்பிராஜ்ய பட்டாபிஷேகம் பெற்ற அரசனாய், 'சம்ராட்' எனப்படுவான். இவனுக்கு மனைவியாக அமைந்தவள், கன்னோசி நாட்டு மன்னனாகிய மதிதயன் மகள் சந்திரமதி யென் பாள். இவனுக்குச் சத்தியகீர்த்தி யென்பவன் மந்திரி. இவன் நகரம் அயோத்தி; நாடு கோசலம். இவன் பின்பு தருமந் தவறாதவ னாய் அரசு செலுத்தி வருங்காலத்தில், ஒரு தினம் தேவலோ கத்தில் தெய்வசபை கூடியிருக்கும்போது, இந்திரன் அங்குக் கூடி யிருந்த தேவர்களையும், முனிவர்களையும் நோக்கி, "பூமியி லுள்ள வர்களில் சத்தியந் தவறாதவன் யாவன்?" என்று வினவ, வசிஷ்ட முனிவர், "என்னுடைய சீஷனாகிய அரிச்சந்திரன் ஒருவனே சத்தியந் தவறாதவன்," என்றனர். அதைக் கேட்ட விசுவாமித்திர

முனிவர், தனக்கு வசிஷ்டர்மீ தேற்பட்ட பகையால், அவருடைய வார்த்தையைத் தடை செய்யக் கருதி, "அரிச்சந்திரன் மிகவும் பொய்யன்," என்று கூறினர். அதனல் வசிஷ்டருக்கும் விசுவாமித்திரருக்கும் வாக்கு வாதம்நடந்தது. இருவரும் தம்தம் வாக்கை நிலைநிறுத்தும் பொருட்டுக் கடுஞ் சபதஞ் செய்துகொண்டார்கள்.

அதன்மேல் விசுவாமித்திரர் தன்னுடைய சபதத்தின்படி அரிச்சந்திரனைப் பொய்ய னுக்கும்பொருட்டுப் பல உபாயங்களை மனத்தில் ஆலோசித்துக்கொண்டு அயோத்திக்குச் சென்று அரிச்சந்திரனைக் கண்டு, யாகஞ் செய்தற்கு வேண்டுமென்று அளவற்ற திரவியங் கேட்டு அவன் கொடுக்கப் பெற்று மீண்டும் அதனை அவனிடமே வைத்து, "நான் யாகஞ் செய்யுந் தருணத்தில் வந்து இதனைப் பெற்றுக்கொள்ளுகிறேன்," என்று சொல்லிச் சென்றனர். பின்னர், வனத்திற் சென்று அளவற்ற மிருகங்களைச் சிருஷ்டித் தனுப்பி அரிச்சந்திரனுடைய நாட்டின் வளங்களை யெல்லாமழித்துக் குடிகளுக்குந் தீங்கியற்றும்படி செய்தனர்; அதனல் குடிகள் வருந்தி முறையிட அரிச்சந்திரன் வேட்டையாடச் சென்று அம் மிருகங்களை யழித்துக் காட்டிடைத் தங்கியிருக்குங் காலத்தில் விசுவாமித்திரர் இரண்டு நீச ஸ்திரீகளைச் சிருஷ்டித்து அரிச்சந்திரனிட மனுப்பி அவனை மணந்துகொள்ளும்படி கேட்கச் செய்தனர். அவர்கள் அவ்வாறே கேட்க அரிச்சந்திரன் வேறு பொருள்கள் தருவதாக எத்தனையோ இதமான வார்த்தைகளைக் கூறியும் மறுத்தமையால் அவன் அவர்களைத் தன் வேலையாட்களால் அடித்துத் துரத்துவிக்க, அவர்கள் சென்று விசுவாமித்திரரிடம் குறை கூற அவர் வந்து கோபித்து அரிச்சந்திரனுடைய முடியை உதைத்துத் தள்ளி மீண்டும் அந் நீச ஸ்திரீகளை மணந்துகொள்ளச் சொன்னர். அதற்கு அரிச்சந்திரன், 'என்னுடைய இராஜ்யத்தை வேண்டுமாலுைங் கொடுத்துவிடுவேன்;

இக்காரியமட்டுஞ் செய்யமாட்டேன்,'' என்று சொல்ல, விசுவாமித்திரர் அதையே உறுதியாகக்கொண்டு இராஜ்ஜியத்தைக் கேட்க அவ்வாறே கொடுத்துவிட்டான். அதன்மேல் விசுவாமித்திரர், தாம் முந்தி அரிச்சந்திரனிடம் யாகஞ் செய்தற்கு வாங்கி வைத்த பொருளைக் கேட்க, அவன், "அதுவும் அரண்மனையிற்று னிருக்கின்றது; எடுத்துக்கொள்ளும்,'' என்று சொல்ல, அப்போது விசுவாமித்திரர், "அந்தப் பொருள் உன் வசத்தி லிருந்தபடியால் உன் பொருளாகவே நீ தாரைவார்த்துக் கொடுத்த மற்றப் பொருள்களோடு சேர்ந்துவிட்டது; ஆதலால், வேறு பொருள் தரவேண்டும்,'' என்றுரைக்க, அரிச்சந்திரன் அவ்வாறே நாற்பத்தெட்டு நாள்களுக்குள் தருவதாகச் சொல்லித் தன் மனைவி, மைந்தன், சத்தியகீர்த்தி யென்னும் மந்திரி ஆகியவர்களுடன் காசிக்குச் செல்ல, விசுவாமித்திரர், திரவியத்தை வாங்கி வரும்படி அவனுடன் சுக்கிரனை யனுப்பி வழியில் அநேக துன்பங்களைச் செய்வித்தும் தாமே நேரில் செய்தும் அவனிடம் இடையிடையிற் சந்தித்து, "நான் இராஜ்ஜியத்தை உமக்குக் கொடுக்கவில்லை,' என்று ஒரு வார்த்தை கூறிவிடு; நான் உன்னுடைய அரசாட்சியைக் கொடுத்துவிடுகிறேன்,'' என்று சொல்லியும் அவன் அதற் கிசையவில்லை.

அதன்மேல் அரிச்சந்திரன் காசிமாநகரஞ் சென்று அந்தணர்க்குத் தன் மனைவியையும், புத்திரனையும் விற்று விசுவாமித்திரருக்குத் தருவதாகச் சொன்ன திரவியத்தைச் சுக்கிரனிடம் கொடுக்க அவன் அதனைப் பெற்றுக்கொண்டு, விசுவாமித்திரர் தனக்குச் சொல்லிவைத்தபடி, "இப்பொருள் எனக்குத் தாகு சம்பளம் சேரவேண்டுமாதலால் போதாது; இன்னும் கடன் தீரவில்லை,'' என்று சொல்ல, அரிச்சந்திரன் நீசனுக் கடிமைப்பட்டுப் பொருள் வாங்கி அக் கடனைத் தீர்த்துவிட்டுத் தன்னை விலக்கு

வாங்கிய நீசனுகிய வீரவாகுவின் கட்டளைப்படி மயானங் காத்திருந்தனன். இவ்வளவு துன்பங்களை யடைந்தும் அரிச்சந்திரன் பொய் கூருதபடியால், மேலும் அதற்குத் தக்க தந்திரங்களைச் செய்யவேண்டுமென்று விசுவாமித்திரர் கருதியிருந்தார். அப்படியிருக்குங் காலத்தில் அந்தணரிடம் விலைப்பட்ட சந்திரமதியின் புதல்வன், அந்தணர் சொற்படி ஒருதினம் தருப்பை கொய்யும் பொருட்டுச் சிறுவர்களோடு காட்டிற் சென்று தருப்பை யறுக்க, அப்போது விசுவாமித்திரர் ஒரு சர்ப்பத்தைச் சிருஷ்டித்து அவனைக் கடிக்கும்படி செய்தனர். அதனுல், அப் புத்திரன் இறக்க, அவனோடு கூடச் சென்றிருந்த சிறுவர்களால் அவனிறந்தது தெரிந்து சந்திரமதி இரவிற் சென்று அவனைத் தேடியெடுத்துத் தகனஞ் செய்யும்பொருட்டு அரிச்சந்திரன் காத்திருக்கும் சுடுகாட்டிற் சென்று எரிந்த கொள்ளிக் கட்டைகளை யெடுத்தடுக்கி அதன் மேல்புத்திரனை வைத்துத் தீமூட்டி யெரித்தனள். அதைக் கண்ட அரிச்சந்திரன் அவளைத் தன் மனைவியென்றும், இவனைத் தன் புத்திரனென்றும் உணராமல், தனக்குச் செலுத்தவேண்டிய ஈமக் கட்டளைப் பொருள்களைச் செலுத்தாமல் தகனஞ் செய்ததற்காகக் கோபங்கொண்டு சுடலையில் வைக்கப்பட்டிருந்த தன் புத்திரனைக் காலா லுதைத்துத் தள்ளி, அவள் அதன்பொருட்டுப் புலம்புங்காலத்தில் அவளுடைய வார்த்தைகளினுல் அவளைத் தன் மனைவியென்றும், இறந்தவன் தன் புத்திர னென்று மறிந்து அளவிலாத் துயரடைந்து, அதன்மேல் சந்திரமதியை நோக்கித் தனக்குச் சேர வேண்டிய வாய்க்கரிசியை மாத்திரம் வாங்காமல் விட்டுவிடுவதாகவும், வீரவாகுவுக்குச் சேரவேண்டிய காற்பணமும், முழுத் துண்டும் தேடிக் கொண்டுவர வேண்டுமென்றும் சொல்லி அதன் பொருட்டவளைக் காசி நகர்க் கனுப்பினுன். அவள் அவ்வாறு திரும்பிச் செல்லுங் காலத்தில் விசுவாமித்திரர், மாயையால் காசி மன்னன் புத்திரனைக் கொலை செய்வித்து அவள் வரும் வழியில் எறி

யும்படி செய்தனர். அவ்வாறே காசிராஜன் புத்திரன் வழியி லிறந்து கிடக்க, சந்திரமதி கண்டு அவனைத் தன் புத்திர னென்றும், 'நாயோ நரியோ மயானத்திலிருந்து இழுத்துக் கொண்டுவந்து அங்குப் போட்டிருக்கக் கூடும்' என்றுங் கருதி, உடனே அப்புத்திரனை யெடுத்து மடியில் வைத்துப் புலம்பினாள். அச் சமயத்தில் அரசன் காவலர் வந்து அவளைக் கண்டு, "இவளே கொலை செய்தவள்," என்று பிடித்துக்கொண்டு போய் அரசனிடம் விட்டனர். அரசனுக்கு அவள்மீது சந்தேக மில்லையெனினும், விசுவாமித்திருடைய சூழ்ச்சியால் சாக்ஷிக ளெல்லாம் சரியாக ஏற்பட்டுவிட்டமையால் அவளை வெட்டிவிடும்படி தீர்ப்புச் செய்தனன். அவன் கட்டளைப்படியே காவலாளிகள் அவளைக் கட்டி வீரவாகுவினிடம் சேர்க்க, அவன், தன்னுடைய பணிவிடைக்காரனாகிய அரிச்சந்திரனையே வரவழைத்து அவனிடம் சந்திரமதியைக் கொடுத்து மயானத்திற் கொண்டுபோய் வெட்டும்படி கட்டளையிட்டான். அரிச்சந்திரன் அவ்வாறே அவளைக் கொண்டு செல்லுங்காலத்தில் தன் மனைவி யென் றுணர்ந்து ஆறாத் துயருற்று, "எல்லாம் தலைவிதிப்படியே நடக்கும்; என்ன வந்தாலும் நாம் சத்தியத்தைக் கைவிடலாகாது," என் றுறுதிகொண்டு அவளைக் கொண்டுபோய் மயானத்தில் நிறுத்தி வெட்டத் தொடங்கினான். அப்போது விசுவாமித்திரர், "இச் சமயத்திலாவது நம்முடைய வார்த்தைக் கிணங்கமாட்டானா?" என்று கருதி உடனே போய் அவனுடைய கையைப் பிடித்துக்கொண்டு, "அரிச்சந்திரா! இப்போதேனும் ஒரு பொய் கூறு; உனக்கு வந்திருக்கும் இத் துன்பங்களை யெல்லாம் நீக்கிவிடுகின்றேன்," என்று சொல்ல, அரிச்சந்திரன் கோபித்து அவரை விலக்கிவிட்டுத் தன் மனைவியை வாளால் வெட்டினான். அப்போது சிவன் முதலிய தேவர்க ளெல்லோரும் அங்குப் பிரசன்னமாகி, அங்ஙனம் வெட்டாமல் அவனைத் தடுத்து, நடந்த இரகசியமான விஷயத்தை அவனுக்குக் கூறி, இறந்த

பிள்ளைகளையும் எழுப்பிவிட்டு வேண்டிய வரங்களையுங் கொடுத்து மீண்டும் அயோத்திக்குச் சென்று அரசியற்றும்படி கட்டளையிட்டனர். விசுவாமித்திரர் தாம் கூறிய சபதப்படி தம்முடைய தவத்தையும் அவனுக்குக் கொடுத்தனர். பின்னர் அரிச்சந்திரன் விசுவாமித்திரரிட மிருந்து மீண்டும் தன்னுடைய இராஜ்ஜியத்தைப் பெற்று அயோத்திக்குச் சென்று அரசு புரிந்து முடிவில் நற்பதவி பெற்றனன். மேற் கூறியபடி விசுவாமித்திரருடைய சபதம் நிறைவேறுமற்போன சமயத்தில், அரிச்சந்திரனை வீணே வருத்தியதற்காக வசிஷ்டர் கோபித்து விசுவாமித்திரரைக் கொக்காகும்படி சபித்தனர்; விசுவாமித்திரருங் கோபங்கொண்டு வசிஷ்டரைக் கூகையாகும்படி சபித்தனர். அதனால் அவ் விருவரும் உலகம் நடுங்கும்படி சண்டை செய்ய, பிரமதேவர் வந்து அவர்களுடைய சண்டையை நிறுத்தி அவர்களைச் சமாதானஞ் செய்தனர். பின்னர், இக் காரணத்தை முன்னிட்டே விச்வதேவர், விசுவாமித்திரரைக் கோபிக்க அந்த விசுவாமித்திரர் விச்வதேவர்களைக் கோபித்து, மனிதராகப் பிறக்கும்படி சபிக்க அவர்கள் துரோபதையின் வயிற்றில் இளம்பஞ்சபாண்டவராக உதித்திறந்தனர். அரிச்சந்திரன், புத்திரப்பேற்றை வேண்டிச் சிவபூசை செய்து சத்தியைப் பணியாததனால் தன் புத்திரன் அரவாவிறக்கும்படி சாபமடைந்திருந்தபடியால், அவனுடைய புத்திரன் அரவா விறக்கப் பின் சிவனருள் பெற்றுனென்பது புராண கதை.

---

### "ஈவது விலக்கேல்"

என்பதற் கேற்ப, அதனை யனுசரிக்காமல் நடந்தவரடையும் பயனை விளக்கும்

### சுக்கிரன் கதை.

4. மாவலியை மாலுக்கு மண்ணுதவா மற்றடுத்த
காவலினுற் சுக்கிரனுங் கண்ணிழந்தான்—ஆவதனுல்

நன்னீதி புன்னைவன நாதமகி பாவுலகத்
தின்னீ வதுவிலக் கேல்.

(ப - ரை) நல் - நன்மையையுடைய, நீதி - ஒழுங்கையுடைய, புன்னைவனநாத மகிபா-புன்னைவனத் தலைவனாகிய இறைவனே!, ('ஈவது விலக்கேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும் கொடுப்பதைத் தடுக்கலாகாது; அங்ஙனம் தடுத்தால் தீங்கு வரும்; இதனை யுணராமல்) சுக்கிரனும் - அசுர குருவாகிய சுக்கிராசாரியும், மாவலியை - பலிச்சக்கரவர்த்தியை, மாலுக்கு - வாமனனாகி வந்த மகாவிஷ்ணுவுக்கு, மண் - பூமியை, உதவாமல் - கொடுக்காதபடி, தடுத்த - தடை செய்த, காவலினால் - தன்னுடைய பொருந்தாத காவற் செய்கையினாலே, கண் இழந்தான் - ஒருகண்ணிழந்து குருடனாயினான்; ஆவதனால் - இங்ஙனம் ஈகையைத் தடுப்பார்க்குத் தீங்குண்டாகிறபடியினாலே, (இதனை நீயும் உணர்ந்து) உலகத்தின்-இப் பூமண்டலத்திலே, ஈவது - ஒருவர் கொடுக்குந் தருமத்தை, விலக்கேல் - தடுத்து விலக்காதே.

(வி - ரை) மாவலி - மாபலி யென்பதன் திரிபு. சுக்கிரனும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. எல்லாரினுஞ் சிறந்த வல்லமை வாய்ந்த சுக்கிரனுங் கூட, இங்ஙனம் ஈகையைத் தடுத்ததனால் கண்ணிழந்தா னென்றால், மற்றைய ரடையுந் தீங்கைக் கூறவும் வேண்டுமோ என்பது இதனாற் பெறப்படும். உலகத்தின் - இதில் இன் எழனுருபு. நன்னீதி-பண்புத்தொகை. நாதமகிபன் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. ஈவது - தொழிற் பெயர்.

மாபலியின் ஈகையைத் தடுத்துச் சுக்கிரன் கண்ணிழந்த கதையாவது:—விரோசனன் என்னும் அரசனுக்கும், தேவியென் பவளுக்கும் புத்திரனாகப் பிறந்தவனும், பிரகலாதன பேரனு

மாகிய மாவலி யென்பவன், ஒரு யாகஞ் செய்து அதில் குதிரை, இரதம், சிங்கக்கொடி, தனுசு, இரண்டம்பறாத்தூணிகள், ஒரு கவசம் ஆகியவை யுண்டாக இவற்றைப் பெற்று, பிரகலாதன் கவசமொன் றளிக்க அதையு மடைந்து, சுக்கிரனிடம் சங்கமொன் றும் பெற்று இவற்றின் பலத்தால் சுவர்க்க முதலிய விடங்களை யெல்லாம் ஜெயித்து, அரசாட்சி புரிந்து முடிவில் ஒரு சமயம் அசுவமேத யாகஞ் செய்தான். அக் காலத்தில் விஷ்ணுமூர்த்தி காசிபரிடத்து வாமனராக அவதரித்து, மகாபலி, யாகஞ் செய்யும் பிருகுவக்ஷ க்ஷேத்திரத்திற் சென்று அவனைக் கண்டு அவனிடம் "மூன் றடி மண் வேண்டும்," என யாசித்தனர். அவ்வாறே மகா பலி கொடுக்க விசைந்தனன். அப்போது அவனுக்குக் குருவா யிருந்த சுக்கிரன், 'இது விஷ்ணுவின் மாயை,' என்றுணர்ந்து, 'மண் கொடுக்க லாகாது,' என மகாபலியைத் தடுக்க, அவன் கேளா மல், வாமனரின் இச்சைப்படி மண்ணைக் கொடுக்க விசைந்து தாரைநீர் வார்த்தான். அப்போதும் சுக்கிரன் சும்மா விராமல் 'மகாபலி தாழ்மையுறுவான்'என்பதை உத்தேசித்து எப்படியாவது 'அந்தத் தானத்தைத் தடை செய்துவிடவேண்டும்' என்று கருதி, வண்டுருபமாகிக் கெண்டியின் துவாரத்தில் நுழைந்து நீர் விழாத படி அடைத்தான். அந்தச் சூதை யுணர்ந்த வாமனர் ஒரு தருப்பை யெடுத்துக் கெண்டியின் துவாரத்தில் குத்த அது சுக் கிரன் கண்ணிற் பட்டு ஒற்றைக் கண் குருடானது. உடனே அவன் பயந்து விலகினன். பின்னர். வாமனர் தானம் பெற்று, ஈரடி யால் மூவுலகங்களையு மளந்து, ஓரடி வைக்க இடம் பெறுமல், "இன்னு மோரடிக்கிடமெங்கே?"என்று கேட்க, பலிச் சக்கரவர்த் தி, "அடியேன் சிரசுதான் இன்னு மோரடிக்கிடம்," என்று சிரத்தைக் காட்டினன். உடனே வாமனமூர்த்தி அவன் சிரத்திற் பாதத்தை வைத்தழுத்தி அவனைப் பாதாள வுலகத்திற் கொண்டு போய்ச் சேர்த்து, சாவர்ணி மன்வந்தரத்தில் இந்திரனாகும்படி

அவனுக்கு வரங் கொடுத்து, அங்ஙனம் இந்திரனாகும்வரை பாதாள வுலகத்திலே சகல இன்பங்களையும் அனுபவித்துக்கொண் டிருக்கும்படி செய்து, வாமனராகி வந்த விஷ்ணுமூர்த்தியும் துவாரக பாலகராய் அங்கெழுந்தருளினர். இவ் வுலகத்தில் அவன் பாட்டனாகியபிரகலாதனும் அவனுடனிருக்கின்றனன். இராவணன் திக்கு விஜயஞ் செய்த காலத்தில் அந்த மாவலியினுடைய பாதாங்குஷ்டத்தாற் றள்ளப்பட்டான். அவன் என்றும் சிரஞ்சீவியானவன்; விந்தியாவலி யென்பவள் அவனுடைய மனைவி; அவனுக்கு நூறு குமாரர்களுண்டு. அவர்களுக்குள்ளே வாணாசுரன் மூத்தவன். "மகாபலி எலியாயிருந்து சிவாலய திருவிளக்கைத் தூண்டிய புண்ணியத்தால் சக்கிரவர்த்தியாயினான்" எனவும் சிலர் கூறுவர். அவன் பாதாளத் திருக்குங்காலத்தில் தேவகியிடம் உதித்த மைந்தர் அவனிட மிருந்தன ரென்பதும், கண்ணன் கட்டளையிட்ட காலத்தில் அவர்களை யனுப்பினா னென்பதும் தேவிபாகவத கதை.

---

## "உடையது விளம்பேல்"

என்பதற் கேற்ப, உள்ள இரகசியத்தைப் பிறரிடம் சொல்லலாகா தென்பதை யுணராமல், உள்ளது சொல்வாரடையும் பயனுக் குதாரணமாகிய

### சடாயுவின் கதை.

5. உள்ளபடி தன்சிறகி லுண்டுபல மென்றுரைசொல்
விள்ளுஞ் சடாயுமுனம் வீழ்ந்ததுபார்—வள்ளற்
றனபதியே புன்னைவனத் தாட்டாளா வொன்னார்க்
கினதுடைய துவிளம் பேல்.

(ப - ரை) வள்ளல் - (அடுத்து வந்தோர் விரும்பியவற்றைக் கொடுக்கும்) கொடையாளனாகிய, தனபதியே - அளவற்ற திரவியத்திற்குத் தலைவனாகிய குபேரன் போன்றவனே!, புன்னைவன தாடாளா-புன்னைவனத்திலுள்ள நன் முயற்சியை யுடையவனே!, ('உடையது விளம்பேல்,' என்று ஒளவை கூறிய நீதிப்படி எவரும் தம்மிடத்திலுள்ள இரகசியத்தைப் பகைவரிடம் வெளிப்படுத்த லாகாது; அங்ஙனமின்றி வெளிப்படுத்தினால் தீங்கு வரும்; இதனை யுணராமல்) உள்ளபடி-தன்னிடத்தி லிருக்கின்றபடியே, தன் சிறகில் தன்னுடைய இறகுகளில், பலம் உண்டு என்று - வன்மை யிருக்கின்றதென்று, ஒரு சொல் விள்ளும்-ஒரு வார்த்தையைக் கூறிய, சடாயு - (சீதையின் பொருட்டு இராவணனோடு சண்டை செய்த) சடாயு பக்ஷியானது, (அவ்வாறு இரகசியத்தைச் சொன்ன காரணத்தாலே) முன்னம் - முன்னாளிலே, (அந்த இராவணனால் சிறகறுபட்டு) பார் - பூமியில், வீழ்ந்தது - வீழ்ந்து உயி ரிழந்தது; (ஆகையினாலே) ஒன்னார்க்கு - பகைவர்களுக்கு, உடையது - உன்னிடமுள்ள இரகசியத்தை, விளம்பேல் - சொல்லாதே; இன்னாது - அது கெட்டதாகும்.

(வி - ரை) வள்ளற்றனபதி - பண்புத்தொகை. தனபதி-உவமையாகுபெயர். காலவழுவமைதியால், இறந்தகாலங் குறித்து, 'விண்ட சடாயு' என வரவேண்டியது, 'விள்ளுஞ் சடாயு' என வந்தது. 'இன்னாது' என்பது, 'இனது' என விகாரப்பட்டு வந்தது. சடாயு மேலான தன்மையுடைய ராயினும் பக்ஷியாகையினாலே, 'சடாயு வீழ்ந்தது' என்று அஃறிணை முடிபாற் கூறினர் ஆசிரியர்.

சடாயு கதையாவது:— இந்தச் சடாயு, அருணனுடைய புத்திரர்; சம்பாதிக் கிளையவர்; இவருடைய தாயின் பெயர் சேநீ; ஐம்பதாயிரம் வருடங்கள் வரை உயிருட னிருந்தவர். ஒரு சமயம்

சூரியகுலத் தரசனும், அஜன் புத்திரனுமாகிய தசரதன் அரசு புரிந்து வருங்காலத்தில் வேட்டையாடும் பொருட்டுத் தண்டகாரண் யத்திற் சென்று மிருகங்களைக் கொன்று இளைப்படைந்து தன் சேனைகளைத் தூரத்தில் நிறுத்தித் தான் மாத்திரம் ஒரு விருக்ஷத் தடியில் நித்திரை செய்தனன். அந்த மரத்தடியில் தசரதன் காற் பக்கத்தில் ஒரு புற்றிருந்தது. தசரதன் மேற்கூறியபடி நித்திரை செய்யும்போது, நித்திரை மயக்கத்தால் அப் புற்றின்மேல் காலைத் தூக்கிப்போட அப் புற்று உடைப்பட்டுப்போயிற்று; அதனால், அதற்குள்ளிருந்த சர்ப்பமொன்று கோபத்துடன் வெளியேறி நித்திரை செய்யும் தசரதனைக் கடிக்க வந்தது. அப்போது அங்கே ஒரு மரத்தின்மேல் வாசஞ் செய்துகொண்டிருந்த இந்தச் சடாயு வானவர், திடீரெனப் பறந்து வந்து அந்த சர்ப்பத்தை மூக்காற் குத்திக் கொன்றனர். அத் தருணத்தில், சடாயு பாய்ந்த வேகத்தி னாலே, தசரதன் நித்திரை தெளிந்தெழுந்து, சடாயுவைக் கண்டு தனக்குத் தீங்கு செய்ய வந்தவரென் றெண்ணி இவரோடு போர் தொடுக்கும்பொருட்டு வில்லை வளைத்துக் கரத்தி லேந்தினன். அதைக் கண்ட சடாயு, அவன் சமீபத்தில் நெருங்கி, அவனைச் சர்ப்பம் கடிக்க வந்ததையும், அதைத் தாம் கொன்று அவனுக்கு நன்மை செய்யும் விதத்தையும் கூறி அவ் வரசன் கொண்டிருந்த இளைப்பு நீங்கும்படி அவனுக்குக் கனிகளும், நீரும் கொண்டு வந்து கொடுத்து அவனுடைய இளைப்பைப் போக்கித் தம்முடைய வரலாற்றையுங் கூறினர். இவருடைய நற்குணங்களைக் கண்ட வுடனே, தசரதன், "இன்றுமுதல் நீ எனக்குச் சகோதர னாகக் கடவாய்," என்று சொல்லி இவரைத் தழுவி இவருடன் சிநேகமா யிருந்தனன். பின்னர், தசரதன் இறக்க, இவனுடைய புத்திர ராகிய இராமர், இலக்குமணனுடனும் சீதையுடனும் காட்டிற்குச் சென்றிருந்த காலத்தில் இராவணன் வஞ்சனையால் இராமரை ஏமாற்றிச் சீதையை யெடுத்துச் செல்ல, இந்தச் சடாயுவானவர்

அவனுடனே எதிர்த்து யுத்தஞ் செய்து அவனால் சிறகறுப்புண்டு பூமியில் வீழ்ந்து இராமர் வரும்வரை உயிருடனிருந்து அவர் வந்தவுடன் அவருக்கு இராவணனுடைய செய்கைகளை யெல்லாங் கூறி, தசரதனுடைய நிலைமையையும் அவரா லுணர்ந்து அவனுக்குத் தாம் தோழ ரென்பதை விளக்கி இராமர்மீது புத்திரவாஞ்சை காட்டி உயிர் நீங்கி, இராமர் இவரைத் தந்தையாக வெண்ணி ஈமக்கட னாற்ற, அதனால் நற்கதி யடைந்தனர். இவர் இராவணனோடு யுத்தஞ் செய்யுங்காலத்தில்,இவரும் இராவணனும், "நாம் நம்முடைய உயிர் நிலையின் இரகசியத்தைச் சொல்லிக்கொண்டு சண்டை செய்து அதன்மேல் ஒவ்வொருவருடைய வல்லமையையுங் காட்டலாம்," என்று பேசி அவ்வாறே இந்தச் சடாயு தம்முடைய பலம் சிறகிலிருக்கிறதென்று உண்மையைக் கூறிவிட்டதாகவும், இராவணன் தன்னுடைய இரகசியத்தை மறைத்துக் கூறிச் சண்டை செய்து தந்திரமாக இவருடைய சிறகை யறுத்து இவரை வீழ்த்தியதாகவும் ஒரு கதை யொன்று சில வகுப்பாரிடத்தில் கர்ண பாரம்பரையாகத் தமிழ் நாட்டில் வழங்கி வருகின்றது. இக் கதையின் கருத்தை யொட்டியே இச் செய்யுள் அமைக்கப்பட்டிருக்கிறது. ஆனால், இராமாயண புஸ்தகங்களில் பெரும்பான்மையும் இக் கதை காணப்படவில்லை. சரித்திரங்களெல்லாம் ஒவ்வொரு நூல்களிலும் வெவ்வேறு விதமாக மாறுபட்டுக் கிடப்பது இயற்கையா யிருக்கின்றமையால் இவ் விஷயத்தில் உறுதி கூறுதல் எம்போலியர்க் கியலாது.

---

"ஊக்கமது கைவிடேல்"

என்பதற் கேற்ப ஊக்கங் கொண்ட வீமனால் கொல்லப்பட்ட

பகாசூரன் கதை.

6 ஊரி னரபலிக்கா வூர்சகட மேல்வீமன்
தீரன் பகாசூரன் றீதடக்கும்—காரணம்பார்

தேக்குபுகழ் புன்னைவன தீரனே யாவுறினும்
ஊக்க மதுகை விடேல்.

(ப - ரை) தேக்கு - நற்செய்கைகளால் தேடி நிறைக்கின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவன தீரனே - புன்னைவனத்தி லிருக்கும் மனவன்மையுடைய தலைவனே!, ('ஊக்கமது கைவி டேல்,' என்று ஔவை கூறிய நீதிக் கிணங்க எவரும் ஊக்கத்தைக் கைவிட லாகாது; அங்ஙனம் கைவிடாமல் அதனைக் கொள்ளின் எத்தகைய பெருங் காரியத்தையும் செய்து கீர்த்தி பெறலாம்; இதற்கு உதாரணமாகத் தினந்தோறும் ஒரு நரனையும் வேண்டிய ஆகாரத்தையும் பகாசூரனுக்குத் தருவதாகச் சொல்லி அவ்வாறே அனுப்பிவரும் வழக்கத்தைக் கொண்டிருந்த) ஊரின்-ஏகசக்கரபுர மென்னும் ஊராரால் அனுப்பப்படும், நரபலிக்கா-மனிதபலிக்காக, சகடமேல் - வண்டியின்மீது, ஊர் - ஏறி அதனைச் செலுத்திச் சென்ற, வீமன் - வீமசேனன், தீரன் - மகா வீரனாகிய, பகா சூரன் - பகாசூரனுடைய, தீது - தீங்கை, அடக்கும் - ஒடுக்கி அவனையு மழித்து அவ் வூராரையும் காத்ததற்குரிய, காரணம் - எதுவை, பார்-நீ ஆராய்ந்து பார்; (அஃது அவனுடைய ஊக்கமே யாகும்; ஆதலால் நீயும்) யா உறினும் - எவ்வகைத் தீங்குகள் வந்து நேரினும், ஊக்கமது - மனோ தைரியத்தை, கைவிடேல் - கைவிடாதே.

(வி-ரை) ஊரா லனுப்பப்படும் நரபலி யென விரியும். 'ஊர் நரபலி,' என்னும் மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன் றொக்க தொகையானது, உருபு மயக்கத்தால், 'ஊரி னரபலி' என இன்னுருபு பெற்று வந்தது. இன்-சாரியை யெனலுமாம். ஊர் - இடவாகுபெயர். 'அடக்கிய' என்பது, 'அடக்கும்' என வந்தது காலவழுவமைதி; "பிறழவும் பெறூஉமுக் காலமு மேற்புழி," என்பதனை உய்த்துணர்க.

ஏகசக்கரபுரத்திருவேத்திர

பகாசூரன் கதையாவது:—பாண்டவர்களும் குந்திதேவியும் வாரணவதத்திலிருந்து, துரியோதனன் வஞ்சகமாக இயற்றுவித்த அரக்குமாளிகையில் தீப்பற்றிய இரவில் அதைவிட்டு வெளியேறி இடும்பவனத்தைச் சார்ந்த பின்பு, இடும்பன் வந்தெதிர்க்க, வீமன் அவனைக் கொன்று, குந்திதேவி, தருமன் முதலியவர்களுடைய சம்மதத்தின்மேல் இடும்பன் தங்கையாகிய இடும்பியைக் கலியாணஞ் செய்து சாலிகோத்திரமுனி வனத்திற் சேர்ந்து அவள் வயிற்றில் கடோர்க்கஜன் பிறக்க, அவனை இடும்பனுடைய விடத்திலிருந்து அரசாளும்படி அனுப்பிவிட்டு, ஏகசக்கரவனத்திலிருந்த வேத்திரகீய மென்னும் ஏகசக்கரபுரத்தில், முன் வேதவியாசர் கூறிய மந்திர பலத்தால் பிராமண அதிதிகள் வேடந் தாங்கிப் போய்ச் சேர்ந்தார்கள்.

அவ்வாறு போய்ச் சேர்ந்தவுடனே அவ்வூரிலிருந்த வேதியர்கள் அந்த ஐவரையும் கண்டு மிகுந்த மரியாதையுடனே அழைத்துப் போய் அவர்களுக்கு விருந்திட்டு உபசாரஞ் செய்தனர். அதன்மேல் அவர்களுடைய நற்குணங்களைக் கண்டு, முதியரும், மிகுந்த பாக்கியத்தை யுடையவருமாகிய ஒருவேதியர், அவர்களை நோக்கி, "உங்களுக்கு வேண்டிய உணவு முதலியவற்றை நானே தினந்தோறும் உதவி வருவேன்; நீங்கள் என் வீட்டிலேயே இருக்கவேண்டும்," என்று வேண்ட அவர்கள் அவ்வாறே அவர் வீட்டில் தங்கியிருந்தனர். அவ்வாறு அவர்கள் தங்கி அவ் வேதியரைத் தந்தையாகப் பாவித்து அவர்மீது விசுவாசங் கொண்டிருக்குங்காலத்தில், அதற்கு முன்னே ஏகசக்கர வனத்திலிருந்த பகாசுரனென்பவன் தினந்தோறும் அவ் வூரில் பிரவேசித்து ஆடு மாடு முதலியவற்றையும் மனிதரையும் கொன்று தின்று சேதப்படுத்தி வந்ததை முன்னிட்டு அவ்வூர் வேதியர்கள் ஒரு தினம் அவனடியில் வீழ்ந்து வணங்கி, நாடோறும் இரண்டு எருமைக்கடாக்களும், ஒரு வண்டி

நிறைந்த அன்னமும், ஒரு மனிதனும் தருவதாகவும், அங்ஙனம் கணக்கின்றிச் சேதப்படுத்துவதை நிறுத்திவிடவேண்டுமென்றும் சொல்லி, அவன் அதற் கிசைய அவ்வாறே அவனுக்கனுப்பிக் கொண்டு வரும் வழக்கம் ஏற்பட்டிருந்தது. அதனால் தினந்தோ றும் அங்குள்ள ஒவ்வொரு வீட்டுக்காரன் ஒரு வண்டி அன்னத் தையும், இரண்டு எருமைக் கடாக்களையும், அவற்றை ஓட்டிச் செல்வதற்கும் பலியாவதற்கும் ஒரு நரனையும் அனுப்பிக்கொண்டு வந்தார்கள்.

இப்படி அனுப்பி வருங்காலத்தில், பாண்டவர்களும் குந்தி தேவியும் தங்கியிருந்த வேதியர்க்கு, பகாசுரனுடைய உணவனுப் பும் முறை வந்தது. அங்ஙனம் வரவே, அவருக்கு ஒரே புத்திர னிருந்தபடியால், அவனை நரபலியாக அனுப்புதற்கு மனம் பொருந்தாமல் அவருடைய மனைவி, "என்னுடைய ஏகபுத்தி ரனைப் பகாசுரனுக்கிரையாகும்படி எவ்வாறு மனந் துணிந் தனுப்பு வேன்?" என்று துக்கித் தழுதுக்கொண்டிருந்தாள். அதைக் கண்டு குந்திதேவி அந்தப் பார்ப்பனியிடம் சென்று, அவளை நோக்கி, "அம்மணி! நாங்கள் வந்தநாள் முதல் இதுவரை நீ இவ்வாறு வரு ந்தினதில்லையே; இப்போது இவ்விதம் வருந்துவதற்குக் காரண மியாது?" என்று வினவ, அவள் தனக்கு வந்திருக்கும் தீங்கைக் கூறினாள். அதைக் கேட்டவுடனே குந்திதேவி 'அவளுடைய வருத்தத்தை எப்படியாவது நீக்கவேண்டும்'என்றும், தன்னுடைய புத்திரனாகிய வீமனை யனுப்பினால் அவன் பகாசுரனைச் சங்கரி த்து எல்லோருக்குமே நன்மையை யுண்டாக்கக் கூடுமென்றும் கருதி, உடனே அந்தப் பார்ப்பனியின் கண்ணீரைத் துடைத்து, அவர்களுக்குத் தேறுதல் கூறி, அவள் முகத்தை நோக்கி, "தாயே! நீ இதன்பொருட்டு வருந்தவேண்டாம்; எனக்கோ ஐந்து புத்திரர்க ளிருக்கின்றார்கள், அவர்களில் ஒருவனை யனுப்பு

கிறேன். நீ, மற்ற ஆகாரங்களைச் சித்தப்படுத்துவாயாக," என்று கூறினாள்.

குந்தி தேவி இவ்வாறு கூறவே, வேதியன் மனைவி முன்னி லும் அதிக வருத்தத்தை யடைந்து, அதற்குச் சிறிதும் சம்மதி யாமல், குந்திதேவியை நோக்கி, "அம்மா! நீ கூறுவது சரியன்று; எத்தனைப் புத்திரர்க ளிருந்தாலும் ஒரு புதல்வனை யிழக்க, பெற்ற தாய்க்கு மனம் பொருந்துமா? நீ என் பொருட்டாக ஏன் உன் புத்திரனைக் கொடுக்கவேண்டும்? என் தலை விதிப்படி இக் காரியம் நேர்ந்திருக்கின்றது; நான் என் புத்திரனையே அனுப்பு கிறேன்; நீ உன் புதல்வனை யனுப்பவேண்டாம்," என்று கூறி மறுத்தனள். அவள் அவ்வாறு தடை கூறியுங் கேளாமல் குந்தி தேவி வீமனைப்பற்றித் தனக் கேற்பட்டிருந்த தைரியத்தால் மீண் டும் பார்ப்பனியை நோக்கி, "அம்மா! நீ என் வார்த்தையைத் தடை செய்யவேண்டாம்; இதனால், உன் துன்பம் நீங்குவதோடு எல்லோருக்குமே நன்மை யுண்டாகக்கூடும்; என்னுடைய ஐந்து புத்திரர்களிலும் வீமன் என்பவன் திடகாத்திர முடையவன்; மிக்க வலிமை பொருந்தியவன்; அவனை யனுப்பினால் அவன் அந்தப் பகாசூரன் கையிற் சிக்கி யிறக்கமாட்டான்; அவனைக் கொன்று நாசப்படுத்திவிடுவான்; ஒருவாறு என் மகன் அவனுக்குத் தோற்று இறந்துவிடுவானாகில் 'அவனை நான் பெறவில்லை' என்று நினைத் துக் கவலையை ஒழித்துவிடுகின்றேன்; இவ் விஷயத்தில் நீ எவ் வித சந்தேகமுங் கொள்ளாதே; என் வார்த்தைக் கிணங்கு," என்று முகச் செழிப்போடு கூறினாள்.

இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே பார்ப்பனி, "இந்தப் பெண்மணியின் வார்த்தைகளை ஆராயும்போது, ஏதோ நல முண் டாகும்போலத் தோற்றுகிறது; இவளுக்குத் தைரிய மில்லாமல் தன் புத்திரனை யனுப்ப இசையமாட்டாள்; ஆதலால், இவளுடைய

வார்த்தைக் கிணங்குதலே நலம்,'' என்று கருதிக் குந்திதேவியை நோக்கி, ''அம்மணி! எல்லோருக்கும் நலமுண்டாகு மென்று உனக்குத் தெரிய மிருக்கும் பக்ஷத்தில் நீ கூறியபடியே உன் புத்திரனை யனுப்பு,'' என்று கூறிவிட்டுச் சமையல் செய்யும் வேலையிற் பிரவேசித்தாள்; அச் சமயத்தில் அவள் கணவராகிய வேதியரும் வந்தார்; அவரிடத்தும் அவள் நடந்த செய்தியைக் கூறினுள். அவரும் அதற்கிசைந்து சமையல் செய்யும்படி கட்டளையிட அவ்வாறே அவள் தன் சுற்றத்தாரை வரவழைத்து அவர்களை உதவிக்கு வைத்துக்கொண்டு அசுரனுக்கு வேண்டிய ஆகார வகைகளை யெல்லாம் சித்தப்படுத்தினுள். அச்சமயத்தில் குந்திதேவி தருமராஜனிடம் சென்று, வேதியர் வீட்டில் உண்டான துக்கத்தையும், அதனை நீக்கும்பொருட்டுத் தான் வீமனை நரபலிக் கனுப்புவதாக உறுதி கூறினதையும் தெரிவித்தாள். அப்போது தருமராஜன், 'அஃது நல்ல விஷயம்'என ஒரு பக்கத்தில் மகிழ்ந்தும், ஒருபக்கத்தில் தங்களுக்கு மிக்க உதவியாயிருக்கும் வீமனை யனுப்புவதற்குச் சிறிது மனம் பொருந்தாமலும் குந்தியை நோக்கி, ''அன்னையே! அடுத்தோர்க்கு ஆபத்து வந்தால் அதனை நீக்குதல் சிறந்த தருமம்; ஆதலின், நீ வாக்குறுதி செய்தது சிரேஷ்டமான காரியந்தான்; ஆயினும், வீமனே நமக்கு உயிர்த்துணைவனு யிருக்கின்றுன்; அரக்கு மாளிகையில் நெருப்புக் கிரையாய்விடாமல் நம்மைக் காப்பாற்றினுன்; இடும்பவனத்தில் நமக்குத் துயர் புரியவந்த இடும்பனைக் கொன்று நம்மிடரைத் தீர்த்தான்; இத்தகைய அருமையான தம்பியை நாம் எவ்வா றனுப்புவது? போகுமிடத்தில் எப்படியாகுமோ; ஒருவாறு தம்பிக்குச் சேத முண்டானுல், நாம் ஆதரவற்றவர்களாய் விடுமோமே;இதைப்பற்றித்தான் என் மனது சிறிது கவலை யடைகின்றது,'' என்று கூறினுர்.

இவ் வாக்கியங்களைக் கேட்டுக் குந்திதேவி, தருமபுத்திரரை நோக்கி, ''என் அருமைப் புதல்வா! நீ வீமனைப்பற்றிச் சந்தேகங்

கொள்ளவேண்டாம்; அவன் நிச்சயமாகப் பகாசூரனைக் கொன்று வெற்றிபெற்று வருவான்; அவனுடைய வன்மை உனக்கும், உன்னுடைய மற்றத் தம்பியர்க்கும் தெரியாது; எனக்கு நன்றாகத் தெரியும்; வீமன் நாலைந்துமாதக் குழந்தையா யிருக்கும்போது அவனைக் கையில் வைத்துக்கொண்டு நானும் உன்னுடைய தந்தையும் ஓரிடத்தில் தங்கியிருந்த சமயம் ஒரு சிங்கம் அதிக உக்கிரமான கர்ச்சனையோடு எங்களை நோக்கி வந்தது; அதைக் கண்டவுடனே நானும் உன் தந்தையும் பயந்தோடினோம்; அத் தருணத்தில் பயத்தினால் என் கைகள் நடுக்கங் கொண்டபடியால் கையிலிருந்த வீமனைப் போட்டுவிட்டேன்; அவ்வாறு போடவே வீமன் விழுந்த விடம் கற்பாறையா யிருந்தும் அது வீமன் கனத்தைப் பொறுக்க முடியாமல் வெடித்தது; அங்ஙனம் அது வெடித்ததனால் பெருஞ் சப்த முண்டாயிற்று; அந்தச் சப்தத்தைக் கேட்டுச் சிங்கம் பயந்தோடிப் போயிற்று; சிறு குழந்தையா யிருக்கும்போதே வீமன் இவ்வாறு பலமுடையவனா யிருந்தான்; இப்போது அவனுடைய பலத்தைப்பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? நீ எதற்கும் யோசனை பண்ணாமல் அவனை யனுப்பு," என்று கூறினாள்.

அதன்மேல் தருமர் தைரியங்கொண்டு இவ்வாறே சென்று பகாசூரனை ஜெயித்து வரும்படி வீமனுக்கு உத்தரவு கொடுத்தார். வீமன் முந்தியே தனக்கு அந்தக் கட்டளை கிடைக்கவேண்டுமென்று எதிர்பார்த்திருந்தவனாதலால், மேற்கூறியபடி தருமர் உத்தரவு கொடுத்தவுடனே மிகவும் சந்தோஷித்தெழுந்து, குந்திதேவியிடத்தும், தருமராஜனிடத்தும், தம்பியரிடத்தும் விடைபெற்றுக்கொண்டு பகாசூரனுக்கு உணவனுப்புதற்கு அன்று ஏற்பட்டிருந்த அவ் வேதியரிடம் சென்று, "சுவாமி! பகாசூரனுக்கு ஆகாரங்களெல்லாம் சித்தமாய்விட்டனவா? நானும் இதோ வந்துவிட்டேன்; ஏன் இனித் தாமதம்? விரைவில் என்னை யனுப்புந்

கள்!'' என்று தீரமாகக் கூறினான். அவனுடைய வார்த்தைகளைக் கேட்டவுடனே வேதியர், ''இவனுடைய வார்த்தைகளைக் கேட்கும்போதே இவன் அந்தப் பகாசுர னுயிரை வாங்கும் எமன் போலவே தோற்றுகின்றான்; இவனால் நமக்கு நல முண்டாகும்,'' என்று கருதி உடனே அவனை ஸ்நானஞ் செய்வித்து,நல்ல ஆடையாபரணங்களையும், சந்தனம் புழுகு கஸ்தூரி புஷ்பமாலை முதலியவைகளையும் அணிந்துகொள்ளச் செய்து, அவனுக்கு நல்ல போஜன மளித்துத் தாம்பூலமுங் கொடுத்து, ஆசி கூறி வண்டியில் பகாசுரனுக்கு வேண்டிய ஆகார வகைகளை யெல்லாம் ஏற்றி இரண்டெருமைக் கடாக்களைப் பூட்டி அவ் வண்டியைச் செலுத்திக் கொண்டு போகும்படி சொல்ல, அவன் அவ்வாறே நடத்திச் சென்றான். வேதியரும் தம்முடைய சுற்றத்தா ருடனே நகர்ப்புறம்வரை வீமனுக்குப் பின் சென்று பல ஆசிகள் கூறி அவனை யனுப்பி விட்டுத் திரும்பித் தாம் வீடு வந்து சேர்ந்தார்.

பின்னர் வீமன் அந்த வண்டியை நெடுந் தூரம் நடத்திச் சென்று, தனக்குப் பசி யுண்டாகிவிட்டபடியால் ஒரு மலை யடிவாரத்தில் காணுறேடியதைக் கண்டு அவ்விடத்தில் வண்டியை நிறுத்தி, ''நமக்கோ மிகுந்த பசியாயிருக்கின்றது; நம் வசத்திலோ வண்டி நிறைந்த ஆகாரங்களு மிருக்கின்றன; இவற்றை வைத்துக் கொண்டு நாம் என் வருந்தவேண்டும்? அந்த அசுரப்பயலுக்கு நாமா சோறு கொண்டுபோய்ப் போடுகிறது; அவனைப் பின்பு சந்தித்து ஒரு கை பார்த்துக்கொள்வோம்; இப்போ திவ்விடத்தில் நல்ல ஜல மிருக்கும்; அந்தப் பகாசுரன் எவ்விடத்தி லிருக்கின்றா னென்று ஆராய்ந்து பார்த்துக்கொண்டு அவ்வாறே செய்யவேண்டும்,'' என்று தீர்மானித்து அவ்விடத்தி லிருந்த மலையிலேறிப் பார்த்தான். அப்போது பகாசுரன் ஒரு யோசனை தூரத்திற் கப்பால் தங்கியிருந்தான். அவனைக் கண்டவுடனே

வீமன், "சரி! சரி!! பயல் சமீபத்திற்று னிருக்கின்றான்; எப்படியும் 'ஆகாரம் வரவில்லை' என்று தேடி இங்கே வருவான்; அவன் வந்தால் பார்த்துக்கொள்ளலாம்; இப்போது அவன் வருவதற்கு முன்னே ஆகாரத்தைப் புசித்துவிடவேண்டும்," என்று உடனே கீழிறங்கி வண்டியில் பூட்டப்பட்டிருந்த எருமைக் கடாக்களை அவிழ்த்து, 'நீங்கள் பிழைத்துச் செல்லுங்கள்,' என்று துரத்திவிட்டு, அவ் வண்டியை ஆற்றோரத்தில் இழுத்து நிறுத்தி அதிலிருந்த அன்னம், கறி, பால், நெய், தயிர், குழம்பு முதலியவைகளையெல்லாம் ஒன்றாகத் திரட்டிப் பிசைந்து மூன்று உருண்டைகளாக்கி, இரண்டுருண்டைகளைத் தின்றுவிட்டு மூன்றாவது உருண்டையை விழுங்கப்போனான். அதற்குள் பகாசுரன், தனக்கு ஆகாரம் வராமல் தாமதமானதைப்பற்றி வருந்திக் கோபத்தோடெழுந்து வந்து வீமனையும் அவனுடைய செய்கையையுங்கண்டதிசயித்து, "ஆ! ஆ!! நம்முடைய பெயரைக் கேட்டாலும் எமனும் அஞ்சுவான்; அப்படியிருக்க, நமக்கிரையாகும் பொருட்டு வந்த இந்தப் பிராமணச் சிறுவனோ நம்முடைய ஆகாரங்களையும் புசிக்கின்றான்; இவனுக் கென்ன தைரியம்? ஐயோ! ஆகாரங்களெல்லாம் நமக்கில்லாமற் போகின்றனவே," என்று வயிற்றெரிச்சல் கொண்டு வீமனருகே ஓடி வந்து வீமன் முதுகில் கையால் ஓங்கி ஒரு குத்துக் குத்தினான்.

அவ்வாறு குத்தினவுடனே வீமன் அதற்குச் சிறிதும் அசையாமலும், மனத்திற் பயங் கொள்ளாமலும், சாதம் தொண்டையில் விக்கிக்கொள்ளும்போது முதுகில் தட்டி யிறக்குவதுபோல அக்குத்தைப் பாவித்துப் பதறாமல் கையில் வைத்து விழுங்கப்போன மூன்றாவது உருண்டையையும் ஒரு பருக்கைகூடச் சிந்தாமல் வாயிற் செலுத்தி விழுங்கிவிட்டுத் தாகத்திற்கு ஜலமும் பருகிவாய் கைகளைச் சுத்தி செய்துகொண்டு கைகளைத் துடைத்துவிட்டு

மிகுந்த கருவத்தோடு மீசைகளை முறுக்கி எப்பமிட்டுச் செருமிக் கொண்டு அந்தப் பகாசூரனுக் கெதிரே புன்சிரிப்புடன் நின்றான். அப்படி வீமன் நிற்பதைப் பகாசூரன் பார்த்து, "இவன் பிராமணச் சிறுவனல்லன்; அப்படி யிருந்தால் நாம் குத்தின ஒரு குத்தினாலேயே நசுங்கிப்போயிருப்பான்; இவன் அந்தக் குத்தையும் தாங்கிக்கொண்டு நம்மெதிரில் இறுமாப்புடன் நிற்பதால் வேறு வகுப்பைச் சார்ந்தவனாகவே யிருப்பான்; இவனை உயிருடனே விடலாகாது; இப்பொழுதே கொன்று தின்றுவிடவேண்டும்," என்று தீர்மானித்து, வீமனைப் பார்த்து, "அடா பயலே! புலிக்குரிய உணவைப் பூனை புசிக்கலாமா? அவ்வாறு புசித்தாலும் அதற்கு அவ்வுணவு செரிக்குமா? என்னைச் சிறிதேனும் மதிக்காமல், எனக்கு வந்த ஆகாரத்தைப் புசித்தாயல்லவா? இத்தகைய உன்னை இந்த நிமிஷத்திலேயே கொன்று நான் தின்றுவிடுகின்றேன் பார்," என்று கடுங் கோபத்துடனே சொன்னான். இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே, வீமன், அவனை நோக்கி, "அடா பகாசூரா! என்னுடைய வன்மை உனக்குத் தெரியாது; இடும்பாசுரனைப்பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய்; அவனை ஒரு நிமிஷநேரத்திற் கொன்று வெற்றிகொண்டேன்; அத்தகைய எனக்கு நீ எம்மாத்திரம்? என்னை நீ நரனென்று இலேசாக நினையாதே; உனக்குவந்த உணவையெல்லாம் நானொருவனே புசித்திருக்கின்றேன்; இதனாலேயே நான் பலவானென்பது உனக்கு விளங்கவில்லையா? உன்னை விரைவில் மடித்துவிடுவேன்; ஆயினும், உனக்கு உயிர்ப்பிச்சை தருகின்றேன்; நீ இக் காட்டைவிட்டு எங்கேனும் ஓடிப் பிழை," என்று கூற, பகாசூரன் அளவிலாக் கோபங் கொண்டு, "அடா சிறுவா! நீ என்னையா ஓடிப்போகச் சொல்கின்றனை," என்று பற்களை நெறநெற வென்னக் கடித்து மிக்க உக்கிரத்தோடு கையை மடித்து வீமன்மேற் பாய்ந்து குத்தினான். வீமன் அக்குத்தைத் தட்டிவிட்டுப் பகாசூரனுடைய கன்னத்தில் ஓர் அறைஅறைந்

தான். பின்னர் இருவருக்கும் பெரிய சண்டை நடந்தது. முடிவில் வீமன், வீராவேசத்தோடு பகாசுரன்மேற் பாய்ந்து அவனுடைய தலையைத் திருகி யெறிந்து அவனைக் கொன்று அவன் தேகத்தை அவனுக்கு ஆகாரங் கொண்டுவந்த வண்டியையே உடைத்துக் காஷ்டமாக வடுக்கி, அதன்மேல் வைத்து நெருப்பிட்டெரித்து அது சாம்பரானபின் ஒரு குளத்தில் ஸ்நானஞ் செய்துவிட்டு ஏகசக்கரபுரத்துக்குத் திரும்பிவந்தான்.

இவ்வாறு அவன் திரும்பி ஊரிற் போய்ச் சேர்வதற்குள் அவனால் வண்டியிலிருந்து அவிழ்த்துவிட்டுத் துரத்தப்பட்ட மாடுகள் அங்கே போய்ச் சேர்ந்தபடியால் வீமனை யனுப்பிய வேதியன் பயந்து, "ஓகோ மோசம் வந்தது; ஆகாரம் கொண்டு சென்ற சிறுவன் பகாசுரனிடம் போவதற்கஞ்சி மாடுகளை அவிழ்த்துத் துரத்திவிட்டு எங்கேயோ ஓடிப்போய்விட்டான்; அவ்வாறு செய்யாவிட்டால் மாடுகள் வீட்டிற்கு வரக் காரண மில்லை; 'அவன் பகாசுரனை வெல்வான்' என்று நாம் வீணே நம்பி மோசம் போய்விட்டோம்; இனி அரை நிமிஷத்தில் பகாசுரன் பசி பொறுக்காமல் இங்கே வந்து பல தீங்குகள் செய்வான்; இனி இதற்கென்ன செய்வோம்," என்று மனங் கலங்கி ஊராருக்கு இதனைத் தெரிவித்தான். ஊராரும் திகிற்பட்டு, "கூலிக்கு அழ வந்தவள் தாலி யறுப்பாளா? எவனோ ஒரு அன்னியனை யனுப்பினால் ஊராருக்காகத் தன்னுயிரைக் கொடுக்கத் துணிவானோ? அதனால் எல்லோருக்கும் நாசகாலங் கிட்டிவிட்டது," என்று வருந்தினார்கள். இவ்வாறு அவர்க ளெல்லோரும் வருந்தவே அங்கிருந்த குந்திதேவி, தருமராஜன் முதலியவர்கள் அவர்களின் நிலைமையை யுணர்ந்து அவர்களிடம் சென்று, "வேதியர்களே! நீங்கள் வருந்தவேண்டாம்; வீமன் சாமானியனல்லன்; அவன் நிச்சயமாகப் பகாசுரனைக் கொன்றிருப்பான்; அவன், அவ

னோடு சண்டை தொடுத்தற்கு முன்னரே 'எருமைக் கடாக்களை வீணே ஏன் இங்கே நிறுத்தியிருக்கவேண்டும்?' என்று அவற்றை அவிழ்த்து விட்டிருப்பான்; அதனாலேயே அவை இங்கு வந்து சேர்ந்தன; இன்னும் சிறிது நேரத்திற்குள் வீமன், பகாசுரனைக் கொன்றுவிட்டு இங்கே வந்து சேருவான்; நீங்கள் பயத்தை விட்டு விடுங்கள்,'' என்று தைரியங் கூறினார்கள். அதனால் அவர்கள் சிறிது பயம் நீங்க உடனே தருமன் முதலியோர் அவர்களை அழைத்துக்கொண்டு ஊருக்கு வெளியில் வந்து வீமன் வரும் வழியைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அப்படி யிருக்கும்போது மேற் கூறியபடி பகாசுரனைக் கொன்று திரும்பி வந்த வீமன், சிறிது நேரத்திற்குள் அங்கு வந்து சேர்ந்து, தாய், தமையன் முதலியவர்களையும், மற்ற வேதியர்களையும் வணங்கி, பகாசுரனைக் கொன்றுவந்த விதத்தை விவரமாகக் கூறினான். அதன்மேல் எல்லோரும் மகிழ்ந்து வீமனைப் பூஜித்தார்கள். ஒவ்வொரு வீட்டிலும் வீமனுக்கும், குந்தி முதலியவர்களுக்கும் விருந்திட்டு ஆங்காங்குள்ள வேதியர்க ளெல்லோரும் பாண்டவர்களை மகிழ்வித்தார்கள்.

---

## ''எண்ணெழுத் திகழேல்''

என்பதற் கேற்ப, எண்ணெழுத்திகழார் அடையும் பயனை விளக்கும்

## துருவன் கதை.

7. எண்ணரிய கோடுடுக்க ளெல்லா மொருமையதாத்
திண்ணத் துருவர்கையிற் சேர்ந்ததனால்—மண்ணுலகி
போற்றுந் தமிழ்ப்பாகை புன்னைவன பூபாகேள் [ற்
ஏற்றெண் ணெழுத்திக ழேல்.

(ப - ரை) மண் உலகில்-பூவுலகத்தின்கண், போற்றும்-துதிக்கின்ற, தமிழ் - தமிழ்க் கல்வியையுடைய, பாகை - தலைப்பாகை புனைந்த, புன்னைவன பூபா - புன்னைவனத்திற் கிறைவனே!, கேள்-நான் சொல்வதைக் கேட்பாயாக! ('எண்ணெழுத் திகழேல்,' என்று ஒளவை கூறியதற்கேற்ப, எண்ணத்தக்க எழுத்துக்களாலாகிய மந்திரங்களையும் வேதாகம நூற்களையும் இகழாது கற்றுக்கொண்டு அவற்றின் வழி நடப்போர் உயர்ந்த பதவியை அடைவார்; இதன்படி துருவர் நடந்ததை முன்னிட்டு) எண் அரிய - கணக்கிடுவதற் கரியனவாகிய, கோள் - கிரகங்களும், உடுக்கள் - நக்ஷத்திரங்களும் (ஆகிய), எல்லாம் - யாவும், ஒருமையதா-ஒற்றுமையாக, திண்ணம்-வலிமையையுடைய, துருவர் கையில்-அந்தத் துருவருடைய கைவசத்திலே, சேர்ந்ததனால்-சேர்ந்து அவர் உன்னத பதவியை அடைந்ததனாலே, எற்று-நீயும் இக் கொள்கையை ஒப்புக்கொண்டு, எண் எழுத்து-எண்ணத்தக்க எழுத்துக்களாலாகிய மந்திரங்களையும் வேதாகம நூற்களையும், இகழேல்-இகழ்ந்து கைவிடாதே; (அவற்றைக் கைக்கொண்டு அவற்றி னுதவியால் உயர் பதவியை அடைவாயாக.)

(வி - ரை) எண் - அல் விகுதி கெட்ட தொழிற்பெயர்; எழுத்து - ஆகுபெயராய் அதனா லுண்டாகிய மந்திரங்களையும், நூற்களையு முணர்த்திற்று. எண்ணெழுத் திகழாமல் தவ மியற்றியதால் துருவர்: கிரகங்கள், நக்ஷத்திரங்கள் முதலியவைக ளெல்லாம் தம்மிடத்தி லிருக்கும்படியான உயர் பதவியைப் பெற்றுக்கொண்டபடியினாலே, புன்னைவன பூபதியே! நீயும் அங்ஙன மியற்றி நற்பதவி பெறுவாயாக என்பது இதன் கருத்து.

துருவன் கதையாவது:—சுவாயம்புவமனுவுக்குப் பிரியவிரதன், உத்தானபாதன் என்னும் இரண்டு புத்திரர்க ளுண்டானார்கள்; அவர்களுள் உத்தானபாதனுக்குச் சுருசி, சுநீதி என்னும்

இரண்டு மனைவிக ளேற்பட்டிருந்தார்கள்; அவ் விரண்டு மனைவியருள்ளும், சுருசி யென்பவள் உத்தானபாதனுக்குப் பிரிய முள்ளவளாயும், சுநீதி யென்பவள் பிரிய மில்லாதவளாயு மிருந்தார்கள். இப்படி யிருந்த சுருசி யென்பவளுக்கு உத்தமன் என்னும் குமாரனும், சுநீதி யென்பவளுக்குத் துருவன் என்னும் புத்திரனும் பிறந்திருந்தார்கள். இவர்கள் இவ்வாறு பிறந்து பாலியதசையை அடைந்திருக்கும்போது ஒருநாள் உத்தானபாதன் சிங்காசனத்தில் வீற்றிருக்க, அவனுடைய பிரிய மனைவியின் புத்திரனாகிய உத்தமன், அவன் மடியின்மீதேறி உட்கார்ந்திருந்தான். அவன் அவ்வாறிருப்பதைத் துருவன் பார்த்துத் தானும் அங்ஙனமே தந்தையின் மடிமீதிருக்கக் கருதித் தந்தையின் சமீபத்திற் சென்றான். அப்போது உத்தானபாதன் தன்னுடைய பிரிய நாயகியாகிய சுருசி யென்பாள் எதிரி லிருந்தபடியினாலே அவளுக்குப் பயந்து துருவனுடைய விருப்பத்திற் கிடங்கொடா திருந்தனன். அது கண்டு துருவன் முகம் வாடி நிற்க, சுருசி யென்பவளும் சும்மாவிராமல், துருவனை நோக்கி, "சிறுவனே! நீ யேன் வீண் பிரயத்தினம் செய்தாய்? உன் எண்ணம் நிறைவேறாது; அரசனுக் குகந்த என் வயிற்றிற் பிறவாமல் வேறொருத்தியின் வயிற்றிற் பிறந்த நீ இந்த மேலான சிங்காசனத்தில இருக்க நினைப்பது மூடத்தனம்; நீ மன்னனுக்குப் புத்திரனா யிருந்தாலும் இராஜ்ஜியலக்ஷ்மி வாசஞ் செய்கின்ற இந்தச் சிங்காசனத்திற் குரியவனாக மாட்டாய்; என் குமாரனே அதற்கு யோக்கியமானவன்; ஐயோ! நீ, நிர்ப்பாக்கியவதியாகிய சுநீதி வயிற்றிற் பிறந்த தாழ்மையையுங் கருதாமல் இக்காரியத்திற்குப் பிரயத்தனஞ் செய்தாயே; உனக்கிது கிடைக்குமா?" என்று மிகவும் இழிவான வார்த்தைகளைப் பேசினாள்.

துருவன் இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே மனம் பொறாமல் கோபங்கொண்டு கலங்கி உடனே தன் தாயாகிய சுநீதியிடஞ்

சென்று, தந்தை தன்னை ஏற்றுக்கொள்ளாததையும், சுருசி தாழ்மையாகப் பேசினதையும் கூறி வருந்தினன். அதைக் கேட்டவுடன் சுநீதி, துருவனை நோக்கி, "புத்திரனே! சுருசி சொன்னதெல்லாம் வாஸ்தவந்தான்; அவள் சொற்படி நீ அற்பபாக்கிய முள்ளவனே; நானும் புண்ணிய மில்லாதவளே; நான் புண்ணியஞ் செய்தவளா யிருந்தாலும், நீ முன் ஜென்மத்தில் நற்காரியங்களைச் செய்தவனு யிருந்தாலும் அரசனுக்கே பிறந்த உன்னை அவள் இவ்வாறு நிந்திப்பாளா? நாம் புண்ணியஞ் செய்யாதவர்களா யிருப்பதனுற்றன் இவ்வித தாழ்மை யேற்பட்டது; எல்லாம் பூர்வஜன்ம கர்மத்துக்குத் தக்கபடிதான் நடக்கும்; நீ பூர்வ ஜன்மத்தில் நற்கர்மஞ் செய்திருப்பாயானல் அதன்பொருட்டு இப்பிறப்பி லுண்டாகும் நற்பயனை எவராலுந் தடுக்க லாகாது; நீ பூர்வ ஜென்மத்தில் துர்க்கர்மஞ் செய்திருந்தால் அதனுல் இப்போதுண்டாம் துர்ப்பயனை எவராலுந் தடுத்தல் இயலாது; பூர்வத்தில் புண்ணியஞ் செய்தவர்களுடைய புத்திரர்களுக்கே இராஜயோக்கியமான சிங்காசனமும், வெண்கொற்றக்குடையும், இரதகஜதுரக பதாதிகளும் கிடைக்கும்; மற்றவர்களுக்குக் கிடைப்ப தரிதாகும்; சுருசி புண்ணியஞ் செய்தவள்; அதனுல் புருஷன் தன்மேல் இஷ்டமுள்ளவரா யிருக்கப்பெற்று அவள் புத்திரனும் மேன்மை யடைந்தான். நானே புண்ணிய மில்லாதவள்; அதனுல், பேருக்குமாத்திரம் உன் தந்தைக்கு மனைவியாயிருந்து நிர்ப்பாக்கிய முடையவளாயினேன்; என் வயிற்றிற் பிறந்த நீயும் மேன்மையற்றவனுயினுய்; நம்முடைய விதிப்பயன் இப்படி யிருப்பதினுலே நாம் கிடைத்தமட்டும் சுகித்து மனத் திருப்தியோ டிருக்கவேண்டும்; 'மிகுந்த ஐசுவரியத்தை யடையவேண்டும்' என்று விரும்புவையாயின் அதற்குத் தக்க புண்ணியத்தைச் செய்யப் பிரயத்தினப்படு; நீ தர்மாத்துமாவாய் நன்னடக்கைகளை யனுசரித்து, ஜீவகாருணியத்துடன் சர்வஜனமித்திரனுய் நற்கருமங்களைச் செய்து வருவாயாயின், தண்ணீரானது

பள்ளத்திற்போய் நிறைவதுபோல் சம்பத்துக்களெல்லாம் குண வானுன உன்னிடத்தில் வந்து சேரும்,'' என்று கூறினுள்.

இவ்வாறு, தாயார் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுத் துரு வன், மீண்டும் அவளை நோக்கி, ''தாயே! நீ, சுருசி சொன்ன வார்த்தைகளைப் பொறுத்துக்கொள்ளும்படி எவ்வளவு சமாதான மாகிய வார்த்தைகளைக் கூறியபோதிலும் அவளுடைய தூஷண மான வார்த்தைகளால் பிளந்துபோயிருக்கின்ற என்னிருதய மானது அவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை; ஐசுவரியத்தால் செருக் குற்ற அவளாலே பழித்துத் தள்ளப்பட்ட நான், மிகவும் மேலான ஸ்தானத்தைப் பெற முயற்சி செய்கிறேன்; அரசனுக்கு மிக வும் பிரியமுள்ளவளான சுருசி வயிற்றிற் பிறவாமல் உன்னுடைய உதரத்தில் நான் பிறந்தவனுனுலும், என்னுடைய வல்லமையை நீ பார்; உத்தமன், சுருசிக்குப் புதல்வனுனபடியினுலே தகப்ப னது அரசாட்சியைப்பெற் றனுபவிக்கட்டும்; எனக்கது வேண்டிய தில்லை; நான் சுய சக்தியினுலே உன்னத பதவியைப் பெற்றுக் கொள்கின்றேன்; ஒருவர் கொடுக்கும் ஐசுவரியத்தை நான் பெறேன்; என் தகப்பனும் அடைதற்கரிய உன்னத ஸ்தானத்தை நான் தவத்தா லடைகின்றேன்,'' என்று சொல்லித் தாயாரிடம் தவத்திற் செல்லும்பொருட்டு அனுமதி பெற்றுக்கொண்டு விரை வில் தானிருந்த நகரத்தை விட்டு வெளியேறி அதற்குச் சமீ பத்திலிருந்த பூங்காவனத்தைச் சார்ந்தான். அக்காலத்தில் அங்கே எழு முனிவர்கள் முந்தியே வந்து கிருஷ்ணசனம் விரித்து உட் கார்ந்திருந்தார்கள். மேற் கூறியபடி அங்குச் சென்ற துருவன் அவர்களைக் கண்டு, 'இவர்களால் நம்முடைய மனேபீஷ்டம் நிறைவேறும்,' என்றெண்ணி உடனே அவர்கள் சமீபத்திற் சென்று, அவர்களுக்கு நமஸ்காரம் புரிந்து, அவர்களை நோக்கி, ''முனி சிரேஷ்டர்களே! நான் உத்தானபாதனுக்கு, சுநீதியின்

வயிற்றிலே புத்திரனுகப் பிறந்தவன்; என் பெயர் துருவன்; நான் மிகுந்த மனக் கிலேசத்தை யடைந்து அதனை நீக்கிக்கொள்ளும் பொருட்டு உங்கள் திருவடியைச் சார்ந்தேன்; நீங்கள் எனக்கு நேர்ந்ததை விசாரித்து என் மனக் குறைகளை நீக்கி யருள வேண்டும்,'' என்று கூறினுன்.

அந்த முனிவர்கள் இவ்வாறு துருவன் வணங்கிக் கூறிய வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்திலே அவனை நோக்கி, ''இராஜ குமாரனே! நீயோ நாலைந்து வயதுடைய சிறு பாலகனு யிருக்கின் ருய்; இத்தகைய சிறுவனுன உனக்கு மனத்தில் கிலேசம் நேர்ந்த காரணம் யாது? உன் பிதா உயிருடன் அரசாண்டு வாழ்ந்து வரு கிறபடியினுலே உனக்குக் குடும்பபாரத் தொல்லையு மிராது; இஷ்டமான பொருள் கிடைக்கவில்லையே யென்ற விசாரமும் ஏற்படாது; நீ இன்னும் பாலகனு யிருப்பதால் பந்துஜன விரோதம் ஏற்படுவதற்கும் காரண மில்லை; உன் சரீரத்திலோ எவ்வித நோயும் காணப்படவில்லை; இப்படி யெல்லா மிருக்க, உனக்கெதனுல் மனவெறுப்பு உண்டாயிற்று?'' என்று கேட்டார் கள். அதற்குத் துருவன், தன்னுடைய மாற்ருந் தாயாகிய சுருசி யால் தனக்கு நேர்ந்த அவமானத்தையும், அதை நீக்கித் தான் மேலான பதவியை அடைய எண்ணி வந்ததையுங் கூறினுன்.

அப்போது அம்முனிவர்க ளெல்லோரும் ஒருவர் முகத்தை யொருவர் பார்த்து, ''இவனே சிறு பாலகனு யிருக்கின்ருன்; அப்படி யிருந்தும் இந்தச் சிறு வயதிலேயே மாற்ருந் தாயின் நிந் தனை வார்த்தைகளைப் பொறுக்காமல் கோபங்கொண்டு அதற்குத் தக்க காரியத்தைச் செய்யக் கருதி வெளியேறி வந்திருக்கின் ருன்; க்ஷத்திரிய குல வியற்கையைப் பார்த்தீர்களா? இவ்வளவு சிறுவனுக்கு அவமானத்தைப் பொறுக்குந் தன்மை கிடையாது,'' என்று அதிசயித்துப் பேசிப் பின்னர் துருவனைப் பார்த்து,

"இராஜகுமாரனே! நீ இந்த அவமானத்தை நீக்கிக்கொள்ளும் பொருட்டு என்ன செய்ய நினைத்திருக்கிறாய்? அதற்காக நாங்கள் உனக்குச் செய்யவேண்டிய சகாய மியாது?" என்று வினவினார்கள். அவர்கள் இவ்வாறு வினவவே துருவன், அவர்களை நோக்கி, "முனி சிரேஷ்டர்களே! அடியேன் இராஜ்ஜியத்தையாவது, வேறு செல்வங்களையாவது விரும்பவில்லை; இதற்கு முன் ஒருவனாலு மனுபவிக்கப்படாததாயும், அபூர்வமாயும், சகல ஸ்தானங்களுக்கும் உன்னத ஸ்தானமாயு மிருக்கிற ஓர் உயர்ந்த ஸ்தானத்தை யடையவேண்டுமென்று விரும்புகிறேன்; இதனை அடைவேனாயின் என் மாற்றாந்தாய் செய்த அவமானத்தா லேற்பட்ட மனக்கவலை தணியும்; ஆதலின், என்னுடைய இந்த மனோபீஷ்டம் நிறைவேறும்படியான உபாயத்தை நீங்கள் எனக் கறிவிக்க வேண்டும்," என்று கூறினான்.

இதைக் கேட்டவுடனே அந்த சப்த ரிஷிகளுள் மரீசி மகா முனிவர், அவனை நோக்கி, "அரச புத்திரனே! நீ மேலான ஸ்தானத்தைஅடையவேண்டுமாயின் ஸ்ரீ கோவிந்தனுடைய பாதாரவிந்தங்களை மனத்திருத்தி அவனை ஆராதிக்கவேண்டும்; அங்ஙனம் ஆராதியாதவர்களுக்கு அது கிடைக்கமாட்டாது; ஆதலால், அச்சுதனாகிய அவனையே நீ ஆராதனை செய்வாயாக," என்று கூறினர். அத்திரி மகாரிஷி, "இராஜ புத்திரனே! பிரமன் முதலான தேவர்களுக்கும் அதிபதியாகிய மகாவிஷ்ணு எவன்மீது கிருபையைச் செலுத்துவானோ அவனே மேலான பதவியை அடைவான்; ஆதலின், நீ அவனையே ஆராதனை செய்," என்று கூறினர். ஆங்கிரசர், "மன்னன் புதல்வனே! சராசரப் பொருள்களெல்லாம் நிறைந்த எல்லா வுலகங்களும் எவனுடைய வயிற்றி லிருக்கின்றனவோ அந்த லட்சுமி நாதனுடைய பாதங்களை அர்ச்சிப்பாயானால், உன் மனோபீஷ்டம் நிறைவேறுவது திண்ணம்,"

என்று சொன்னார். புலஹ மகாரிஷி, "சோமகனே! எவன் பரப்பிரமமாயும், சர்வவியாபகனாயு மிருக்கின்றானோ, அந்த நீல மேகவர்ணனுடைய நாமங்களை ஜெபித்து அவன் பாதங்களில் அர்ச்சனை புரிவோர் எத்தகைய ராயினும் மோக்ஷத்தை யடைவார்கள்; அப்படியிருக்க அதற்குக் கீழான ஸ்தானங்களை யடைதல் எளிதாகும்; ஆதலின், நீ அதனையே துதிப்பாயாக," என்று கூறினார். கிரது மகாரிஷி, "துருவனே! எவன் யக்ஞியங்களாலே ஆராதிக்கப்படுபவனும், யக்கிய சொரூபியும், எக்கியாதிபதியுமாயிருக்கின்றானோ அந்த விண்டு நாடினால், எய்தக்கூடாத ஸ்தானங்களையும் எய்தும்படி செய்வான்; ஆதலால், அவனுடைய கிருபையைப் பெற்றுக்கொள்வாயாக," என்று கூறினார். புலஸ்தியர், "சுநீதி புத்திரனே! ஆதி காலத்தில் இந்திரன், ஜெகநாதனாகிய விஷ்ணுவை ஆராதித்தே இந்திர பதத்தை யடைந்தான்; ஆதலால், நீ அவனையே பூஜிக்கக்கடவாய்," என்று கூறினார். வசிஷ்டர், "உத்தானபாதன் புத்திரனே! நீ விஷ்ணுமூர்த்தியைப் பூஜிப்பாயானால், அவன் கிருபையால், இதுவரையிலும் எற்படாத நூதனமான ஒரு ஸ்தானத்தை யடைய விரும்பினாலும் அடையலாம்; அப்படியிருக்க இந்த மூவுலகங்கட்கு முட்பட்ட ஒரு மேலான ஸ்தானத்தை யடைவது அரிதாகுமோ? நிச்சயமாக நீ விரும்பிய ஸ்தானத்தை யடைவாய்; மகா விஷ்ணுவையே ஸ்தோத்திரஞ் செய்," என்று கூறினார்.

இவ்வாறு சப்த ரிஷிகளுங் கூறவே, துருவன் அவர்களை வணங்கி, அவர்களுடைய திருமுகத்தை நோக்கி, "முனிசிரேஷ்டர்களே! உங்கள் கட்டளைப்படியே செய்கின்றேன்; நீங்கள் இப்போது நான் ஆராதிக்கவேண்டிய கடவுளைத் தெரிவித்தீர்கள்; அந்தப் பகவான் மனமிரங்கிக் கிருபை செய்யுமாறு நான் என்னுடைய நாவினாலே ஜெபித்து மனதினாலே தியானிக்கத் தக்க

மந்திரத்தையும், அவனை ஆராதிக்க வேண்டிய முறைமையையும் இச்சிறியேனுக் குபதேசித் தருளவேண்டும்,'' என்று விண்ணப் பஞ் செய்துகொண்டான். அதற்கு முனிவர்கள், ''துருவனே! அந்த விஷ்ணுவை ஆராதிக்க வேண்டிய விதத்தையும் மந்திரத் தையும் கூறுகின்றோம்; கேட்பாயாக; முதலில் பகவத் பக்திக் குப் புறம்பாகியஉலக ஆசைகளைப் பற்றற நீக்கி மனதைப் பரி சுத்தமாக்கிப் பின்னர், அதனை அந்தப் பகவானுடைய பாதங்க ளில் சேர்த்து, வேறு சிந்தனை சிறிதுமின்றி, 'வியஷ்டி சம ஷ்டி ரூபமாயும், பிரகிருதி புருஷனும் சரீரமாயும் விளங்குகின்ற சுத்த ஞானமயனான வாசுதேவனுக்கு நான் தெண்டன் சமர்ப் பிக்கின்றேன்,' என்னும் பொருளைத் தருகின்ற துவாதசாக்ஷர மகா மந்திரத்தை ஜெபிக்கவேண்டும்; இந்த மந்திரத்தை ஜெபி த்ததனாலேயே, மகா விஷ்ணுவானவர் உன்னுடைய பிதாமக னான சுவாயம்புவமனுவுக்கு, அவர் விரும்பியபடியே மூவுலகங் களினுங் கிடைக்காத பெரிய ஐசுவரியத்தைக் கொடுத்தருளினார்; ஆதலால், நீயும் நாங்கள் கூறியபடியே மனதை ஒரு வழிப்படு த்தி இந்த மந்திரத்தை ஜெபித்து விஷ்ணுவை ஆராதிப்பாயாக,'' என்று கூறி யருளினார்கள்.

அதன்மேல் துருவன் மிகுந்த சந்தோஷத்தை யடைந்து, சப்த ரிஷிகளையும் வணங்கி அவர்களிடம் விடை பெற்றுக்கொ ண்டு அந்த வனத்தை விட்டுப் புறப்பட்டு, மதுவென்கிற அசு ரனுக் கிருப்பிடமாயிருந்ததனாலே மதுவன மென்னப்பட்டதும், சத்துருக்கனன், அந்த மனுவின் புத்திரனான இலவணாசுரனைக் கொன்று மதுராபுரியாகச் செய்யப்பட்டதும், கண்ணபிரானுக் கிருப்பிடமானதும், யமுனை தீரத்தி லுள்ளதுமாகிய மதுவனத் தைச் சார்ந்து, மரீசி முதலிய சப்த ரிஷிகளும் தனக் குபதேசித்த படியே மகாவிஷ்ணுவைத் தன்னுடைய இருதய கமலத்தில் நிறு

த்தி அவருடைய மந்திரத்தைத் தியானித்துக்கொண்டு நிஷ்டையிவிருந்தான்.

துருவன் இப்படி யோகத்தி விருக்கவே, ஹரிவாசுதேவனாகிய பகவான், அவனுடைய இருதயத்தில் எழுந்தருளினார்; இவ்வாறு துருவனுடைய இருதயத்தில் மகாவிஷ்ணு எழுந்தருளியபடியினாலே அவன் மிகுந்த பாரமுடையவனாக, எல்லாவற்றையும் தாங்கும் பூமிதேவியும், அந்தத் துருவனைச் சுமக்க முடியாமல் சங்கடப்பட்டாள்; அக்காலத்தில் துருவன், ஒரே நிலையிலிருந்ததுமல்லாமல், வலக்காலை மடக்கி இடக்காலைப் பூமியிலூன்றி நின்றும், இடக்காலை மடக்கி வலக்காலை யூன்றிநின்றும், ஒவ்வொரு பாதத்தின் கட்டை விரலை யூன்றிநின்றும் யோகம் புரியத் தலைப்பட்டான்; அவ்வாறு அவன், இடக்காலை யூன்றி நிற்கும்போது பூமி இடப்பக்கத்திற் றாழ்ந்தது; வலக்காலை யூன்றி நிற்கும்போது பூமி வலப்பக்கத்திற் சாய்ந்தது; காற்பெருவிரலை யூன்றி நிற்கும்போது பூமியானது தன்னிடத்துள்ள மலைகளுடனே நடுக்கங்கொண்டது; பெரிய நதிகளும் சாகரங்களும், கலங்கின; அதனால் மனிதர்களும் தேவர்களும் கலக்கத்தை யடைந்து அளவற்ற துன்பமுற்றார்கள்.

இவ்வாறு உலகத்திற் றுன்ப முண்டாகவே அந்த மனுவந்தரத்திலிருந்த யாமரென்னுந் தேவர்கள் மனங் கலங்கி இந்திரனுடனே கூடி, 'துருவனுடைய யோகத்திற் கிடையூறு செய்யவேண்டும்' என்று ஆலோசித்தார்கள். அந்த ஆலோசனைக் கிணங்கி இந்திரன் விகார ரூபமுடையவைகளும், பயங்கரத்தை யுண்டாக்கத்தக்கவைகளுமாகிய கூசுமாண்டங்க ளென்னும் பூதங்களை, துருவனுடைய தியானத்தைக் கலைத்துவிடும்படி அவனிட மனுப்பினான். அவைகள் அவ்வாறே வந்து பலவித மாயைகளைச் செய்யத் தலைப்பட்டு, அவற்றுள் ஒன்று, துருவன் தாயாகிய சுநீதியின் வடிவத்

தைக் கொண்டு துருவனுக் கெதிரே தோன்றி, "அப்பா மகனே! இந்தக் கடுந் தவத்தினால் சரீரத்துக்குக் கேடு வரும்; ஆதலால், இதனை நிறுத்து; நான் நெடுங்காலந் தவஞ் செய்து உன்னால் சௌக்கியத்தை யடையலாமெனக் கருதி உன்னைப் பெற்றும் நீ என்னை அனாதை யாக்கி யலையவிட்டு இவ்வாறு வந்து என்னைச் சிறிதும் கவனியாமல் தவஞ் செய்கின்றாயே; நான் இவ்வாறு வருந்துவது தகுதியாகுமா? மகனே! எனக்கு உன்னையன்றி வேறு யார் துணை? ஐயோ! நீயோ ஐந்து வயதுடைய பாலகன்; உனக்கு இக் கடுந்தவம் பொருந்தாததாகும்; உலகத்திலிருந்து பல இன்பங் களையு மனுபவிப்பதை விடுத்து ஒருவித சுகமு மில்லாத இந்தக் கடுந்தவத்தை யேன் புரிகின்றனை? இந்த வீண் பிரயாசையை விட்டு மனதைத் திருப்பு; பாலகனே! இன்னும் கேள்; இதுவோ உனக்கு விளையாட்டுப் பருவம்; இதன்மேல் வேதாத்தியயனஞ் செய்யுங் காலம் வரும்; அதன்மேல் போகபாக்கியங்களை யனுப விக்கும் காலம் வரும்; அதற்குப் பின் தவஞ் செய்தற்குரிய காலம் வரும்; அந்த அந்தப் பருவங்களுக் குரியவைகளைச் செய்தன்றோ முடிவில் தவத்தைச் செய்யவேண்டும்; நீயோ இயற்கைக்கு விரோதமாக விளையாட்டுப் பருவத்திலேயே எவருஞ் செய்தற்கரிய கொடுந் தவத்தைச் செய்யத் தலைப்பட்டுவிட்டாய்; இது கிலேசத் திற் கிடமான காரியம்; எனக்குச் சந்தோஷஞ் செய்வதே நீ இப் பருவத்தில் கைக்கொள்ளத் தக்க காரியம்; அதை விட்டு நீ எனக்குக் கவலை யுண்டாக்குகின்றாய்; இது நியாயமாகாது; உட னே இத் தவத்தை விட்டு என்னுடன் வந்துவிடு; அப்படி நீ வரா விட்டால், உன்னெதிரிலேயே என் பிராணனை விட்டுவிடுவேன்," என்று பலவிதமான மாயாவார்த்தைகளைக் கூறிக் கண்ணீர் வடித் துக்கொண்டு நின்றது. அதைக் கண்டும் துருவன் சித்தங் கலங்க வில்லை; தன் தவநிலையை விட்டுச் சிறிதும் அசையாம லிருந்தான். அப்படி யிருக்கவே பின்னரும் சுநீதியாக வந்த அப்பூதம், துருவ

னைப் பார்த்து, "என்னருமைப் புதல்வனே! கோரரூபமான ராக்ஷதர்கள் ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு உன்னைக் கொல்லும் பொருட்டு இதோ வருகின்றார்கள்; இப்போதாவது தவத்தை விட்டு என்னுடன் ஓடிவந்துவிடு," என்று சொல்லிப் பயந்தோடு பவளைப்போல மறைந்தோடிப்போயிற்று. அஃதவ்வாறு சென்றவுடனே அது கூறியதற்கேற்ப, வேறு சில பூதங்கள், இராக்ஷதர்களைப்போன்ற வடிவெடுத்துப் பல ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டு அக்கினிச் சுவாலை பொருந்திய முகங்களை யுடையவனவாய்த் துருவனுக்கு முன்னே தோன்றி, "இவனை வெட்டிக் கொல்லுங்கள், எடுத்து விழுங்குங்கள்,' என்று கர்ச்சனை செய்தன; வேறு சில பூதங்கள் அன லெழும்புகிற முகங்களோடு கூடிய நரிகளைப் போன்ற வடிவெடுத்து வந்து அத் துருவனுக்கு நான்கு புறத்திலும் சுற்றிக் கூக்குரலிட்டன; பின்னும் சில பூதங்கள், சிங்கமுகங்களும், ஒட்டகமுகங்களு முடையவைகளாய் வந்து பயங்கரமான தொனியைச் செய்துகொண்டிருந்தன; இவ்வாறு அவைக ளெல்லாம் வந்து பலவாறு பயமுறுத்தியும், துருவன் மகாவிஷ்ணுவினுடைய பாத கமலங்களில் பற்றிய இருதய முடையவனு யிருந்தபடியினாலே அவைகளிட்ட பயங்கர தொனிக ளெல்லாம் அவன் செவிகளுக் கேறவில்லை; அதனால், அவனுடைய யோகமுங் கலையவில்லை; நிலையான சித்தத்துடனே ஸ்ரீமந் நாராயணனைத் தியானித்த வண்ணமாகவே யிருந்தான்.

இவ்வாறு செய்த தங்களுடைய பிரயத்தனங்கள் பலிக்காமற் போகவே, தேவர்க ளெல்லாம், "இனி, துருவனுடைய தவ மிகுதியினாலே என்ன தீங்கு விளையுமோ," என்று பயந்து, 'அத் தவத்தை நிறுத்துதற்கு மேலும் ஏதேனும் ஒருபாயத்தைச் செய்ய வேண்டும்' என்று கருதி, விஷ்ணுமூர்த்தியிடம் சென்று அவரை வணங்கி, அவருடைய திருமுகத்தை நோக்கி, "தேவாதி தேவ

னே! துருவனுடைய தவத்தின் மிகுதியாலே, உலகமெல்லாம் நடுங்குகின்றது. அதனால் மானிடர்களும் தேவர்களும் கலங்குகின்றார்கள்; மேலும், அவனுடைய தவம் நாளுக்கு நாள் விருத்தியடைந்து வருகின்றபடியாலும், அவன் மேலான ஒரு ஸ்தானத்தைப் பெறக் கருதியிருப்பதாலும்; 'இந்திரன், குபேரன், வருணன், சூரியன், சந்திரன் ஆகியவர்களுடைய அதிகாரங்களிலே எதைப் பெற்றுக்கொள்வானோ?' என்ற சந்தேகம் எங்களுக்கேற்பட்டிருப்பதால் நாங்களும் மிகுந்த கலக்கத்தை யடைகின்றோம்; ஆதலால், நீர் கிருபை செய்து அவனுடைய தவத்தை நிறுத்தி எங்களுடைய மனக் கவலையை நீக்கவேண்டும்," என்று விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள். அவர்கள் இவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடனே விஷ்ணுமூர்த்தி அவர்களைக் கிருபையோடு நோக்கி, "தேவர்களே! துருவன், நீங்கள் கூறிய அதிகாரங்களுள் ஒன்றையும் விரும்பவில்லை; அவன் வேறொன்றை விரும்பியிருக்கின்றான்; அஃதெனக்குத் தெரியும்; அதைப்பற்றி நீங்கள் சந்தேகமும் கவலையும் அடையவேண்டாம்; நீங்கள் சந்தோஷமாக உங்களுடைய வாசஸ்தானங்களுக்குச் செல்லுங்கள்; நான் அவன் விரும்பிய வரத்தைக் கொடுத்து அவனுடைய தவத்தை நிறுத்திவிடுகின்றேன்," என்று கூறினார். அதன்மேல் தேவர்கள் எல்லோரும் வணங்கி அவரிடம் விடை பெற்றுக்கொண்டு தங்கள் தங்களுடைய ஸ்தானங்களுக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

பின்பு, ஸ்ரீமந் நாராயணமூர்த்தி, துருவனுடைய உறுதியான தியானத்திற்கு மன மகிழ்ந்து நான்கு திருப்புயங்களோடு கூடிய திருமேனி யுடையவராய் அவனுக்கு முன்னே தோன்றி, "உத்தானபாதனுடைய புத்திரனே! உனக்கு மங்கள முண்டாகுக; நீ உலக ஆசையை நீக்கிச் சுத்த சித்தனாய் என்னை உறுதியுடன் தியானித்துச் செய்த தவத்திற்காக நான்மிகவும் மகிழ்ந்தேன்; உனக்

இஷ்டமான வரத்தைக் கொடுக்கும்பொருட்டே இப்போது உனக்கெதிரே தோன்றினேன்; ஆதலால், நீ விரும்பிய வரத்தைக் கேள்,'' என்று கூறியருளினர். இவ்வாறு கூறியதைக் கேட்டவுடனே துருவன் கண்ணைத் திறந்து, தான் தியானித்த வடிவமாகவே விஷ்ணுமூர்த்தி, பஞ்சாயுதங்களை யுடையவராயும், கிரீடமும் துளபமாலையும் கவுஸ்துவமும் பீதாம்பரமும் உடையவராயும் எதிரே நிற்கக் கண்டு திடீரென்றெழுந்து, சாஷ்டாங்கமாகப் பூமியிலே விழுந்து நமஸ்கரித்து, புளகாங்கித முடையவனாய்ப் பயபக்தியுடனே அந்த விஷ்ணுமூர்த்தியை ஸ்தோத்திரஞ் செய்யக் கருதி, தான் அவரைத் துதிசெய்யும் விதத்தை யறியாதவனாதலால், ''இந்த பகவானை எந்த வாக்கியங்களைச் சொல்லித் துதிசெய்வேன்?'' என்று மனங் கலங்கி அவரையே சரணமாக வடைந்து, ''சுவாமி! அடியேன் தவத்தை யுகந்து என் முன்னே பிரசன்னமாயினீர்; இதன்பொருட்டு நான் உம்மைத் துதிக்க நினைக்கின்றேன்; ஆயினும், எனக்குச் சிறந்த ஞானம் ஏற்படாததனால் உம்மை இன்ன விதமாகத்தான் துதிப்பதென்பதை யுணராமல் திகைக்கின்றேன்; ஆதலால், இப்போதெனக்கு உம்மை ஸ்தோத்திரஞ் செய்யத்தக்க ஞானத்தைக் கொடுத்தருளவேண்டும்,''என்று விண்ணப்பஞ் செய்தான். அவன் அவ்வாறு பிரார்த்திக்கவே ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி அவனுடைய முகத்தைப் பரிசித்தருளினர். அங்ஙனம் அருளவே அவனுக்கு அப்பொழுதே ஞானோதய முண்டாயிற்று.

அவ்வாறு ஞான முண்டாகவே அந்தத் துருவன், அவருடைய பாதங்களில் மீண்டும் வணங்கி, அவரை நோக்கி, அவருடைய எண்ணற்ற மகத்துவங்களையும், தெய்வீக குணங்களையும் செய்கைகளையும், இலட்சணங்களையுங் கூறி ஸ்தோத்திரஞ் செய்தான். அங்ஙனம் அவன் பலவாறு துதிசெய்து நிற்கவே, ஸ்ரீவிஷ்ணுபகவான் கிருபையுடனே அவனை நோக்கி, ''இராஜபுத்திரனே! உன்னு

டைய தபோமகிமையினலே நீ என்னுடைய தரிசனத்தைப் பெற்ருய்; நான் பிரத்தியக்ஷமானல் என்னை நோக்கித் தவஞ் செய்தவர்களுக்கு அவர்கள் விரும்பிய யாவுங் கைகூடும்; ஆதலால், நீ விரும்பிய வரத்தைக் கேள்; நான் தருகின்றேன்,'' என்று கூறினர். இதைக் கேட்டவுடனே துருவன் ஆனந்தக்கடலுள் மூழ்கி, அஞ்சலியஸ்தனய் நின்று, அவரை நோக்கி, "சுவாமி! உனக்கு, அடியேன் நினைத்திருப்பது தெரிந்தே யிருக்கும்; ஆயினும், நான் அதைக் கூறவேண்டுமென்று நீ கட்டளை யிட்டபடியினலே என் மனே விருப்பத்தைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக; என்னுடைய மாற்ருந் தாயாகிய சுருசியென்பவள், என்னை நோக்கி, 'நீ, அரசனுக்கு விருப்ப முள்ளவளான என் வயிற்றிற் பிறவாதபடியினலே இராஜ யோக்கியமான சிங்காசனத்தி லிருக்கத் தகுந்தவனகமாட்டாய்' என்று என்னை யிகழ்ந்தனள்; அதனல் அவள் பார்த்து நாணும்படியான உயர் பதவியை அடையவேண்டுமென்று கருதியே தவ மியற்றினேன்; ஆதலால், எனக்கு நீ, ஜகத்துக்கு ஆதாரமாயும், சர்வோத்தமமாயு மிருக்கின்ற உன்னத ஸ்தானத்தைக் கொடுத்தருளவேண்டும்,'' என்று கூறினன்.

இந்தவார்த்தைகளைக் கேட்டவுடனே வாசுதேவன் மகிழ்ந்து, துருவனை நோக்கி, "மன்னன் புதல்வனே! உன்னிஷ்டப்படியே உனக்கு நீ விரும்பிய உன்னத பதவியைக் கொடுக்க மன மிசைந்தேன்; நீ இங்ஙனம் பெறுவதற்கு வேருெரு காரணமு மிருக்கின்றது: நீ முந்தின ஜன்மத்திலே ஒரு வேதியனகப் பிறந்து, மாதா பிதாக்களுக்குத் தொண்டு செய்துகொண்டு தர்மந் தவருது ஏகாக்கிர சித்தமுடையவனய் என்னை யாராதனை செய்துகொண்டிருந்தாய்; அங்ஙனமிருந்து சில தினங்கள் கழிந்தபிறகு உனக்கு யௌவன வயதுவந்த சமயத்தில், சகல போகபாக்கியங்களை யனுபவிப்பவனும், சர்வாபரணலங்கிருதனும் சுந்தரம் பொருந்திய தேகத்

தை யுடையவனுமாகிய ஓர் இராஜ குமாரன் உன்னோடு சிநேக மானான்; அப்போது நீ அவனுடைய ஐசுவரியங்களைப் பார்த்து ஆசைப்பட்டு, 'நாமும் இராஜ புத்திரனாகப் பிறந்து இவற்றை யனுபவிக்கவேண்டும்,' என்று விரும்பினாய்; அதனாலேயே நீ உத்தானபாதனுக்குப் புத்திரனாகப் பிறந்தாய்; என்னைப் பூஜியாதவர்கள், ஜகமெல்லாம் போற்றத்தக்க சுவாயம்புவமனு வமிசத்திலே பிறப்பதரிது; அங்ஙனம் பிறந்தும், நீ உன்னத பதவியைப் பெறுவதற்காகவே சுருசி யென்பவள் உன்னை யிகழ்ந்துரைக்க நீ அதைப் பொறுமல் இங்ஙனம் வந்து தவஞ் செய்தாய்; ஆகையினாலே, நீ மூன்று லோகங்களுக்கு மேற்பட்டதாயும், சகல தாராகிரக நக்ஷத்திரங்களுக்கும் ஆதாரமாயும், சித்தாதிகள் சஞ்சரிக்கின்ற ஸ்தானங்களுக்கும் மேற்பட்டு விளங்குவதாயுமுள்ள உன்னத ஸ்தானத்தை யடைந்து என்றும் சுகத்துட னிருக்கக்கடவாய்; தேவர்களிற் சிலர், சதுர்யுகமுடிவு வரையிலும், சிலர் மனுவந்தரமுடியும் வரையிலுந்தா னிருப்பார்கள்; அதிககால மிருக்கமாட்டார்கள்; நீயோ, என்னுடைய அனுக்கிரகத்தினாலே, கற்பகாலம் வரையிலும் அந்த உன்னதமான ஸ்தானத்திலே என்றும் சௌக்கியத்தோ டிருப்பாய்; உன்னைப் பெற்றவளாகிய சுநீதியும், திவ்விய விமானத்திலேறி நக்ஷத்திர வடிவமாகக் கற்பாந்தம் வரையிலும் உன்னுடைய சமீபத்திலேயே பிரகாசித்துக்கொண்டிருப்பாள்; உன்னைக் காலையிலும் மாலையிலும் மனவுறுதியுடனே ஸ்தோத்திரஞ் செய்பவர்கள் மகா புண்ணியத்தை யடைவார்கள்'' என்று வரங் கொடுத்தருளி, வைகுண்டத்துக் கெழுந்தருளினார். அதன்மேல் துருவன், அந்த விஷ்ணுமூர்த்தி கொடுத்த வரத்தின்படியே எல்லாப் பதவிகளுக்கும் மேற்பட்டு விளங்கும் உன்னத ஸ்தானத்தை யடைந்தான். மாதா பிதாக்களுக்குத் தொண்டுசெய்த காரணத்தாலும், துவாதசாக்ஷர மகாமந்திர ஜெபத்தின் மகிமையாலும், துருவன் இவ்வாறு விஷ்ணுமூர்த்தியிடம் வரம் பெற்று மேலான ஸ்தானத்

தை யடைந்தது கண்டு அசுரகுருவான சுக்கிரனும், மனக்களிப் படைந்து துருவன்மீது சில சுலோகங்களைக் கூறி அவனைப் புகழ்ந் தார். இந்தத் துருவன் மேற்கூறியபடி பெற்ற ஸ்தானம், சப்த ரிஷிகளின் மண்டலத்திற்கு மேல் பதின்மூன்றுலக்ஷம் யோசனை தூரத்தி லுள்ளது. இவன் வரம்பெற்றுத் தவநிலை நீங்கியபின்னர், மீண்டு தன் நகரத்திற்கேகித் தாய்தந்தையரைக் கண்டு வணங்கி மணஞ்செய்து (உசு௦௦௦) வருடங்கள்வரை அரசுபுரிந்து தன் மாற் றாந்தாயின் புத்திரனாகிய உத்தமனை யக்ஷர் கொன்ற காலத்தில், அவர்களுடனே போர் செய்து மனுவா லுபதேசம் பெற்றுப் பின் னரே தான் பெற்ற உயர்ந்த ஸ்தானத்திற் போய்ச் சேர்ந்தான். பிரமி, இளை என்பவர் இவனுடைய பாரியர்; கல்பன், வற் சதன் என்பார் இவனுடைய புத்திரர்.

---

## ஏற்பதிகழ்ச்சி”

என்பதற் கேற்ப, யாசித்தல் குறைவா மென்பதை விளக்கும்

### திருமால் சரித்திரம்.

8. மாவலிபான் மண்ணிரக்க மாதவனே வாமவுரு
ஆமென்றான் மற்றவர்க்கஃ தாகுமோ—மூவுலகில்
பேர்பரவும் புன்னைவனப் பேரரசே யெவ்வகையாற்
சீர்பெறினு மேற்பதிகழ்ச் சி.

(ப - ரை) மூவுலகில் - திரிலோகங்களினும், பேர் பரவும் - தன்னுடைய கீர்த்தியானது வியாபிக்கின்ற, புன்னை வனம் - புன்னைவனமென்னுந் தலத்திற்கு, பேர் அரசே - பெரிய நாயக னே! ('ஏற்பதிகழ்ச்சி'என்று ஔவை கூறியபடி யாசித்தல் எவர்க் கும் இழிவாம்; எத்தகையராயினும் யாசிக்கப்புகின் அவர் தம் பெருமை குன்றித்தான் யாசிக்கவேண்டும்; இதுபற்றியே) மாதவ

னே-உலகத்தில் 'நெடியோன்' என்று கூறத்தக்க பெரிய வடிவந் தாங்கிய இலக்குமி நாயகனான மஹாவிஷ்ணுவே, மாவலிபால்-மஹாபலிச் சக்கரவர்த்தியினிடம், மண் இரக்க - மூன்றடி மண்ணை யாசிக்கும் பொருட்டு, (இத் தொழிற்கு) வாம உரு-குறு கிய வடிவமே, ஆம் என்றான் - தக்கதாகுமென்று சொல்லி அவ் வடிவத்தையே தாங்கிச் சென்றான், (அவனே அவ்வாறு யாசித்த லால் குறைவடைந் திருக்கும்போது) மற்றவர்க்கு - மற்ற சாதா ரண மனிதர்க்கு, அஃது ஆகுமோ அத் தொழில் செய்யத் தகுவ தோ? (அஃதவர்க்கு அளவற்ற குறைவை யுண்டாக்கும் ஆத லால்,) எவ் வகையால் - எந்த விதத்தினாலே, சீர் பெறினும் - யா சித்து வரும் பொருளால் சிறப்படைவதா யிருந்தாலும், எற்பது - யாசித்தல், இகழ்ச்சி - இழிவாம், (ஆதலால், நீ எக் காரணத்தை முன்னிட்டும் எதையும் எவரிடத்தும் யாசித்தல் செய்யாதே; கொ டுப்பதையே விரும்பு).

(வி - ரை) 'மாவலிபால்' என்பதில், பால் - ஏழனுருபு. 'மாதவன்' என்பதற்கு 'இலக்குமி நாயகன்' என்பது பொருள்; மா - இலக்குமி, தவன் - நாயகன். 'மாதவனே' என்பத னீற்றி லுள்ள ஏகாரம் உயர்வுசிறப்புப் பொருளது; இது, 'பிரிநிலைவினா வெண்....' என்னும் ஏகார விடைச்சொற்பொருட் சூத்திரத்து ளடங்காதெனினும் புதியன புகுதலாற் கொள்ளப்பட்டது. 'ஆகு மோ' என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளது. அரசு - பலர்க் கும் நாயகமாயிருக்குந் தன்மை; இஃது ஆகுபெயராய் அதனை யுடையவனை யுணர்த்திற்று சீர் - மை விகுதி கெட்ட பண்புச் சொல். 'புன்னைவன பூபனே! எற்பதிகழ்ச்சி என்று ஔவை கூறியதற் கேற்ப நெடியோனாகிய திருமாலும் யாசிக்குங் காலத் தில் உடல் சுருங்கினனாதலின், யாசித்தல் எவர்க்கும் குறைவைத் தரும்; ஆதலின், யாசித்தலால் எவ்வகைச் சிறப்பைப் பெறுவதா

யிருந்தாலும் அஃது இகழ்ச்சிக்கே யிடமாம்; இத் தன்மையை யுணர்ந்து நீயும் யாசித்தலை யொழித்துக் கொடுத்தலைக் கைக்கொள் வாய்" என்பது இதன் கருத்து. திருமால் மூன்றடி மண் கேட்க விரும்பி மகாபலியிடம் சென்ற காலத்தில், நாம் தாழ்மையைக் காட்டி யாசித்தால் மாத்திரந்தான் கொடுப்பவனுக் கிரக்க முண் டாய், விரும்பியதைக் கொடுப்பான்; பெரிய வுருவத்தோடு செல் லுதல் அத் தொழிற்குத் தகாத செய்கை; ஆதலால், நாம் சிறிய வடிவத்தைக் கொண்டே செல்லவேண்டும்' என்று கருதியே குறள் வடிவந் தாங்கிச் சென்றனர். இக் கதையை இதற்கு முன் நான்காஞ் செய்யு ளுரையில் வரும் சுக்கிரன் கதையா லுணர்க. ()

---

## "ஐயமிட்டுண்."

என்பதற் கேற்ப, பிச்சையிட் டுண்ணுதலின் உயர்வை விளக்கும்

பிரமராக்ஷதன் கதை.

9. வன்பிரம ராக்கதன்முன் மங்கிலியப் பிச்சையருள்
என்பவளுக் கேகொடுத்தீ டேறினன்—அன்பதனல்
வள்ளலெனும் புன்னை வனநாதா வஞ்சமிலா
துள்ள திலே யையமிட் டுண்.

(ப - ரை) வள்ளல் என்னும் - (இரப்போர்க் கில்லையென் னுது அவர் வேண்டியவற்றைக் கொடுக்குந் தன்மையினலே) ஈகையாளன் என்று எல்லோரும் புகழத்தக்க, புன்னைவனநாதா - புன்னை வனத்திற்குத் தலைவனே! ('ஐயமிட்டுண்,' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும் பிச்சையிட்ட பின்னரே தாமுண்ண வேண்டும்; அங்ஙனம் செய்யின் அந்தப் புண்ணியமானது அவரை மேலான கதியிற் கொண்டுபோய்ச் சேர்க்கும்; ஆதலின், இந் நீதி யை யுணர்ந்தே முன்னொரு காலத்தில்) வன் - வல்லமையை

யுடைய, பிரமராக்கதன்ருன் - ஒரு பிரமராக்ஷதன், (தான், ஆகார முண்ணுங் காலத்தில்) மங்கிலியப்பிச்சை அருள் - எனக்கு மங்கிலியம் நிலைக்கும்படியான பிச்சையைக் கொடுப்பாய், என் பவளுக்கே - என்று கூறி யிரந்த ஒரு பெண்ணுக்கே, அன்பதனுல் - தனக் கேற்பட்ட கிருபையினுலே, கொடுத்து - தானுண்ணப்போன ஆகாரத்தையே மங்கிலியப் பிச்சையாக நல்கி, ஈடேறினன் - (அந்தப் புண்ணிய விசேஷத்தினுலே) பெருமையான நற்கதி பெற்றுச் சுகவாழ் வடைந்தனன்; (ஆகையினுலே நீயும்) வஞ்சம் இல்லாது - சூதில்லாமல், உள்ளத்திலே - உன்னிடத்திலிருப்பதிலே, ஐயம் இட்டு - யாசிப்பவர்க்குப் பிச்சையிட்டு, (பின்னர்) உண் - ஆகாரத்தை யுண்ணக்கடவாய்.

(வி-ரை) 'வன்மை' என்னும் பண்புச்சொல், 'ஈறு போதல் என்னும் விதிபற்றி மை விகுதி குன்றி 'வன்' என நின்றது.' 'என்பவளுக்கே' என்பதில் ஏகாரம் தேற்றப்பொருளது. ஈடு - பெருமை; 'ஈடேறினன்' என்பதற்குப் 'பெருமையான விடத்தைச் சார்ந்தான்' என்பது பொருள். ஒரு பிரமராக்ஷதன் ஒரு மனிதனைப் பிடித் துண்ணப்போகுந் தருணத்தில் அவன் மனைவி சென்று அந்த ராக்ஷதனிடத்தில் 'மங்கிலியைப் பிச்சை தரவேண்டும்,' என்று கேட்க, அவன், உண்ணுங் காலத்தில் பிச்சையேற்பார்க் கில்லை யென்னுது அதனைக் கொடுக்கும் நியமம் பூண்டிருந்தவனுதலின், அதற் கிணங்கித் தான் பிடித்த மனிதனை விட்டு அவளுக்கு மங்கிலியைப் பிச்சை கொடுத்து நற்கதி பெற்ருனென்னும் ஒரு கதை வழங்கக் கேட்டிருக்கின்ருேம்; இக் கதையின் கருத்துக்கேற்பப் புருஷனை யிழந்தவளே மங்கிலியப் பிச்சை கேட்க அவளுக்கும் அவ் விராக்கதன் கொடுத்தா னென்பது தோன்றுமாறு, 'மங்கிலியப் பிச்சையருள், என்பவளுக்கே,' என்று ஆசிரியர் ஈற்றில் தேற்றப் பொருளதாகிய ஏகாரங் கொடுத்தோதினர்.

ஆயினும், இக் கதை இன்ன நூலில் வருகிறதென்பது விளங்க வில்லை. ஆதலின், அறிஞர் இதனை வருமிடத்துக் கண்டுணர்க.(9)

---

## "ஒப்புறவொழுகு."

என்பதற் கேற்ப, உலகத்தார் சம்மதிக்கும்படி பொறுமை முதலிய குணங்களை யனுஷ்டிக்கவேண்டு மென்பதை விளக்கும்

### தாரணியின் தன்மை.

10. தாரணிபோ லெவ்வுயிருந் தாங்குந் தகைமையதாச்
சீரணிந்து நாளுஞ் சிறந்தோங்க—ஆரந்
தழைந்தபுகழ்ப் புன்னைவனத் தாடாளா யார்க்குங்
குழைந்தொப் புறவொழு கு.

(ப - ரை) ஆரம் - சந்தனமரங்கள், தழைந்த - செழித்து வளர்ந்தோங்கிய, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவனம் - புன்னை வனத்திலுள்ள, தாடாளா - நன்முயற்சிகளைப் பொருந் தியவனே! ('ஒப்புற வொழுகு,' என்று ஔவை கூறியதற்கேற்ப உலகத்திலுள்ள பெரியோர் சம்மதிக்குமாறு, மக்களாயினுர் பொறுமை முதலிய நற்குணங்களைக் கைக்கொண் டொழுகல் வேண்டும்; அவர் அங்ஙனம் நடப்பாராயின், மிக்க கீர்த்தியையும் நற்பதவியையும் அடைவர்; 'அகழ்வாரைத் தாங்கு நிலம்போல,' என்று பெரியோர் பொறுமைக் குதாரணமாக எடுத்துக் கூறத் தக்க பூமியும், தன்னை யிகழ்வாரையும் புகழ்வாரையும் சமமாகவே கருதித் தாங்கி என்றும் அழியாப் புகழ் பெற்றது; ஆதலின்,) தா ரணிபோல் - அத்தகைய பூமியைப்போலவே, எவ் வுயிரும் - எத் தகைய உயிர்களையும், தாங்கும் - ஆதரிக்கின்ற, தகைமையதா - தன்மையானது உன்னிடத்துண்டாக, சீர் - ஒழுங்கை, அணி ந்து - மனத்திற் பூண்டு, நாளும் - தினந்தோறும், சிறந்து ஓங்க -

அவ் வொழுக்கமானது மேன்மையுற்று வளர, யார்க்கும் - எத் தகையருக்கும், குழைந்து-மன மிளகி, (அவர் தீங்கு செய்யினும் பொறுத்து அவர்க்குப் பல நன்மைகளைச் செய்து) ஒப்புற - பெரி யோர் சம்மதிக்கும்படி, (பொறுமை முதலாகிய நற்குணங்களை யெல்லாம் பெற்று) ஒழுகு - நீ நடக்கக்கடவாய்.

(வி - ரை) புன்னைவனத்தி லிருக்கும் நன் முயற்சிகளை யுடைய தலைவனே! 'ஒப்புற வொழுகு,' என்று ஔவையார் கூறிய தற்சேற்பத் தாரணியைப்போலப் பொறுமை முதலிய நற்குணங் களைக் கொண்டு பெரியோர் சம்மதிக்கும்படி நன்மார்க்கத்தில் நடப்பாயாக என்பது இதன் கருத்து. தாரணிபோல் - இரண் டாம் வேற்றுமைத் தொகை. உயிரும் தாங்கும் - இதுவும் இரண் டாம் வேற்றுமைத் தொகை; இதிலுள்ள உம்மை முற்றுப்பொரு ளது. தாங்கும் - பெயரெச்சம்; இது தகைமை யென்னும் பண் புப் பெயர்கொண்டு முடிந்தது. ஓங்க என்னும் வினையெச்சம், ஒழுகு என்னும் ஏவல் வினைகொண்டு முடிந்தது. (10)

---

## "ஓதுவ தொழியேல்."

என்பதற் கேற்ப வேத மோதுதலின் உயர்வை விளக்கும்

## வேதவியாசர் கதை.

11. மச்சகந்தி தன்வயிற்றில் வந்துதித்து மோதலினுல்
விச்சைபெற்ற வேத வியாசனைப்பார்—நிச்சயமே
பன்னுதமிழ்ப் புன்னைவன பார்த்திபா வுண்மைநூ
லின்னே துவதொழி யேல்.

(ப - ரை) பன்னு - உயர்த்திக் கூறுகின்ற, தமிழ் - தமிழ்க் கல்வியையுடைய, புன்னைவனம்-புன்னைவனத்திற்கு, பார்த்திபா - அதிபதியே! ('ஓதுவ தொழியேல்,' என்று ஔவையார் கூறிய

நீதியை மனத்திற்கொண்டு எவரும் வேதமோதுதலை நீக்காது அதனைக் கைக்கொள்ளவேண்டும்; அங்ஙனம் ஓதின் பெரும் புகழும், அரும் பதமும் கிடைக்கும்; இந் நீதியைக் கடைப்பிடித்து) ஓதலினால் - வேதமோதுந் தொழிலாலே, மச்சகந்தி தன் - (பாதராசன் வளர்ப்புப் புத்திரியாகிய)மச்சகந்தியினுடைய, வயிற்றில்-உதாத்திலே, வந்து உதித்தும் - வந்து தோன்றியும், விச்சை பெற்ற - மேலான அறிவை யடைந்த, வேதவியாசனைப் பார் - வேதவியாசனுடைய தன்மையை நீ ஆராய்ந்து பார்; (அவன் எவரும் கொண்டாடத்தக்க மேலான நிலைமையை அடைந்தான் )நிச்சயமே - அஃதுறுதியே; (ஆதலால், நீயும்) உண்மை நூலின் - சத்தியசாஸ்திரங்களின், ஓதுவது - படிப்பை, ஒழியேல் - நீக்காதே, (அவற்றைக் கற்று மேலான பதவியை அடைவாயாக.)

(வி - ரை) 'மச்சகந்தி' என்பதற்கு, 'மீன்வாசனை யுடையவள்' என்பது பொருள். மச்சகந்தி தன்வயிற்றில்-ஆறும் வேற்றுமைத் தொகை; உறுப்புத் தற்கிழமைப் பொருளது; இதில், தன் - சாரியை. 'உதித்தும்' என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்புப் பொருளது. ஓதுவது - தொழிற்பெயர்.

வியாசர் கதையாவது:—அத்ரிகை யென்னும் ஓர் அப்சரஸ்திரீ யானவள், ஒருகாலத்தில், கங்கையில் ஸ்நானஞ்செய்து சந்தியாவந்தனம் புரிந்துகொண்டிருந்த ஒரு முனிவர் காலைப்பற்றி யிழுத்து விளையாட, அவர், யோகதிருஷ்டியால் அவளைக் கந்தருவ ஸ்திரீயென் றறிந்து, கோபித்து அவளை நோக்கி, "நீ ஜலத்தில் மீனைப்போல என் காலைப் பற்றி யிழுத்து என்னுடைய சந்தியாவந்தனத்தைக்கெடுத்தமையால், இந்த ஜலத்திலே வாழும் மீனாகக் கடவை," என்று சாப மிட்டனர். அவவாறு சாபமிடவே அவள் பயந்து முனிவரை நோக்கி வணங்கி, "சுவாமி! நான் அறியாமையால் இக் குற்றத்தைச் செய்து சாபம் பெற்றேன்; ஆதலால், இச்

சாபத்தினின்றும் விடுதலை யடையும் மார்க்கத்தை எனக்குக் கூறி யருளவேண்டும்,'' என்று கூற, அவர் மன திரங்கி, ''நீ மீன் வடிமாக நீரில் வாழ்ந்து இரண்டு குழந்தைகளைப் பெறுவாய்; அங்ஙனம் பெற்றவுடனே சுவர்க்கத்தை யடைவாய்,'' என்று சொல்லித் தம்மிருப்பிடத்திற்குச் சென்றனர்.

அதன்மேல் அந்த அப்சரஸ்திரி மீனுருக்கொண்டு யமுனையாற்றில் வசித்தனள். இப்படி யிருக்குங்காலத்தில், சேதிநாட்டரசனாகிய உபரிசரவசு வென்பவன், இந்திரனை நோக்கித் தவஞ்செய்து ஆகாயத்தில் சஞ்சரிக்கத்தக்க விமானம் பெற்று அரசாண்டு, பிதுர்க்கள் கனவிற் றோன்றி வேட்டையாடும்படி தெரிவிக்க, அவ்வாறே வேட்டையாடும் பொருட்டு ஒரு தினம் வனத்திற்குச் சென்று, வேட்டையை முடித்து ஒரு சோலையில் தங்கிச் சயனித்திருந்தான். அப்போது தன் மனைவியாகிய கிரிகையை நினைத்தபடியால் அவனுக்கு வீரியம் வெளிப்பட்டது; அங்ஙனம் வெளிப்படவே, 'அது வீண்போகக் கூடா' தென்று அவ் வரசன் கருதி அதனைத் தன் மனைவிபாற் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி ஒரு தொன்னை தைத்து அதில் வீரியத்தைச் சேர்த்து, தான் வளர்த்த இராஜாளியிடம் கொடுத்தனுப்பினான். அஃதவ்வாறே அத்தொன்னையை மூக்கினாற் கொளவிக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் பறந்து சென்றது; அவ்வாறு பறந்து அது யமுனைக்கு நேரே வரும்போது அங்கே மற்றொரு இராஜாளி அதனைக் கண்டு ஏதோ இரையென்று நினைத்து அதைப் பிடுங்கும் பொருட்டு அவ் விராஜாளியோடு சண்டை தொடுத்தது; அங்ஙனம் இரண்டும் சண்டையிடவே தொன்னையிலிருந்த வீரியம் தவறி இரண்டு பிரிவாக ஆற்றில் விழுந்தது. பின்னர், வீரியத்தைக் கொண்டுவந்த இராஜாளி திரும்பி அரசனிடம் நடந்ததைக் கூற அவன் வருந்தித் தன்னகரம் போய்ச் சேர்ந்தான்.

அதன்மேல், யமுனையில் இரண்டு பிரிவாகி விழுந்த உபரி சரவசுவின் வீரியத்தை, மேற்கூறியபடி முனிவர் சாபத்தால் மீனுருக்கொண்டு வசித்த அப்சரஸ்திரீ விழுங்கினள். அவ் வீரியம் இரண்டு பிரிவா யிருந்தபடியால், அம் மீனின் வயிற்றில் இரண்டு சிசுக்களுள்ள கருப்ப முண்டாயிற்று. அவ்வா றுண்டான கருப்பத் துடனே அம் மீன் திரிய ஒருதினம் வலைஞர்கள் யமுனையில் வலை வீசினார்கள்; அப்போது அம் மீன் அந்த வலையி லகப்பட்டது; அது மிகவும் பெரியதாயும் அழகாயு மிருந்தபடியால் அதனைத் தங்க ளதிபனுகிய பரதராஜனிடம் கொண்டுபோய்ச் சேர்த்தார் கள். அவன் உடனே அதனை அறுத்தான். அதன் வயிற்றில் ஆண் குழந்தை யொன்றும், பெண்குழந்தை யொன்று மிருந்தன. அச் சமயத்தில் அந்த மீன்வடிவமாயிருந்த அப்சர ஸ்திரீ சாபம் நீங்கித் தன் பழையவுருத் தாங்கி ஆகாயத்திற் போய் நின்று, அக் குழந் தைகள் உண்டான வரலாற்றையும், தன் வரலாற்றையுங் கூறிச் சென்று நற்கதி யுற்றனள். பின்னர் பரதராஜன், அக் குழந்தைகளை உபரிசரவசுவின் வீரியத்தா லுண்டானவைகளென் றுணர்ந்து உடனே அவ் வசுராஜனிட மனுப்பி அவற்றின் வரலாற்றினையுந் தெரிவிப்பித்தான். அப்போது அவன் ஆண்குழந்தையைத் தான் எடுத்துக்கொண்டு, பெண்ணைப் பரதராஜன் வளர்த்துக்கொள்ளும் படி அவனிடமே யனுப்பிவிட்டான். இவ் விரண்டு குழந்தைகளும் மச்சத்தின் வயிற்றிற் பிறந்தகாரணத்தால் ஆண்குழந்தைக்கு மச்ச னென்றும், பெண் குழந்தைக்கு மச்சகந்தியென்றும் பெயர்க ளுண்டாயின. அதன்மேல் அந்தப் பரதராஜன் மச்சகந்திக்குக் காளியென மற்றொரு பெயருமிட்டு அவளை வளர்த்துவந்தான். இன்னும் இவளுக்கு, சத்தியவதி யென்றும், யோசனைகந்தி யென்றும், பரிமளகந்தி யென்றும் பல பெயர்க ளுண்டு.

இவள், ஆதியில், அச்சோதை யென்னும் ஒரு புண்ணியநதி வடிவமா யிருந்தவள்; மரீசி மக்களாகிய பிதுர்க்களுக்குப் புத்திரி

யானவள்; இவள், தம் பிதுரரால் நிருமிக்கப்பட்ட அச்சோத மென்னும் நதிக்கரையில் ஆயிரம் வருடங்கள் தவஞ் செய்து அந்த பிதுர்க்கள் பிரத்தியக்ஷமாக, அவர்களுள் ஒருவனுகிய மாவசு வென்பவனை நாயகனுக எண்ணி அதனுல் விபசாரியாய்ச் சுவர்க் கத்திலிருந்து தள்ளப்பட்டுப் பூமியில் விழாமல் அந்தரத்தில் நின்று தவஞ் செய்தனள். இவளுக்கு வசமாகாத மாவசு வென் பன் இச் செய்கை நடந்த தினத்தை அமாவாசை யாக்கினன். மேற் கூறியபடி தவஞ் செய்த இவள், மீண்டும் தனக்கு நல்ல வரங் கொடுக்குமாறு அந்த பிதுர்க்களை வேண்ட, அவர்கள், இவளை நோக்கி, "நீ தேவர் கர்மத்தைப் புசித்து இருபத்தெட்டா வது துவாபரயுகத்தில் ஒரு மீன் வயிற்றிற் சத்தியவதியாகப் பிறந்து பராசரனைக் கூடி வியாசனைப் பெற்றுப் பிறகு சந்தனுவிற்கு மனைவியாய், விசித்திரவீரியன், சித்திராங்கதன் என்னும் இர ண்டு புத்திரரைப் பெற்று, அப்பால், அச்சோதை யெனும் புண் ணியநதி யாகக்கடவை," என்று கூறிச் சென்றனர். அதனுலே யே இவள் இவ்வாறு மீன் வயிற்றிற் பிறந்தனள்.

இவ்வாறு மச்சகந்தி, பிறந்து வளர்ந்து வருங்காலத்தில், பெதும்பைப்பருவ மடைந்திருக்கும்போது வளர்த்த தந்தை யாகிய பரதராஜனிடம் ஒரு சமயம், "தாதையே! நீர் எனக்கொரு படவு செய்துகொடுத்தால் நமது குலாசாரப்படி யமுனையாற்றங் கரையி லிருந்து அங்கு ஆற்றைக் கடக்க வரும் பெரியோர்களைப் படவி லேற்றிக் கடத்திவிட்டுக்கொண் டிருக்கிறேன்," என்று சொல்ல, பரதராஜன் அவ்வாறே சிறிய படவொன்று செய்து அவளுக்குக் கொடுத்தான். அதன்மேல் அவள் அந்தப் படவைச் சில மனிதர்களால் எடுப்பித்துக் கொண்டுபோய் யமுனையில் விட்டு, அங்கு வரும் பெரியோர்களைத் தினந்தோறும் அப்படவி லேற்றி வெள்ளத்தைக் கடத்திவிட்டுக்கொண்டிருந்தாள்.

இப்படி யிருக்கும்போது ஒரு சமயம் பிரமபுத்திரராகிய வசிஷ்டர் பேரரும், சத்தி மைந்தருமாகிய பராசர், 'உலகத்திற்கு நன்மையை யுண்டாக்கத்தக்க ஒரு புத்திரனைப் பெறவேண்டும்' என்றும், 'அதன்பொருட்டு இருபத்தேழு நக்ஷத்திரங்களில் ஒரு நக்ஷத்திரம் உச்சமமாகும்பொழுது ஒருஸ்திரீயைக் கூடவேண்டும்' என்றுங் கருதி, அந் நக்ஷத்திரம் உச்சமாகுங் காலம்வரை தவத்தி லிருந்து அக்காலம் சமீபித்தபடியால் அவர் தவநிலையை விட்டெ ழுந்து ஒரு ஸ்திரீயைக் கூடுதற்கு நகரங்களின்பாற் செல்லும்பொ ருட்டு வேகமாகச் சென்றார். அவ்வாறு செல்லும்போது நடுவழி யில் யமுனை குறுக்கிட்டுப் பெருக்கெடுத் தோடியது. அதைக் கண்டவர் அங்கே தடைப்பட்டு நின்று மச்சகந்தி படவுடனே யிருப்பதைக் கண்டு, அவளிடம் போய், "பெண்ணே! நான் இன் றொரு கோரிக்கையை நிறைவேற்றும் பொருட்டு நகரங்களை நோக்கி வேகமாகச் செல்கின்றேன்; அவ்வாறு செல்வதற்கு இவ் வாற்று வெள்ளம் தடையாயிருக்கின்றது; ஆதலால், நீ தயவு செய்து என்னைப் படவி லேற்றி அக்கரையிற் கொண்டுபோய் விடுவாயானால் என் விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்வேன்," என்று கூறினர். அந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே மச்ச கந்தி, பராசரை நோக்கி, "பெரியவரே! நீர் சொல்வது சரிதான்; ஆறோ மிகவும் பெருக்கெடுத் தோடுகின்றது; தகுந்த பார மேற் றிக்கொண்டே படகை இவ் வெள்ளத்தில் விடவேண்டும்; அங் ஙன மின்றிக் குறைந்த பாரத்துடன் இதில் விட்டால் அபாய முண்டாகும்; நீர் மாத்திர மிருக்கின்றீர்; உம்மை யேற்றினால் பாரம் பற்றாதே; சற்றுநேரந் தாமதித்தால் வேறு யாரேனும் வரு வார்கள்; அவர்கள் வந்தவுடனே அவர்களுடனே உம்மை ஏற்றிச் செல்கின்றேன்," என்று கூற, பராசர், "பெண்ணே! இப்போது ஓடத்துக்கு எவ்வளவு பாரம் வேண்டுமோ அவ்வளவு பாரத்தை உண்டாக்குகிறேன்; நீ சந்தேகப்படாமல் என்னை ஓடத்தி லேற்

றிச் செல்வாயாக,'' என்று கூறினார். மச்சகந்தி இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே, அவரை ஒரு மகாத்மாவென்று நினைத்து, அவர் திருமுகத்தை நோக்கி, ''சுவாமி! அப்படியானால், நீர் படவிலேறிக்கொள்ளும்; நான் இதனைச் செலுத்துகின்றேன்,'' என்று சொல்ல, உடனே பாராசர் படவிலேறிக்கொண்டார்; அதன்மேல் அவள் படவை நீரிற் செலுத்தத் தொடங்கி, அது சரியான பாரத்தோ டமைந்திருக்கக் கண்டு, அவர்மீது மிகுந்த பயபக்தியுடையவளாய் ஜாக்கிரதையுடன் அந்தப் படவைச் செலுத்தினாள்.

இவ்வாறு அவள் படவைச் செலுத்தி ஆற்றின் மத்தியில் சேர்ந்தவுடனே, பாராசர், தாம் கருதிய நக்ஷத்திரம் ஒரு சமயம் உச்சமாய்விடுமோ என்று ஆகாயத்தை நோக்கினார். அப்போது அந்த நக்ஷத்திரம் உச்சத்தில் வருந் தருணமாயிருந்தது; அதைப் பார்த்தவுடனே அவர் மிகுந்த கவலை கொண்டு, ''ஐயோ! நக்ஷத்திரம் உச்சமாகுந் தருணமாயிற்றே; நாம் உத்தேசித்த காரியம் நிறைவேறாமற் போய்விடும்போ லிருக்கின்றதே; இனி இதற்கென்ன செய்கிறது? இப்போது நாம் வேறு பல யோசனைகள் செய்யாமல் படவு விடும் இந்தப் பெண்ணையாவது கூடவேண்டும்; அங்ஙனம் செய்யின் இந்த நேரம் வீண் போகாமல் நாம் உத்தேசித்தபடி புத்திரன் பிறப்பான்,'' என்று தீர்மானித்து, உடனே மச்சகந்தியை நோக்கி, ''பெண்மணியே! நான் இவ்வளவு பிரயாசைப்பட்டு வந்தும், உத்தேசித்த காரியம் நிறைவேறாமல் போய்விடும்போ லிருக்கிறது; ஒரு நக்ஷத்திரம இன்று உச்சமாகுந் தினம்; அஃது உச்சமாகும்போது ஒரு ஸ்திரீயைக் கூடினால், உலகமெல்லாங் கொண்டாடத்தக்க புத்திரன் பிறப்பான்; அதன் பொருட்டுத்தான் இவ்வளவு அவசரமாக வந்தேன்; இப்பொழுதே அந் நக்ஷத்திரம் உச்சமாகுந் தருணமாகிவிட்டது; நானோ ஆற்றின்

மத்தியி லிருக்கின்றேன்; இங்கே எவ்வாறு நான் உத்தேசித்த காரியத்தை நிறைவேற்றுவது? இக்காரியம் வீணுய்ப் போவதைப் பற்றி எனக்கு மிகுந்த கவலையா யிருக்கிறது; இங்கே யாருமில்லை; நீதான் பெண்பாலா யிருக்கின்ருய்; ஆதலால், நீயாவது என்னைக் கூட இசையும் பக்ஷத்தில் மகா சிரேஷ்டனுகிய புத்திர னுண்டாவான்; அவ்வாறு உன்னிடம் அந்தப் புத்திர னுதிப்பானுயின், உனக்கு உலகத்தில் என்று மழியாப் புக ழுண்டாகும்," என்று கூறினர்.

பராசர் இவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்டவுடனே மச்சகந்தி மிகுந்த வெட்கத்தை யடைந்து, அவரை நோக்கி, "சுவாமி! நானே விஷயவுணர்ச்சி யில்லாத பேதும்பைப்பருவ முடையவளா யிருக்கின்றேன்; நீர் கருதியதற்கு நான் எவ்வாறு பொருத்த முடையவளாவேன்? மேலும், நான் மச்சநாற்றத்தை யுடையவளாயும், நீர் அருவருக்கத்தகுந்தவளாயு மிருக்கின்றேன்; என்னேடு சேர உம் மனந்தான் எவ்வாறு சம்மதிக்கும்?" என்று கூறினள். அப்போது பராசர், "பெண்ணே! நீ மங்கைப்பருவ முடையவளாகவும், உன்மீது யோசனை தூரம் நல்ல பரிமளம் வீசும்படியாகவும் செய்துவிடுகின்றேன்; இக் காரிய முடிந்தபின் நீ மீண்டும் பேதும்பைப்பருவத்தை யடையவும் செய்கின்றேன்," என்று கூற, அதன்மேல் மச்சகந்தி 'அவருடைய வார்த்தையை மறுக்கக்கூடா' தென்று கருதி, அவரை நோக்கி, "சுவாமி! நீர் சொல்வது மிகவுஞ் சிறந்த காரியமாயிருப்பதினுலே உம்முடைய கருத்திற் கிசைகின்றேன்; ஆனல், இப்போது பகற்காலமா யிருப்பதோடு நாம் தங்குவதற்கு ஓரிட மில்லாமல் ஜலமா யிருக்கின்றதே; இதற் கென்ன செய்யலாம்?" என்று சொல்ல, அவர், தம்முடைய தவமகிமையினுலே அவ்வாற்றின் மத்தியில் ஒரு திட்டை யுண்டாக்கி, கொஞ்சம் திருநீற்றை எடுத்துக் கையில் வைத்து

ஆகாயத்தில் ஊதி அதனால் மூடுபனியை யுண்டாக்கிச் சூரியனை மறைத்து, இருள் சூழும்படி செய்து, மச்சகந்தியை நோக்கி, "பெண்ணே! உன்னிஷ்டப்படியே திட்டையும் இரவையு முண்டாக்கினேன்; இனி எனதெண்ணத்தை நிறைவேற்றுவாயாக," என்றனர். உடனே மச்சகந்தி மங்கைப்பருவ முடையவளாயும், பரிமள மிகுந்தவளாயும் படவைவிட் டிறங்கிப் பராசருடன் அந்தத் திட்டைச் சார்ந்து அவரைக் கூடினாள். அங்ஙனம் கூட, தம் மிச்சை நிறைவேறியவுடனே பராசர் எழுந்து ஒன்றும் பேசாமல் ஆற்றைக் கடந்து சென்றார். பரிமளகந்தி அப்பொழுதே கருப்ப முற, அவள் வயிற்றினின்றும் மூன்றேமுக்கால் நாழிகைக்குள் வேதத்தைக் கையிற் பிடித்துக்கொண்டு முனி வடிவமாய் ஒரு புத்திரர் உற்பத்தியாயினர். இவர் வேதத்தோடு பிறந்தனராதலின் இவருக்கு **வேதவியாசர்** என்னுந் திருநாம முண்டாயிற்று. இவர் அங்ஙனம் பிறந்தவுடனே பரிமளகந்தி, இவரைப் பார்த்து ஆச்சரியமுற்றனள். அத்தருணத்தில் இவர், அவளை நோக்கி வணங்கி, "அன்னையே! என்னுடைய பிதாவெங்கே?" என்று வினவினார். அதைக் கேட்டவுடனே பரிமளகந்தி, சிறிது தூரத்திற் கப்பாற் சென்ற பராசரை அவருக்குக் காட்டி, "மைந்தனே! உன்னுடைய தந்தை அதோ செல்கின்றார்," என்று கூற, உடனே வேதவியாசர், அவளிடம், "தாயே! நீ எப்பொழுது என்னை நினைப்பாயோ அப்பொழுது நான் வருவேன்," என்று சொல்லிவிட்டுத் தந்தையைத் தொடர்ந்து சென்று அவருடன் கூடித் தவ மியற்றினர். பின்னர், பராசர் கொடுத்த வரத்தின்படி பரிமளகந்தி என்றும் பரிமளத்தை யுடையவளாய், மீண்டும் முன்னுள்ள பருவத்தை யடைந்து பின்பு சந்தனுவுக்கு மனைவியாய் இரண்டு புத்திரரைப் பெற்று அவரால் சந்ததி விருத்தியாகாமற்போக, மேற்கூறிய வியாசரைச் சிந்தித்து வரவழைத்து இவரால் குருகுலத்தை விருத்தி செய்து முடிவில் நற்பதம் பெற்றனள்.

மேற் கூறியபடி பிறந்து தந்தையோடு சென்று தவஞ் செய்திருந்த வியாசர் வேதங்களை நன்குணர்ந்த காரணத்தால் அவற்றை வகுத்து ஒழுங்காக்கிப் புராணங்களையுஞ் செய்து, பாரத கதையை நான்கு வேதங்களோடு சேர்த்து ஐந்தாம் வேதமென்று எவரும் கொண்டாடும்படி சொல்லி விநாயகமூர்த்தியை எழுதும்படி செய்து என்று மழியாப் பெரும் புகழ் பெற்றனர். இன்னும் இவர், பிரம சூத்திரமுங் கூறினர்; தாயாகிய பரிமளகந்தியின் கட்டளைப்படி காசிராஜன் பெண்களையும், அவர்களுடைய தோழியையுங் கூடித் திருதராஷ்டிரன், பாண்டு, விதுரன் ஆகியவர்களைத் தோற்றுவித்தனர். பாண்டவர்கள் வனவாசஞ் செய்யுங் காலத்தில் பல விடங்களிற் றோன்றி அவர்க்குத் தர்மங் கூறித் தேறுதல் செய்தனர், இவர், புத்திரப்பேற்றை விரும்பி, சிவபிரானை நோக்கி, யாகாதிகாரியஞ் செய்ய யத்தனித்து அரணியைப் பிடித்துக் கடைய, கிருதாசி யென்னும் அப்சரசு தோன்றி இவருக்கு மோகத்தை யுண்டாக்கி, இவரை அதில் மூழ்குவித்துத் தான் சுகம் என்னும் கிளிவடிவு கொண்டு அங்கிருந்தனள். அப்போது இவருக்கு வெளிப்பட்ட வீரியமானது அரணியில் விழுந்தது; அதிலிருந்து சுகர் தோன்றினர். சுகரூபியாகிய அந்தக் கிருதாசி யென்பவளால் அவர் உற்பத்தியாயினமையின் சுகர் என்னுந் திருநாமத்தைப் பெற்றனர். அவர் பிறக்கும்பொழுதே மகா ஞானியாய், நாரதர் தமக்கு ஞானங் கூறக் கேட்டு அதனுல், தந்தையாகிய இந்த வியாசரை விட்டு நீங்கிச் சென்றனர். அப்போது வியாசர் புத்திரவாஞ்சையால் அவரைப் பின்தொடர்ந்து, 'சுக! சுக!!' என்றழைக்க மரங்கள் முதலியன 'ஓய்' என்று விடைபகர்ந்தன; அதன்மேல் அவ்வாறே வியாசர் பின்செல்ல சுகர் தவத்தை நாடிச் சென்றபோது வழியிலுள்ள ஒரு தடாகத்தில் நீராடிக்கொண்டிருந்த அரம்பையர், சுகர் உலக வியாபாரந் தெரியாதவராதலால் அவரைக்கண் டெழுந்திராமலிருந்து, வியாசரைக்

கண்டமாத்திரத்தில் இவர் உலக வியாபாரந் தெரிந்தவரென்று உடனே யெழுந்து வஸ்திரத்தை யுடுத்துக்கொண்டனர். அதனால், இந்த வியாசர் தம் புத்திரராகிய சுகருடைய உயர்ந்த நிலைமையைக் கண்டு மீண்டனர்.

இன்னும் இந்த வியாசர், ஒரு சமயம் தம்மைக் கண்டு, தனது தேகத்தைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டுப் பயந்தோடிய ஒரு புழுவின் வரலாற்றினை யுணர்ந்து, அது, பல பிறவிக ளெடுத்துக் கடைசியில் அவ்வியேயனுய்ப் பிறக்கும்படி அருள்புரிந்தனர்; பாரத யுத்தத்தில் அபிமன்னன் இறந்ததைப்பற்றி வருத்தமுற்ற தருமரைத் தேற்றினர்; பாரத யுத்தத்தால் வந்த பாவந் தொலையுமாறு அசுவமேதயாகஞ் செய்யும்படித் தருமரை யேவினர்; யுத்த முடிந்தபின் திருதராஷ்டிரன், புத்திர ரிறந்த வருத்தத்தால் பாண்டவரை விட்டு நீங்கித் தவஞ் செய்யுங் காலத்தில் அவன்பா லணுகி அவனுக்குத் தேறுதல் கூறி இறந்துபோன அவனுடைய மைந்தரை வரவழைத்துக் காட்டி அப்போதங்கு திருராஷ்டிரனைக் காண வந்திருந்த பாண்டவர்க்கும், கர்ணன், அபிமன், அரவான் முதலியவர்களைச் சுவர்க்கத்தி லிருந்து வரவழைத்துக் காட்டிப் பின்னர் அவர்களுடைய பத்தினிகளைக் கங்கையில் வீழ்ந்து சுவர்க்கத்தை யடையும்படியும் செய்தனர். மேலும், இவர் ஒருகாலத்தில் நைமிசாரணிய முனிவரிடம், 'கேசவனே பரம்,' என்று கூற, அவர்கள், 'காசிக்ஷேத்திர மடைந்து கூறுவீராக,' என்று சொல்ல, அவ்வாறே அங்குச் சென்று கூறி அதனால், கையும் நாவும் எழாமல் வருந்திப் பின்னர் விஷ்ணு மூர்த்தியினாலே, 'சிவ மூர்த்தியே பரமபதி,' எனக் கூறக்கேட்டுச் சிவ ஸ்தோத்திரஞ் செய்து கையும் நாவும் பெற்றனர். மற்றொரு சமயம் இவர் காசியிலே தம் மாணாக்கருடன் பிக்ஷையேற்க அங்குப் பிக்ஷை கிடையாததால் ஓட்டையெறிந்து காசியைச் சபிக்க எண்ணி அப்போது அன்னபூரணி

அன்னமளிக்க உண்டனர். இந்த வியாசர் வைவச்சுதமனு வந்தரத்தில் இருபத்தெட்டாவது துவாபரயுகத்தில் இருந்தவர். வேதங்கள் நான்கையும் சுமந்து விற்கின்ற சைமினிக்கும், பைலருக்கும், சுகருக்கும், வைசம்பாயனருக்கும் இவர் உபதேசித்தனர். இவர் தீவில் பிறந்த காரணத்தில் இவருக்கு, 'த்வைபாயனர்' என்று மற்றொரு பெயரு முண்டு. வைவச்சுத மனுவந்தரத்தில் இத்தகைய வியாசர்கள் இருபத்தெண்ம ரிருந்தனரென்று புராணங்கள் கூறும். (11)

---

பொருமைச் சொல் "ஔவியம் பேசேல்."

என்பதைக் கருதாமல் இதற்கு மாருக நடப்போ ரடையும் பயனை விளக்கும்

## உத்தரன் கதை.

12. மாதர்முன்னே யுத்தர னு மாபலவான் போ லுரைத்து
காதமரி லர்ச்சுனனுற் கட்டுண்டான்—ஆதலினுல்
வண்மைபெறு புன்னை வனநாதா சீருடைய
திண்மையுன்னி யௌவியம்பே சேல்.

(ப - ரை) வண்மை பெறு - ஈகைக்குணத்தை அடைந்திருக்கின்ற, புன்னைவனநாதா - புன்னைவனத்திற் கதிபதியே! ('ஔவியம் பேசேல்' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும் பிறர் உயர்வைக் கண்டு பொறாது அவரைத் தாழ்த்திப் பொருமைச் சொற்களைக் கூற லாகாது; அங்ஙனங் கூறின், அச் செய்கையால் திருவிழந்து தாழ்மை யுறுவர்; இதற்குதாரணமாக) உத்தரனும் - மிகவுஞ் செல்வமுடையவனுகிய விராடன் புத்திரனுன உத்தரனுங்கூட, (மாடுபிடிசண்டை நடக்குங் காலத்தில்) மா - சிறந்த, பலவான்போல் - வலிமை யுடையவனைப்போல, மாதர்முன்னே -

ஸ்திரீகளுக்கு முன்னே, உரைத்து - (வெற்றியுள்ள பல புருஷர் மீது பொறாமைகொண்டு அவரைத் தாழ்த்தியும், தன்னை உயர்த்தியும்) கூறி, காது - பகைவரைக் கொல்லத்தக்க, அமரில் - போரிலே (சென்று எதிரி படையைக் கண்டு பயந்து தேரைவிட்டிறங்கி யோடித் தான் கூறிய தற்பெருமைக்கு மாற்றமாக), அர்ச்சுனனால் - விஜயனாலே, கட்டுண்டான் - துரத்திப் பிடித்துக் கொண்டுவந்து மீண்டும் ஓடிவிடாமல் கட்டிவைக்கப்பெற்றுப் பெருமை யிழந்து அவமானத்தை யடைந்தான்; ஆதலினால் - ஆகையினாலே, சீர் உடைய - சிறப்புள்ள, திண்மை உன்னி - தனது தேகக்கட்டை நினைத்து, (பிறர் உயர்வைக் கண்டு பொறாமை கொண்டு அவரைத் தாழ்த்தியும் உன்னை உயர்த்தியும்) ஒளவியம் பேசேல் - பொறாமைச் சொற்களைக் கூறாதே, (அங்ஙனம் பேசின் உத்தரனைப் போலவே அவமானத்தை யடைதற் கேது வுண்டாகும்.)

(வி-ரை) 'உத்தரனும்' என்பதில் உள்ள உம்மை உயர்வுசிறப்புப்பொருளது. எல்லாச் செல்வங்களும் பொருந்திய உத்தரனும் தன்னைப் புகழ்ந்து ஒளவியம் பேசியபடியால் அந்தச் சமயத்திலேயே தன் வார்த்தையை நிறைவேற்ற முடியாமல் போருக்குப் பயந்தோடி அர்ச்சுனனால் தேரிற் பிடித்துக் கட்டப்பட்டான். ஆதலின், மற்றையர் அதனால் இழிவடைதல் கூறவும் வேண்டுமோ என்பது இந்த உம்மையின் கருத்து.

உத்தரன் அர்ச்சுனனாற் கட்டுண்ட கதையாவது:—பாண்டவர்கள் வனவாசங் கழித்து, மாறுவேடங் கொண்டு விராடன் நகரத்தைச் சார்ந்து மறைவாக ஒரு வருடம் அஞ்ஞாதவாசங் கழித்து வருங்காலத்தில் ஒரு சமயம் துரியோதனன், 'பாண்டவர்கள் விராடனுடைய நகரத்தி லிருப்பார்கள்' என்று சந்தேகித்து, அவர்களை

ஏதேனுமோருபாயத்தில் காணவேண்டும்' என்று கருதி, விராடன் மேற் படையெடுத்து வந்து அவனுடைய நிரைகளை ஓட்டிச் செல்ல, விராடன் தென்றிசையில் சென்று போர் புரிந்து திரிகர்த்த னாற் கட்டுப்பட, அத் தருணம் தரும ரேவலால் வீமன் அவனை யும்பசுநிரைகளையும் மீட்க, அவன் 'மீண்டும் பகைவர் வருவ'ரென் றெண்ணி அத் திசையிலே தங்கியிருந்தனன். மறுநாள் துரியோத னன் படையோடு வடதிசையில் வந்து நிரைகளை ஓட்டிக் கலகம் புரிந்தான். அப்போது நிரைகாவலர் நகரத்திலிருந்த விராடன் மைந்தனாகிய உத்தரன்பாற் குறுகி, பகைவர் உத்தரதிக்கில் வந்து வளைந்ததை யுரைக்க, அந்த உத்தரன், 'எனக்குச் சரியானபடி தேர்விடுஞ் சாரதி யொருவன் அமைவானாயின், பகைவரை யோட்டி வெற்றிமாலை புனைவேன்; சாரதியில்லாததுதான் ஒரு குறை,' என்று சொல்ல, அப்போதங்கு வண்ணமகளாக அமைந்துநின்ற துரோபதை அங்குப் பேடிவடிவாக நின்ற அருச்சுனனைக் காட்டி, 'இந்தப் பேடி அர்ச்சுனனுக்குத் தேர் விட்டவள்; சாரதித் தொழி லில் மிக வல்லமை யுடையாள்; இவளைத் தேர் செலுத்துதற் கழைத்துப் போகலாம்,' என்று சொல்ல, சுதேட்டிணை அவ்வாறே அர்ச்சுனனாகிய பேடியை வேண்ட, அவன் தேர்விடச் சம்மதித் தான்.

பின்னர், அந்தப் பேடியாகிய அர்ச்சுனன் நல்லனவாகிய நான்கு குதிரைகளைப் பூட்டித் தேரை அலங்கரித்துச் செலுத்த அதன்மேல் உத்தரன் சகல ஆயுதங்களுடனும் எறிச் சென்றான். அங்ஙனம் சென்ற அவ் வுத்தரன், நகரத்தையும், மதிற் புறங்களை யுங் கடந்து துரியோதனன் படை நெருங்கியிருக்கும் உத்தரதிசை யைச் சார்ந்து அங்கே ஆகாயத்தில் நிறைந்த நக்ஷத்திரக் கூட்டங் களைப் போல அளவில்லாமல் நிறைந்துநின்ற துரியோதனன் படையைக் கண்களாற் கண்டான். அங்ஙனம் பார்த்தவுடனே

அவன், முன்னே பெண்களுக் கெதிரிற் கூறிய தைரியத்தை யெல்லா மிழந்து, மிகவும் அச்சங் கொண்டு கைகால்கள் நடுங்கவும், நெஞ்சம் பதறித் தேகம் நடுங்கவும், நாவுலரவும், சொற்கள் தடுமாற வும், பிரகாசம் பொருந்திய கிரீடம் ஆட்டமெடுக்கவும் சோர் வுற்று, உடனே சாரதியை நோக்கி, "பேடியே! இந்தப் படை யைப் பார்த்தவுடனே என்னுவி பதறுகின்றது; இவ்வளவு எண் ணிறந்த படையுடனே எதிர்த்துப் போர் செய்தல் என்னு லிய லாது; நான் மிகவும் சிறியன்; தேரைத் திருப்பிவிடு," என்று கூறினன்.

அப்போது பேடியாகிய அர்ச்சுனன் உத்தரனை நோக்கி, "விராடபூபதியின் தவப் புதல்வனே! நீ சிறிதும் அச்சங் கொள்ளா தே; அரசகுலத்திற் பிறந்திருந்தும் இவ்வாறு நீ பயப்படுதல் அழகாமா? க்ஷத்திரியராய்ப் பிறந்தவர்கள் பகைவரைக் கொன்று வெற்றி பெறவேண்டும்; அல்லது, போரில் உயிரை விடவேண்டும்; இவ்விரண்டி லொன்று செய்வதை விடுத்து வேறு காரியஞ் செய் யக் கருதுவது க்ஷத்திரியர்க் கழகன்று. நீயோ பெண்களுக்கு முன் னே வீரமான வார்த்தைகளைப் பேசி வந்திருக்கின்றாய்; அவ்வாறு பேசி வந்த நீ போரி லெதிர்த்து யுத்தம் புரிந்து தேகத்தி லொரு காயமேனும் படாமல் அஞ்சித் திரும்பிச் செல்வாயானல் அந்த ஸ்திரீகள்தாம் என்ன சொல்லமாட்டார்கள்? நீ தைரியத்தோடு நிலைபெற்று நின்று பலம் பொருந்திய வில்லை வளைத்து வெவ்வி தாகிய சிற்சில பாணங்களைத் தொடுத்தேவிப் போர் புரிவாயா னல் இங்குக் கூடிநிற்கும் அரசரில் எவரும் உனக் கெதிரில் நின்று போர் புரியச் சாமர்த்திய முடையவ ராகமாட்டார்கள்; எல்லோ ரும் முதுகிட்டோடுவார்கள்," என்று புகல, அவன் "இந்தப் போர்த்தொழிலே எனக்கு வேண்டாம்; இங்கு நிற்கும் நால்வகைச் சேனைகளின் தன்மையைத் தெரிந்துகொள்ளாமலே திரும்பிச்

செல்வது நலம்,'' என்று ஒரே பிடிவாதமாய்க் கூறினன். அவ்வாறு கூறியும் அர்ச்சுனன் கேளாமல் மீண்டும், வியர்த்துப்போன அவன் மேனியில் பனிநீரைத் தெளித்து அவனுடைய அயர்ச்சியை நீக்கிச் சில தைரியமான வார்த்தைகளைக் கூறி, ''இராஜபுத்திரனே! நீ இமைப்பொழுது முதுகிட்டோடாமலிரு; அங்ஙனமிருப்பாயாஞல், இந்தப் பகைவர்களை யெல்லாம் தனித்தனியாக அடித்தோட்டி, அவர்கள் கைவசப்பட்டிருக்கும் பசுநிரைகளையும் மீட்டித் தருவேன்,'' என்றனன்.

உத்தரன் இந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே, ''நாம் என்ன சொன்னலும் இந்தப் பேடி விடமாட்டாள்; நாம் அங்கே அகங்காரமாகக் கூறிய வார்த்தைகளை மனத்தில் வைத்துக்கொண்டு நம் அகங்கார மொடுங்கும்பொருட்டு இந்தப் போரில் இழுத்துவிட்டு நம்மைக் கொல்லப் பார்க்கிருள்; இனி ஒன்றும் பேசாமல் இவள் கையினின்றும் தவறி யோடுவதே நலம்,'' என்று உறுதிகொண்டு, சிறிதுந் தாமதியாமல் தேரினின்றுங் குதித்து, பின்னங்கால் பிடரியி லடிபட நெஞ்சம் பதறப் பெருமூச்சு விட்டுக்கொண் டோடினன். அவன் அவ்வா றேடவே அர்ச்சுனன் புன்னகை கொண்டு பின்தொடர்ந்தோடி ஒரு நொடிப் பொழுதில் அவனைப் பிடித்துத் தேரின்மே லேற்றிவைத்து மீண்டும் ஓடிவிடாதபடி தேரிற் சேர்த்துக் கட்டி அத் தேரைக் காற்றும் பின்னிடும்படியாக வேகத்துடனே செலுத்தி, தனக்கும் தன் சகோதரர் முதலியோர்க்கும் அஞ்ஞாதவாசத் தவணை அப்பொழுது கழிந்துவிட்டபடியால் தன்னுருவத்தை வெளிப்படுத்தலா மென்று தைரியங்கொண்டு முன்னே மரப்பொந்தில் மறைத்து வைக்கப்பட்ட தன்னுடைய ஆயுதங்களை யெடுத்துக்கொண்டு, உத்தரன், 'இவ் வாயுதங்கள் எவர்க்குரியன?' என்று வினவ, அவை தன்னுடையன வென்றும் தான் அர்ச்சுனனென்றுங் கூறி விரைந்து

போர்க்களஞ் சேர்ந்து அவ் வுத்தரனையே தேர் செலுத்தும்படி ஏற்படுத்திப் பகைவரை வென்று நிரையை மீட்டுத் திரும்பி விராடன் முதலியோரை மகிழ்வித்தனன்.

---

மூன்றாம் நாள் - 2-ம்

15 வது

## "அக்கஞ் சுருக்கேல்."

என்பதற் கேற்பச் சுற்றந் தழுவுதலின் உயர்வை விளக்கும்

சிட்டுக் கதை. [சிட்டு

13. மைக்கடல்கொண் முட்டைதனை வாங்குவோ மென்று
புக்கதனை வென்றது தன் புத்தியினால்—அக்கதைபோல்
வேளாளர் புன்னைவன மேகமே யுண்மையெனக்
கேளாயக் கஞ்சுருக் கேல்.

(ப-ரை) வேளாளர் - வேளாளரையுடைய, புன்னை வனம் - புன்னை வனத்திலுள்ள, மேகமே-கொடை கொடுத்தலால் மேகம் போன்ற வள்ளலே!, உண்மை என - நான் கூறும் நீதியை மெய்யான தென்றுன்னி, கேளாய் - கேட்கக்கடவாய்! ('அக்கஞ் சுருக்கேல்,' என்று ஔவை கூறிய நீதியைக் கடைப்பிடித்து உலகத்தில் எவரும், சுற்றத்தைத் தம்மிலுஞ் சுருங்கச் செய்யாது விருத்தியாகச் செய்யவேண்டும்; அங்ஙனஞ் செய்யின் அச் சுற்றத்தின் உதவியால், ஆபத்து வந்த காலத்தில் அதனை யகற்றி மேன்மையடையலாம்; இந்நீதிபற்றி) சிட்டு - ஒரு சிட்டுக் குருவியும், தன் புத்தியினால் - சுற்றந் தழுவி வாழ்ந்த தன்னுடைய சிறந்த புத்தியினாலே, மை - நீரையுடைய, கடல் கொள் - கடலாற் கொள்ளப் பட்ட, முட்டைதனை - தன்னுடைய முட்டையையும், வாங்குவோம் என்று - மீண்டும் பெற்றுக்கொள்வோமென் றுறுதிகொண்டு, புக்கு - அக் காரியத்திற் புகுந்து, (தன் முட்டையை மீளப் பெற்று) அதனை - அக் கடலை, வென்றது - அவமானப்படுத்தி

வெற்றிகொண்டது; (ஆதலின்) அக் கதைபோல் - அந்தச் சரித்தி ரத்தைப்போல, (நீயும்) அக்கம் சுருக்கேல் - சுற்றத்தை உன்னி லுஞ் சுருங்கச் செய்யாதே, (விருத்தி யாகும்படி செய்து அச் சுற் றத்தின் உதவிகொண்டு உற்ற சமயத்தில் மிக்க மேன்மை யடை வாயாக.)

(வி - ரை) மைக்கடல் - இரண்டாம் வேற்றுமை யுருபும் பயனு முடன்றொக்கதொகை. 'முட்டைதனை' என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. 'சிட்டு' என்பதில் இழிவுசிறப்பும்மை தொக்கது. வேளாளர் புன்னைவனம் - இரண்டாம் வேற்றுமைத் தொகை; 'யரழமுன்னர்...' என்னுஞ் சூத்திரத்தில், 'மேல்' என்ற மிகையால் வேற்றுமையில் ரகரமெய்யின் முன் வலி இயல்பாதல் கொள்ளப்பட்டது. மேகம் - உவமையாகுபெயர்; இவன் மேகத் தைப் போன்று பயன் கருதாது கொடை கொடுக்கும் வள்ளலாத லின் இவனுக்கு மேகம் உவமையாயிற்று. கேளாய் - ஏவல் வினை முற்று.

சிட்டின் கதையாவது:—ஆணும், பெண்ணுமாகிய இரண்டு சிட்டுக்கள் சமுத்திரக் கரையின் ஓரத்திலுள்ள ஒரு செடியில் கூடு கட்டி அதில் வாழ்ந்துகொண்டிருந்தன. அப்படி யிருக்கும்போது பெட்டைக்கு முட்டையிடுந் தருணம் வந்தபடியால் அப் பெட்டை ஆணை நோக்கி, "எங்கே முட்டையிடலாம்?" என்று வினவ, ஆண், "இதுவே முட்டை யிடுதற்குத் தகுதியான இடம்; இங்கே யிட லாம்," என்று கூறிற்று. அதைக் கேட்டுப் பெண்சிட்டு, "இந்தக் கடற்கரையிலே முட்டை யிட்டால் ஒருவேளை அபாயம் நேரிடக் கூடும்; கடல், முட்டைகளை அடித்துக்கொண்டு போய்விட்டால் என்ன செய்வோம்?" என்று பயந்து சொல்ல, ஆண் சிட்டு தன் சுற்றத்தை மிகவும் தழுவிக்கொண் டிருப்பதா லேற்பட்ட வல்ல

மையைக் கொண்டு மிக்க தைரியத்துடனே பெண்சிட்டை நோக்கி, "பெண்ணே! சமுத்திரத்திற்கு என்னோடு பகைத்துக் கொள்ளச் சாமர்த்திய மில்லை; நம்முடைய முட்டைகளை அடித்துக்கொண்டுபோதல் அதனால் முடியாது," என்று கூறிற்று. அதற்குப் பெண்சிட்டு, "உனக்கும் சமுத்திரத்திற்கும் வெகு தாரதம்மிய மிருக்கின்றது; நீ உன்னுடைய நிலைமையைச் சிறிதுங் கருதாமல் பேசுகின்றாய்; பின் வருவதை ஆராய்ந்து எந்தக் காரியத்தையும் செய்யவேண்டும்," என்று சொல்ல, மீண்டும் ஆண்சிட்டு, "என்னுடைய வல்லமை உனக்குத் தெரியாது; நீ என் சொற்படியே இவ்விடத்திற்றானே முட்டையிடு," என்று கூறிற்று. அதன்மேல் பெண்சிட்டு, அவ்விடத்திலேயே முட்டையிட்டது.

அவ்வாறு முட்டை யிட்டவுடனே சமுத்திரமானது அந்த ஆண்சிட்டின் வல்லமையை உணராமல் ஒரு சமயத்தில் அதன் முட்டைகளை அடித்துக்கொண்டு போய்விட்டது. அங்ஙனம் முட்டைகள் போனவுடனே பெண்சிட்டு மிகவும் மனவாட்டத்தை யடைந்து, ஆண்சிட்டை நோக்கி, "சுவாமி! நான் கூறிய வார்த்தைகளைக் கேளாமல் நீர் இவ்விடத்திலேயே முட்டையிடச் சொன்னீரே; இப்பொழுது நான் சொல்லியபடி சமுத்திரம் முட்டைகளை அடித்துக்கொண்டு போய்விட்டதே; இனி இந்தச் சங்கடத்திற் கென்ன செய்வோம்?" என்று கூறிற்று. அதைக் கேட்டுச் சேவல், "பெண்ணே! நீ பயப்படாதே; நான் முட்டைகளை விரைவிற் கொண்டுவருவேன்; என்னுடைய வல்லமையைப் பார்," என்று சொல்லி, தான் மிகுந்த சுற்றச்சேர்க்கை யுடையதா யிருந்தபடியால், உடனே தன் சுற்றமாகிய எல்லாப் பறவைகளையும் அழைத்துக்கொண்டு கருடனிடம் சென்று வணங்கித் தன்னுடைய குறையைக் கூறிற்று. உடனே கருடன் அதைக் கேட்டுத் தன் இறைவனாகிய விஷ்ணுவினிடம் தெரிவித்து, "இந்தப் பறவை

முட்டைகளை யிழந்ததால் மிகவும் வருந்துகின்றது; ஆதலால், சமுத்திரத்திற்குக் கட்டளையிட்டு அதனுல் முட்டைகளை இதற்குக் கொடுப்பிக்கவேண்டும்,'' என்று கூறிற்று. அக்கருடன் வார்த்தைகளைக் கேட்டவுடனே மகாவிஷ்ணு, சமுத்திரத்தை யழைத்து, "சீக்கிரமாக இந்தச் சிட்டின் முட்டைகளை இதனிடம் கொடுத்துவிடு,'' என்று கட்டளையிட்டனர். உடனே சமுத்திரம் அவமானத்துடனே மறு வார்த்தை பேசாமல் அம் முட்டைகளைக் கொண்டுவந்து சிட்டினிடம் கொடுத்தது. அதன்மேல் அந்த ஆண் சிட்டும், பெட்டையும் கூடி மகிழ்ந்து சந்ததிகளை விருத்திசெய்து வாழ்ந்தன. (இக் கதை பஞ்சதந்திரம் மித்திரபேதத்தில் உள்ளது.)

---

## "கண்டொன்று சொல்லேல்."

என்பதற் கேற்ப மெய்ம்மை கூறுதலின் உயர்வை விளக்கும்

## சத்தியவிரதன் கதை.

14. கள்ளமின்றி முன்னே கனசத் தியவிரதன்[மையோய்!
உள்ளதுசொல் லிக்கலந்தா னேர்வழியைத்—தெள்ளி
மாதனதா புன்னைவன வள்ளலே மேலெண்ணு
வேதுங்கண் டொன்றுசொல் லேல்.

(ப - ரை) தெள்ளிமையோய் - அறிவை யுடையவனே!, மா - சிறந்த, தனதா - (செல்வத்திற்) குபேரனே! புன்னைவனம்- புன்னை வனத்திலுள்ள, வள்ளலே - ஈகைத்தன்மையிற் சிறந்தவனே! ('கண்டொன்று சொல்லேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும், ஒன்றைக் கண்டு பின்னர் அதற்கு மாற்றமாக அதை மறைத்து வேறொன்றை அதாவது பொய்யைக் கூற லாகாது; அங்ஙனங் கூறின் மிகுந்த பாவ முண்டாய் வாழ்வு குன்றும்; ஆத

லின், மெய்யையே கூறவேண்டும்; மெய் கூறுவார்க்கு உயர் பதவி கிடைப்பது நிச்சயமாகும்; இந் நீதியை அனுசரித்தே) முன்னே- ஆதியில், கனம் - பெருமை பொருந்திய, சத்தியவிரதன் - சத்திய விரத னென்பான், கள்ளம் இன்றி- நெஞ்சிற் கபடில்லாமல், உள் ளது சொல்லி - நடந்ததையே கூறிவந்து அவ் வழக்கத்தைக் கைக் கொண்டு, ஓர் வழியை - ஒப்பற்ற நன் மார்க்கத்தை, கலந்தான் - சார்ந்தான்; (ஆதலால், நீயும்) மேல் எண்ணு - மேல் வருந் தீங்கை நினைத்து, எதும் கண்டு - எதையும் நடக்கக்கண்டு, ஒன்று - (அத ற்கு மாற்றமாக) வேறொன்றையும், சொல்லேல் - பொய்யாகக் கூறுதே, (இந் நீதியைக் கடைப்பிடித்து உண்மையையே சொல்வாயாக.)

(வி - ரை) எண்ணு - செய்யாவென்னும் வினையெச்சம். சத்தியவிரதன் கதையாவது:—கோசல தேசத்திலிருந்த தேவ தத்த னென்னும் வேதியன் புத்திர னில்லாமல் ஒரு சமயம், கோ பிலரிஷியை யுத்காதாவாக இருத்திப் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்ய அப்போது அந்த ரிஷி அடிக்கடி சுவாசத்தை விட்டு அபசுர மாகச் சாமகானஞ் செய்துவந்தனர். தேவதத்தன் அதைக் கண்டு கோபிக்க, அம் முனிவர் அவனை நோக்கி, "நீ இப்போ தென்னைக் கோபித்தனை யாதலால் உனக்குப் பிறக்கும் புத்திரன் ஊமையும், மூடனு மாகக்கடவன்," என்று சபித்துப் பின்னர் அவ் வேதி யன் அம் முனிவரை வணங்கி அவரிடம் தனக் கருள்புரிமாறு வே ண்டியபடியால், அவன்மீ திரங்கி, அவனை நோக்கி, "உன் பிள்ளை என் சாபப்படி பிறந்தாலும் சில தினங்கள்வரை மூடனுயிருந்து. பின்னர்ச் சிறந்த வித்வானுவன்," என்று கூறிச் சென்றனர்.

அதன்மேல், அவ் வேதியன் மனைவியாகிய ரோகணியென் பாள் ஒரு புத்திரனைப் பெற்றனள். இவனே சத்தியவிரதனென் பான்; இவனைப் பெற்றபின் தாய்தந்தையர் இவனுக்கு உதந்தி

யன் எனப் பெயரிட்டு வளர்த்து எட்டாவது வயதில் உபநயனம் முதலியன செய்து வேதாத்தியயனம் செய்யத் தொடங்கி இவன் வாயில் ஓரெழுத்தேனும் நுழையாமல் ஊமையாயிருக்க, அதனல் மனம் வருந்தி வெட்கத்தை யடைந்து, இவனை வெளியில் விடாமல் வீட்டிற்குள் வைத்திருந்தனர். அப்போது பலரும் இவனை அவமதித்தனர். அதனல் இவன் ஒரு நாள் வீட்டைவிட்டு வெளியேறிக் கங்காதீரத்தை யடைந்து ஓராச்சிரமம் ஏற்படுத்தி அதிலிருந்து பொய்சொல்லா விரதம் பூண்டு பதினன்கு வருடங்கள் காலங் கழித்துவந்தான். அப்படி யிருக்கும்போது ஒரு தினம் ஒரு பன்றியானது வேடனு லடிபட்டுப் பயந்தோடி வந்து இவன் சமீபத்தைச் சார்ந்தது. அப்போது இவன் ஊமை யாதலால், 'ஹ்ரு' என்னும் தேவி மந்திரமாகிய சப்தம் வாயி லுண்டாகும்படிக் கூச்சவிட்டான். அதைக் கேட்டுப் பன்றி ஒரு பக்கத்தில் மறைந்தது. அச் சமயத்தில் அதனைத் தொடர்ந்து வந்த வேடன், உதத்தியன் என்னும் இந்தச் சத்திய விரதனை நோக்கி, "சுவாமி! இந்தப் பக்கத்தில் ஒரு பன்றி ஓடிவந்ததே; அஃதுமக்குத் தெரிந்திருக்கலாம்; நீர் சத்தியவிரதராகையால் அது சென்ற விடத்தை உண்மையாகக் கூறவேண்டும்," என்று வினவ, இந்தச் சத்தியவிரதன் அப்போது, "நாம் பன்றி சென்ற விடத்தைத் தெரிவிப்போமாயின், கொலைப்பாவம் நேரும்; சொல்லாதிருந்தால் பொய் கூறின குற்றம் சம்பவிக்கும்; இந்தத் தர்மசங்கடத்திற் கென்ன செய்கிறது?" என்று யோசித்து, சொன்னதிலும் சாராமல் சொல்லாதிருத்தலிலும் சாராமல் பன்றியிருக்கும் திசையைப் பார்த்து முன் சொன்னபடியே, 'ஹ்ரு! ஹ்ரு!!' என்று சப்தமிட்டான். இது தேவிபீஜ மந்திரமாகையால், இதை உச்சரித்ததின் பொருட்டுத் தேவி பிரசன்னமாகி இவனுக்கு வித்தையைக் கொடுத்துச் சென்றனள். அதன்மேல் இவன் மகா பண்டிதனுயினுன்.

———

"ஙப்போல் வளை."

என்பதற் கேற்பச் சுற்றந் தழுவுதலின் உயர்வை விளக்கும் காக்கைகளின் இயல்பு.

15. தீதி லரிட்டங்கள் செய்யவுண வைக்கொள்ள
மேதினியிற் றம்மினத்தை மேவுதலால்—நீதிநெறி
போற்றுபுகழ்ப் புன்னைவன பூபாலா வுற்றுரை
மாற்றிருமெய் ஙப்போல் வளை.

(ப - ரை) நீதி நெறி - தருமமார்க்கத்தை, போற்று - ஆதரித்து வளர்க்கின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவன பூபாலா - புன்னை வனத்திற் கதிபதியே! ('ஙப்போல் வளை,' என்று ஔவை கூறிய நீதிப்படி, பயனற்ற தன் இனமாகிய வெழுத்துக்களையும் தன்னோடு சேர்த்துத் தழுவிக்கொண்டிருக்கும் ஙகரத்தைப் போலவே, மக்களாயினோர் தம் சுற்றத்தவர் பயனற்றவர்களாயிருப்பினும் அவர்களைத் தழுவிக்கொள்ள வேண்டும்; அங்ஙனஞ் சுற்றந் தழுவியிருந்தால் எத்தகைய பகைவரையும் அஞ்சச் செய்வதோடு சமயத்தில் பெருங் காரியங்களையும் செய்து முடிக்கலாம்; இந் நீதிக் கிணங்க) தீது இல் - குற்றமற்ற, அரிட்டங்கள் - காகங்களும், செய்ய - செம்மையாகிய, உணவைக் கொள்ள - ஆகாரத்தை உட்கொள்ளுதற்கு, மேதினியில் - இப் பூமியில், தம் இனத்தை - தங்கள் சுற்றத்தை, (கூவி யழைத்து) மேவுதலால் - அச் சுற்றத்துடனே சேர்தலாலே, (ஒற்றுமை யுடையனவென்று பலராலும் கொண்டாடப்படும் நற்பெயரையும், எவற்றிற்கும் அஞ்சாத் தன்மையையும் அடைந்திருக்கின்றன; ஆதலால், நீயும்) மால் - பெருமை பொருந்திய, திரு - அழகிய, மெய் - மெய்யாகிய, ஙப்போல் - ஙகரத்தைப்போல, உற்றுரை - உறவினரை, வளை - சூழ்ந்து தழுவிக்கொள்வாயாக.

(வி - ரை) 'அரிட்டங்கள்' என்பதில், இழிவு சிறப்பும்மை தொக்கது. செய்ய - செம்மைய வென்னும் பண்புச்சொற் றிரிபு. கொள்ள - வினையெச்சம்; மேவுதலால் என்பதனோடு முடிந்தது. ஙகரமானது ஙனம் என்னும் இடப்பொருளைக் காட்டும் மொழியில் மாத்திரம்முச்சுட்டுக்களோடு சேர்ந்து மொழிக்கு உறுப்பாக வரும்; ஙகரமெய், அங்கு, இங்கு, தங்கு என்னும் பல மொழிகளுக் கிடையில் வரும்; மற்றைய ஙகரவர்க்க எழுத்துக்கள் மொழிக்கு உறுப்பாக எவ்விடத்தும் வரமாட்டா. எல்லாப் பிராணிகளினும் காக்கைகள் மிகவும் இனவொற்றுமை யுடையவைகள்; இவற்றுள் ஒரு காகமானது எங்கேனும் ஓர் ஆகாரத்தைக் கண்ணுறின் தானே தனித்துண்ணமாட்டாது; தன்னினமாகிய காகங்களைக் கூவிச் சில காகங்களேனும் வந்த பின்பு அவற்றோடு சேர்ந்துதான் உண்ணும்; இன்னும் இக் காகங்கள் தம்மினத்தில் ஒரு காகம் இறந்துவிட்டால் எல்லாம் ஒன்றுகூடித் துக்கங்கொண்டாடிக் கதறி ஸ்நானஞ் செய்து தம்மின வொற்றுமையைக் காட்டும்; இவ்விதம் இவை ஒற்றுமை யுடையனவா யிருத்தலால், எவற்றிற்கும் அஞ்சுவதில்லை; இவைகளுக்கு எதிலும் முன் ஜாக்கிரதை யுண்டு. இன்னும் இவை இராஜாளிக்கும் அஞ்சாமல், மற்றப் பறவைகளுக்கு அபாயக்குறி காட்டி அவற்றையும் காப்பாற்றும்.

---

"சனி நீராடு."

என்பதற் கேற்ப, எண்ணெய் ஸ்நானஞ் செய்தற்குச் சனியும், புதனும் உரியன வென்பது.

16. ஞாயிறுயிர்க் கீறு திங்க ணம்பாருள் செய்கிலர்செவ்
வாய்பிணிதுக் கங்குருநாள் வாழ்வுபோங்—தூபவெ
போடிவைகள் புன்னைவன பூபாலா மிக்கபுத [ள்ளி
னோடு சனிநீரா டு.

(ப - ரை) புன்னைவன பூபாலா-புன்னைவனத்திற் கிறைவனே!, ('சனிநீராடு,' என்று ஔவை கூறிய நீதிப்படி சனிவாரத்திலேயே எண்ணெய் ஸ்நானஞ் செய்யவேண்டும்; எள் முதலியன சனிக்குப் பிரீதியாதலால், அந்தச் சனிவாரத்தில் எள்ளெண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்வதால் சனி தோஷ முதலியன நீங்கி நல்ல சுக முண்டாகும்; இங்ஙனம் சனி சிறந்ததா யிருப்பினும் புதனும் அதைப்போல் நன்மை யுடையதாதலின், அப் புதனிலும் எண்ணெய் ஸ்நானஞ் செய்யலாம்; மற்ற வாரங்களோ எண்ணெய் ஸ்நானத்திற்குப் பொருத்த முடையவைகளல்ல.) ஞாயிறு-ஆதிவாரத்தில் (ஸ்நானஞ் செய்வதால்), உயிர்க்கு ஈறு - உயிருக்கு முடிவுண்டாகும்; திங்கள் - சோமவாரத்தில், நம்பர் - சிவபெருமானர், அருள் செய்கிலர் - கிருபையைச் செய்யமாட்டார்; செவ்வாய் - செவ்வாய்க்கிழமையில், பிணி - நோயுண்டாம்; குருநாள் - வியாழக்கிழமையில், துக்கம் - விசனம் அதிகரிக்கும்; தூய வெள்ளி - சுத்தமாகிய வெள்ளிக்கிழமையில், வாழ்வு போம் - சுக வாழ்க்கை விட்டு நீங்கும்; (ஆகையால்), இவைகள்-இவ் வாரங்களை, போடு - விட்டுவிடுவாயாக; மிக்க - சுக மிகுந்த, புதனோடு - புத வாரத்துடனே, சனி - சனிவாரத்தில், நீராடு - எண்ணெய் தேய்த்து நீரில் ஸ்நானஞ் செய்யக்கடவாய்.

(வி - ரை) ஞாயிறு, திங்கள் முதலியன ஏழாம் வேற்றுமைத் தொகைகள். ஞாயிறுக்குப் பின் எச்சமாக வருவித்த, 'ஸ்நானஞ் செய்வதால்,' என்னுஞ் சொல்லை ஒவ்வொரு வாரத்திற்குப் பின்னாலுங் கூட்டுக. 'ஈறு' என்பதற்குப் பின், 'உண்டாகும்' என்னும் சொல் எச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. 'பிணி,' 'துக்கம்' என்பவைகளுக்குப் பின்னும் இவ்வாறே கூட்டி முடிக்க. 'செய்கிலர்' என்பதில் கில் - ஆற்றற் பொருண்மை விகுதி; இதன் பின் எதிர்மறை ஆகாரங் கெட்டுச் செய்கிலர் என்றாயது. 'புதனோடு' இதிலுள்ள ஒடு எண்ணொடு.

"ஞயம்பட வுரை."

என்பதற் கேற்ப, இன்ப முண்டாகப் பேசுதலின்
உயர்வை விளக்கும்

பட்டினத்துப்பிள்ளை யியல்பு.

17. தொட்டடித்தோ னன்றிசெய்த தூயோ னிருவருக்
பட்டினத்துப் பிள்ளை பகர்ந்ததுபார்—மட்டுலவுந்[கும்
தென்பாகை புன்னைவன தீரனே யாரிடத்தும்
அன்பாய் ஞயம்படவு ரை.

(ப - ரை) தென்-அழகிய, பாகை-தலைப்பாகையை யுடைய, மட்டு உலவும் - மரங்களி லார்ந்த மலர் முதலியவைகளிலிருந்து தேன் பாய்ந்து மெல்லப் பூமியில் ஊர்ந்து செல்லும் சிறப்பு வாய்ந்த, புன்னைவன தீரனே - புன்னைவனத்தி லிருக்கின்ற தீர முடையவனே!, ('ஞயம்பட வுரை,' என்னும் ஔவை நீதியை அனுசரித்து மனிதர், எவரிடத்தும் இனிமை யுண்டாகும்படி நல்ல வார்த்தைகளைப் பேசவேண்டும்; அங்ஙனம் பேசிவரின் பலர் நேயமும் ஏற்பட்டு இம்மையில் நன்மையும், மறுமையில் மேன்மையு முண்டாகும்; இதுபற்றியே)பட்டினத்துப்பிள்ளை-பட்டினத்தடிகளும், தொட்டு அடித்தோன்-தம்மைத் தீண்டி வருந்தும்படி அடித்தவனும், நன்றி செய்த - தமக்கு நன்மையைச் செய்த, தூயோன் - பரிசுத்த முடையவன் (ஆகிய), இருவருக்கும் - இரண்டுபேருக்கும், (சமமாகப்) பகர்ந்தது - நன்மொழி கூறியதை, பார் - நீ ஆராய்ந்து பார்ப்பாயாக; (அஃதிவ்வாறு நன்மை யுடையதாயிருத்தலாலே) யாரிடத்தும்-எவரிடத்திலும், அன்பாய் - பிரியமாகி, ஞயம்பட - இனிமை யுண்டாக, உரை - பேசுவாயாக.

(வி-ரை) 'பட்டினத்துப்பிள்ளை' என்பதில் உயர்வு சிறப்பும்மை தொக்கது. 'ஞயம்பட வுரை,' என்று ஔவை கூறிய நீதிப்படி தீங்கு செய்தோர், நன்மை செய்தோர் ஆகிய இருவரிடத்தும்

சமமாகவே இனிய மொழி கூறவேண்டு மென்பது இதன் கருத்து. இரண்டிடத்தும் நன்மை மொழி கூறிய பட்டினத்தடிகள் சரித்திரமாவது:—

திருவெண்காட ரென்னும் பட்டினத்தடிகள், எல்லாச் செல்வங்களையும் நீத்து வெளியேறிப் பல விடங்கட்கும் போய் ஆங்காங்கே பல அற்புதங்களை நடத்தி, ஒரு சமயம் கொங்குநாடு சென்றிருந்தபோது அங்குள்ள பேரையூர், அவிநாசி, முருகன்பூண்டி முதலிய திருப்பதிகட்குப் போய்ச் சிவபெருமானைத் தொழுது, வாய்பேசா மௌனவிரதத்தை யனுஷ்டித்து அந்நாட்டிற் சஞ்சரித்தார். அவ்வாறு சஞ்சரிக்கும்போது ஒருநாள் பாதி யிரவில் அவருக்கு வடவைக் கனல்போலப் பசித்தீ யெழுந்து வருத்தத்தை யுண்டாக்கியபடியால், அவர் அதைத் தாங்க முடியாமல், அப் பசி நோயைத் தணித்துக்கொள்ளும் பொருட்டு, ஒரு மூர்க்கனுடைய வீட்டுத் தலைவாயிலில் நின்று கையைத் தட்டித் தமக் கேதாவது கொடுக்கும்படி சாடை காட்டினூர். அதைக் கண்டவுடன் அம் மூர்க்கன், அவருடைய பெருமையை உணராமல் அவரைத் தன் மனைவிபால் வந்த காமக்கள்வனென் றெண்ணி, உடனே ஒரு தடியை யெடுத்துக்கொண்டு ஓடிவந்து அவர்மீது மாறி மாறி யடித்துத் தீங்கு செய்தான். அப்போது, பட்டினத்தார், நின்ற நிலை பெயராமல், 'சிவ! சிவ!!' என்று சொல்லிக்கொண்டு நின்றூர்.

அப்போது இச் செய்கையை, அடுத்த வீட்டுப் புறந்திண்ணையிற் படுத்துப் பார்த்துக்கொண்டிருந்த அவ் வீட்டுக்காரன், பட்டினத்தடிகளை மகானென்று நினைத்து ஓடிவந்து அம் மூர்க்கனை விலக்கி, "அடா அறிவிலியே! இவர், சிவயோகத்திற் சிறந்த பெரியவரன்றோ? இவர்க்கேனிந்தத் தீங்கு செய்தனை?" என்று அவனை நிந்தித்துப் பேசிவிட்டுப் பட்டினத்தடிகளை வணக்கத்

துடனே அழைத்துச் சென்று தன் வீட்டில் அவருக்குத் திருவமுது படைத்து அவர் பசிப்பிணியைத் தணிவித்து உபசரித்தான். இங்ஙனம் இருவர் செய்கைகளையுங் கண்டும் அவர், ஒருவனை நிந்தித்தும், ஒருவனைப் புகழ்ந்துங் கூருமல் பொதுவாகச் சிவபெருமானுடைய திருவருளை மாத்திரம் நினைத்து,

"பூணும் பணிக்கல்ல பொன்னுக்குத் தானல்ல பூமிதனைக்
காணும் படிக்கல்ல மங்கையர்க் கல்லநற் காட்சிக்கல்ல
சேணுங் கடந்த சிவனடிக் கல்லவென் சிந்தைகெட்டுச்
சாணும் வளர்க்க வடியேன் படுந்துயர் சற்றல்லவே."

என்றும்,

"இருக்கு மிடந்தேடி யென்பசிக் கேயன்னம்
உருக்கமுடன் கொண்டுவந்தா லுண்பேன் - பெருக்க
அழைத்தாலும் போகே னரனே யென்றேக
மிளைத்தாலும் போகே னினி."

என்றும் கூறிச் சென்றனர். இச்செய்யுட்களால் இவர் இரண்டிடத்தும் நன்மையான வார்த்தைகளையே கூறினது உணரப்படும்.

---

## "இடம்படவீடிடேல்."

என்பதற் கேற்பக் கூறும் வீட்டியல்பு.

18. நித்தியமாம் வீட்டு நெறியிவிடம் பாடல்லாற்
பொய்த்தவின்ப வீட்டிற் பொருளடையா—நத்தம்
நடையறியும் புன்னைவன நாதனே பூமி
யிடையிடம் படவீடி டேல்.

(ப - ரை) அத்தம்-அறநூல்களிலுள்ள சொற்பொருளையும், நடை - உலகவொழுக்க நடையையும், அறியும் - தேர்ந்து அவற்

றின்படி நடக்கின்ற, புன்னைவன நாதனே - புன்னை வனத்திற்குத் தலைவனே!, நித்தியமாம் - நிலையாகிய, வீட்டு நெறியில்- மோக்ஷவழியில், இடம் - விசாலமாகப் பெறும் இடம், பாடு அல்லால் - பெருமையை யுடையதே யல்லாமல், பொய்த்த - பொய்ம்மையாகிய, இன்பம் - உலகவின்பத்தையுடைய, வீட்டில் - விசாலமாகிய இல்லத்தினாலே, பொருள் அடையாது - பெருமை யென்னும் பொருள் கைகூடாது; (ஆதலால், மோக்ஷவீட்டின் இடத்தை விசாலமாகப் பெறவேண்டும்; உலகவீட்டின் இடத்தைச் சுருக்கமாகப் பெறவேண்டும்; உலகவீட்டைச் சுருக்கிக் கட்டினாற்றான், அது சிதைவுறுங் காலத்தில் விரைவிற் புதுப்பிக்கவும், ஜனங்கள் நிறைந்து இலட்சணமாக வாசஞ் செய்யவும், அது சம்பந்தமாக அதிக பணச் செலவில்லாதிருக்கவும் சௌகரியமா யிருக்கும்; விசாலமாக வீட்டைக் கட்டினால், அதில் நிறைந்த ஜனங்கள் வாசஞ் செய்யாமையால் மூதேவி வாசஞ் செய்தற் கேதுவாம்; அது பழமையாயின் விரைவிற் புதுப்பிக்க ஏது விராது; அது நிறைய விளக்கேற்றவேண்டுமானால் அதிகச் செலவு பிடிக்கும்; அந்த வீட்டினால் யாதொரு பயனு மில்லாமல் நஷ்டத்திற்கே ஏதுவாம்; இது பற்றியே ஔவையார், 'இடம்பட வீடிடேல்,' என்று கூறினர். ஆகலின், நீயும்) பூமியிடை-இந்த மண்ணுலகத்தி னிடத்தே, இடம்பட - விசாலமான இட முண்டாகும்படி, வீடு இடேல் - வீட்டைக் கட்டாதே.

(வி - ரை) உலகத்தில் வீட்டை விசாலமாகக் கட்டுவதால் ஒரு பயனு மில்லை; இது எப்பொழுதும் நிலையற்றது. என்றும் அழியாமல் நிலைபெற்றதாகிய மோக்ஷவீட்டிலேயே விசாலமான இடத்தைப் பெறுதற்கு முயற்சி செய்யவேண்டும்; அங்ஙனம் செய்து முத்திவீட்டில் விசாலமாகிய இடம் பெற்றால் என்றும் சுகத்துடனே நிலைபெற்று வாழலாம் என்பது இச் செய்யுளின்

கருத்து. பூமியிடை - ஏழாம்வேற்றுமை விரி; இடை ஏழனுருபு.

---

"இணக்கமறிந் திணங்கு."

என்பதற் கேற்ப, நல்லுறவு கொள்ளாமல், கூடாநட்புக் கொள்ளுவதா லுண்டாந் தீங்கை விளக்கும்

விக்கிரமாதித்தன் கதை.

19. செய்யபுகழ் விக்கிரமா தித்தனொரு தட்டாரப்
பைய லுறவுபற்றிப் பட்டதனல்—வையம்
மணக்குஞ்சீர்ப் புன்னை வனநாதா நீயும்
இணக்க மறிந்திணங் கு.

(ப-ரை) வையம் - பூமியில், மணக்கும் கூடுகின்ற, சீர் - சிறப்பினையுடைய, புன்னைவனநாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, ('இணக்கமறிந் திணங்கு,' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும், ஒருவரிடத்தில் இருக்கும் நற்குணப் பொருத்தத்தை யறிந்து அவரோடு சேரவேண்டும்; அங்ஙனமின்றிக் கெட்டவரோடு சேர்ந்தால் எத்தகைய வல்லமையுடையார்க்கும் தீங்குண்டாகும்; இங்ஙனம் ஆராய்ந்து நல்லவரோடு சிநேகஞ் செய்யாததனாலே விக்கிரமாதித்தனும் ஒருகாலத்தில் துன்பமுற்றான்; அங்ஙனம்) செய்ய - செம்மையாகிய, புகழ் - கீர்த்தியையுடைய, விக்கிரமாதித்தன் - விக்கிரமாதித்த னென்னும் அரசனும், ஒரு தட்டாரப்பையல் - ஒரு கம்மாளப் பையனுடைய, உறவு பற்றி - சிநேகங் கொண்டு, பட்டதனல் - துன்பத்தை யடைந்ததனாலே, நீயும்—, (உலகத்தில்) இணக்கம் - ஒருவரிடத்தே யிருக்கும் நற்குணப் பொருத்தத்தை, அறிந்து - ஆராய்ந்துணர்ந்து, (அந் நற்குண மிருப்பவரோடு) இணங்கு-சேர்ந்து உறவு கொள்ளுவாய், (கெட்டவருறவு கொள்ளாதே.)

(வி-ரை) பையல் - பைதல் என்பதன் திரிபு. விக்கிரமாதித்தன் என்பதில் உயர்வுசிறப்பும்மை தொக்கது. தட்டா னுறவால் துயரடைந்த விக்கிரமாதித்தன் கதையாவது:—விக்கிரமாதித்தனும் பட்டியும் காடாறுமாதஞ் சென்றிருந்த காலத்தில், விக்கிரமாதித்தன் அபரஞ்சி யென்னுந் தாசியுடனே உறவு கொண்டு, அவளைத் தன்மீது மிக்க விசுவாச முடையவளென்று நினைத்துப் பட்டியால் அவள் அன்பற்றவ ளென்பதை யுணர்ந்து பின்னர் அவளை விட்டு நீங்கித், தன் மனைவியாகிய எலாகரம்பையுடன் ஒரு இராட்சதன் சிநேகமா யிருப்பது தெரிந்து நகரத்துட் சென்று அவனைச் சங்கரித்து, திரும்பி ஒரு காட்டில் தங்கி, காடாறுமாதத் தவணையில் இருபத்தைந்து நாட்கள் மீதி யிருந்தபடியால், அந் நாட்கள் கழியும்வரை தான் அங்கிருப்பதாகவும், பட்டியை நகரத்துக்குச் சென்று அரசாட்சி செய்யும்படிக்கும் சொல்லிப் பட்டியைப் பட்டணத்திற் கனுப்பிவிட்டுத் தான் அங்கே யிருந்தான்.

முன்னொருகாலத்தில் விக்கிரமாதித்தன் தன்னகரத்தி லிருந்த விஜயனென்னுங் கம்மாளனுடன் உறவு கொண்டு பட்டி தடுத்தும் கேளாமல் கூடுவிட்டுக் கூடு பாய்தல் முதலிய எல்லா வித்தைகளையும் அவனுக்குக் கற்றுக்கொடுக்க, அவன் அவற்றை யெல்லாம் கற்றுக்கொண்டு, விக்கிரமாதித்தனை ஏமாற்றவேண்டுமென்று தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்து, அப்போது நல்ல தருணமாயிருந்தபடியால், பட்டி நகரத்துக்குச் சென்றவுடன், விக்கிரமாதித்தன், தனியே யிருக்கின்று னென்பதை யுணர்ந்து, "நாம் விக்கிரமாதித்தனை மோசஞ் செய்தற்கு இதுதான் நல்ல தருணம்," என்று ஆலோசித்து, உடனே புறப்பட்டுக் காட்டுக்கு வந்து விக்கிரமாதித்தனைக் கண்டு உறவுகொண்டு அவனுட னிருந்தான். அப்படி யிருக்கும்போது ஒரு சமயத்தில் விக்கிரமாதித்தன், தட்டா

னுடைய மடிமீது படுத்துக்கொண்டு அங்குள்ள ஆலமரத்தில் ஆணும் பெண்ணுமாகிய இரண்டு கிளிகளில் ஆண்கிளி யிறக்க, பெண்கிளி வருந்துவதைக் கண்டு அதனுடைய வருத்தத்தை நீக்கக் கருதி, உடனே தன்னுடைய தேகத்தை விட்டு ஆண்கிளியின் உடலிற் புகுந்தெழுந்து அதற்குச் சந்தோஷத்தை யுண்டாக்கினன். அதை யுணர்ந்த கம்மாளன், "நம்முடைய எண்ணத்தை நிறைவேற்ற இதுதான் தருணம்," என்று விரைவில் தன்னுடைய தேகத்தை விட்டு விக்கிரமாதித்தனுடைய உடலிற் புகுந்து, தன் தேக மிருந்தால் அதில் விக்கிரமாதித்தன் புகுந்தெழுந்து வந்து தீங்கு செய்யக்கூடுமென்று கருதி அதனை எரித்துச் சாம்பலாக்கிவிட்டுத் தான், விக்கிரமாதித்தனுடைய செல்வங்களை யெல்லாம் அனுபவிக்கவேண்டுமென்று நகரத்துக்குப் புறப்பட்டுப் போனன். அவ்வாறு செல்லவே, அவன் விக்கிரமாதித்தனுடைய தேகத்தோடு கூடியிருந்தாலும், பட்டி, சில விஷயங்களைக்கொண்டு ஆராய்ந்து அவனைக் கம்மாளனென்றே யுணர்ந்து, விக்கிரமாதித்தன் ஏமாப்புற்றதற்காக வருந்தி, உடனே இராஜரீகத்தை மாத்திரம் நடத்தும் வகை புரிந்து, விக்கிரமாதித்த னிருக்குமிடத்தை யறிய முயற்சி செய்துகொண்டிருந்தான்.

அப்படி யிருக்குங் காலத்தில் கிளியாயிருந்த விக்கிரமாதித்தன் ஆயிரம் கிளிகளுக்குத் தலைமையாயிருந்து ஒருசமயம் வலையிலகப்பட்டுத் தன்னுடைய உபாயத்தினலேயே மற்றக் கிளிகளெல்லாம் தவறிப்போகத் தான்மாத்திரம் வேடன் கையிற் சிக்கி, அவன் கொல்லப்போகுந் தருணத்தில் இனிய வார்த்தைகள் கூறி, அச் சாவினின்றுந் தவறி ஒரு நகரத்திலுள்ள சோமசுந்தரஞ் செட்டியென்பவனிடம் அவ் வேடனல் ஆயிரம் பொன்னுக்கு விலைக்கு விற்கப்பட்டு, அங்கிருந்து விநோதமான தொழில்களை யெல்லாம் நடத்தி முடிவில், கனவிற் கூடியதாகக் கண்டவர்களிடத்தும் ஆயி

ரம் பொன் வாங்கும் ரூபசௌந்தரி யென்னும் தாசியின் நீதியற்ற வழக்கை அவளுக்குப் பிரதிகூலமாகத் தீர்ப்புச் செய்து, அவள் அதனால் கோபங் கொண்டு தன்னுடைய தலையைக் கடிப்பதாகச் சபதங் கூறத் தானும் அவளை மானபங்கப்படுத்துவதாகச் சபதங் கூறி, அதன்மேல் சோமசுந்தரஞ் செட்டியால் அத் தாசியிடம் சேர்க்கப்பட்டு, அவள் தன்னைக் கொன்று கறி சமைக்கும்படித் தன் வேலைக்காரியிடம் கொடுக்க, அவள் கொல்லப்போகுந் தருணத்தில் அவள் கையினின்றுந் தவறித் தான் கூறிய சபதத்தை நிறைவேற்ற, அத் தருணத்தில் பட்டி அங்குச் சென்று விக்கிரமாதித்தனாகிய அக் கிளியை யெடுத்துக்கொண்டு நகரத்திற்குப் போய், கம்மாளன் அந்தப்புர ஸ்திரீகளிடம் செல்வதற்கு ஆட்டுக்கடாச் சண்டை யேற்படுத்தி, அதில் அக் கம்மாளனைச் சார்ந்த ஆட்டுக்கடா விறக்க, அவன் தன்னுடைய கக்ஷியில் ஜெயமுண்டாதற் பொருட்டு விக்கிரமாதித்தனுடலை விட்டு அக் கடாவி னுடலிற் புக, உடனே கிளியுடலி லிருந்த விக்கிரமாதித்தனைத் தன்னுடலிற் புகச் செய்து, தட்டானை நாசப்படுத்தினான். அதன்மேல் விக்கிரமாதித்தன், 'பட்டியின் சொல்லைக் கேளாததால் இத் துன்பம் நேர்ந்தது,' என்று மனந்தேறி யிருந்தான். இச் சரித்திரம் விக்கிரமாதித்தன் கதையில் விரிவாக உணரப்படும்.

---

## "தந்தைதாய்ப் பேண்."

என்பதற் கேற்பத் தந்தை தாய் ஆகியவர்களைப் போற்றுதலின் உயர்வை விளக்கும்

### கருடன், அந்தணன் ஆகியவர்களின் கதை.

20. அனையிடர்தீர்த் தான்கருட னந்தணன்செங் கந்தை
தனையெடுத்துச் சாவு தவிர்த்தான்—இனையவர்போல்
சீராரும் புன்னைவன தீரனே நாடோறும்
பேராரும் தந்தைதாய்ப் பேண்.

(ப-ரை) சீர் ஆரும் - சிறப்புப் பொருந்திய, புன்னைவன நீரனே - புன்னை வனத்திலுள்ள வீரபுருஷனே!, ('தந்தைதாய்ப் பேண்,' என்று ஔவை கூறியபடி மானிடராகப் பிறந்தவர் தாய் தந்தையரைப் பாதுகாக்கவேண்டும்; அவர்கள் தம்மைப் பெற்று வளர்த்து விருத்திசெய்யும் விஷயத்தில் அதிகம் பிரயாசை யெடுத்துக் கொள்வார்களாதலின், வயது தளர்ந்த காலத்தில் அவர்களைப் பாதுகாத்தல் சிறந்த தர்மமாம்; இங்ஙனம் புரிவார்க்கு இம்மையிற் செல்வமும் புகழும், மறுமையில் நற்கதியும் கிடைக்கும்; இதுபற்றியே) கருடன் - பக்ஷிராஜனாகிய கருடன், அன்னை - தன்னுடைய தாயினது, இடர் - அடிமைப்பட்டிருந்ததனாலே ஏற்பட்ட துன்பத்தை, தீர்த்தான் - அவ் வடிமைத் தொழிலை நீக்கி அகற்றினான்; அந்தணன் - ஓர் அந்தணன், செங்கந்தைதனை எடுத்து - செங்கந்தையை யெடுத்து, சாவு - மரணத்தை, தவிர்த்தான் - நீக்கினான்; (ஆதலின்) இனையவர்போல் - இப்பேர்ப்பட்ட தன்மையையுடைய இவர்களைப்போல, (நீயும்) நாடோறும் - தினந்தோறும், பேர் ஆரும் - நற்பெயர் பொருந்துகின்ற, தந்தை - தகப்பனையும், தாய் - அன்னையையும், பேண் - போற்றக்கடவாய்.

(வி-ரை) 'அனை,' 'தனை' என்பன விகாரத்தால் நடுக்குறைந்துவந்தன. இடர் தீர்த்தான் - இரண்டாம் வேற்றுமைத்தொகை. சீர்மை யென்னும் பண்புச்சொல், மை விகுதிகெட்டுச் 'சீர்' என நின்றது. நாள்தோறும் என்பதிலுள்ள 'தோறும்' தொழில் இடங்களின் பன்மைப்பொருளை விளக்கும் இடைச்சொல்.

கருடன் அன்னை யிடர்தீர்த்த கதையாவது:— தக்ஷப்பிரஜாபதியின் புத்திரிகளும், காசிபர் மனைவியருமாகிய அதிதி, திதி, தனு, அநாயு, பிரதை, முனி, சுரசை, இளை, குரோதவசை, தாமிரை, சுரபி, விநதை, கத்துரு ஆகிய பதின்மூவர்களிலும்; விநதை, கத்துரு ஆகிய இருவரும் புத்திர சந்தானத்தை விரும்பித் தம்

முடைய கணவரை நோக்கி ஒரு காலத்தில் கந்தமாதனச் சாரவில் தவஞ்செய்யக் காசிபர் பிரசன்னமாகி, அவர்களை நோக்கி, "நீங்கள் விரும்பியது யாது?" என்று வினவ, அவர்களுள் விநதை, "யாவராலும் வெல்ல முடியாத இரண்டு புத்திரரைப் பெறக் கிருபை செய்யவேண்டும்," என்றனள். கத்துரு, "சிறந்த பராக்கிரமத்தையுடைய நூற்றுநாலு புத்திரரையும், ஒரு புத்திரியையும் பெறக் கிருபை செய்யவேண்டும்," என்றனள். அதைக் கேட்டுக் காசிபர் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்து, அதிற் கிடைத்த பிண்டத்தை அவர்களிடங் கொடுத்துச் சென்றார். பின்னர் அவ் விருவரும் கருப்பமுற்றிருந்து விநதை யென்பவள் இரண்டு முட்டைகளையும், கத்துரு நூற்றைந்து முட்டைகளையும் பெற்றார்கள். இம் முட்டைகளில் கத்துரு ஈன்ற நூற்றைந்து முட்டைகளும், ஐந்நூறு வருஷ காலஞ் சென்றபின் வெடித்து அவற்றிலிருந்து ஆதிசேஷன், வாசுகி முதலாகிய நூற்றுநான்கு நாகரும், சலர்க்காரை யென்னும் ஒரு புத்திரியும் உதித்தார்கள். இவ்வாறு கத்துருவுக்குப் புத்திரருண்டாகவே, விநதை "நமக்கின்னும் புத்திர ருண்டாக வில்லையே" என்று, வெடிக்காமலிருந்த தன் முட்டைகளில் ஒரு முட்டையை உடைத்தாள். அப்படி யுடைக்கவே, அதிலிருந்து அவயவங்க ளெல்லா முண்டாய், கால்கள்மாத்திர முண்டாகாமல் ஒருவன் தொன்றி, விநதையைப் பார்த்து, "தாயே! எனக்குக் கால்கள் உண்டாவதற்குள் அவசரப்பட்டு நீ உடைத்துவிட்டாய்! அதனால் நான் முடவனாயினேன்; நீ இவ்வாறு செய்தபடியால், உன் தங்கையாகிய கத்துருவுக்குத் தாதியாகக்கடவாய்," என்று சாபமிட்டான். அதைக் கேட்டு விநதை வருந்தினாள். அப்போது அவயவக் குறைவாக உண்டான புத்திரன் தாய் வருந்தியதற் கிரங்கி, அவளை நோக்கி, "தாயே! நீ அவசரப்பட்டு என்னை அவயவக் குறைவோடு பிறக்கும்படி செய்ததனாலே நான் கோபங்கொண்டு சாபமிட்டேன்; ஆயினும், இந்தச் சாபம் ஒரு காலத்தில் நீங்கி

விடும்; நீ மற்ரெரு முட்டையை உடைத்துவிடாதே; அதில் எனக்கிளையவ னிருக்கிருன்; அவன் மிகுந்த பராக்கிரம முடையவன்; அவன் உன்னுடைய சாபத்தை நீக்குவான்,'' என்று கூறினுன். அதன்மேல் விநதை இந்த அவயவக் குறைவான புத்திரனுக்கு அருணனென்று பெயரிட்டு இவனை வளர்த்துவந்தாள். இவனுக்குப் பருவம் வந்தவுடனே இவன் வல்லமையை யுணர்ந்த சூரியன் இவனைத் தனக்குச் சாரதி யாக்கிக்கொண்டான்.

அதன்மேல் தேவர்கள்: நாகர், அசுரர் ஆகியவர்களின் உதவியைக்கொண்டு திருப்பாற்கடல் கடைந்து அமுதம் பெற்று நாகருக்கும் அசுரருக்கும் கொடாமல் அதனைக் கொண்டுபோய்ப் பத்திரப்படுத்திவைக்க, கத்துருவின் புத்திரராகிய நாகர் அதனை எப்படியேனும் பெறவேண்டுமென்று ஏக்கமுற் றிருந்தார்கள். அப்படியிருக்கும்போது ஒருதினம் கத்துருவும், விநதையும் கடலோரத்தில் வேடிக்கை பார்க்கும் பொருட்டுப் போயிருந்தார்கள். அப்போது, அமுதங் கடைந்த காலத்தில் திருப்பாற்கடலி லுண்டாகி இந்திரனிடத்திற் சேர்ந்திருந்த உச்சைச்சிரவம் என்னும் வெள்ளைக் குதிரை அங்கே வர, விநதை அதைப் பார்த்து, 'இது சுத்த வெண்மையா யிருக்கிறது,' என்று சொல்ல, கத்துரு 'அவளுடைய பேச்சுக்கு மாறு சொல்ல வேண்டும்' எனக் கருதி 'அதற்கு வாலில் கறுப்பிருக்கிறது,' என்று கூறித் தர்க்கமிட்டு, அவ்வாறே கறுப்பிருப்பது மெய்யானல் விநதை தனக்குத் தாதியாக வேண்டுமென்றும், அங்ஙன மில்லாவிடின் தான் அவளுக் கடிமை யாவதாகவும் உறுதிசெய்து, மறுநாள் அதனைப் பார்ப்போமென்று விநதையை வீட்டிற் கழைத்துக் கொண்டுபோய்த் தன்னுடைய சபதத்தை நிறைவேற்றும் பொருட்டு, அக் குதிரையின் வாலில் மறுவுண்டாகும்படி சேஷன் முதலிய தன் புத்திரரிடங் கூற அவர்கள் மறுத்தபடியால், ஜெனமேஜெயன் சர்ப்பயாகத்தில் மடியும்படி அவர்

களுக்குச் சாபமிட, அவர்களுள் ஒருவன் பயந்து தாயின் விருப்பப்படி செய்வதாகச் சொல்லி அக் குதிரையின் வாலிற்போய் ஒட்டிக் கறுப்பு நிறத்தை உண்டாக்கினன். மறுநாள் கத்துரு விநதையை அழைத்துக்கொண்டு போய் அக் குதிரையின் வாலில் கறுப்பிருப்பதை அவளுக்குக் காட்டிப் பேசியபடியே அவளை அடிமையாக்கிக்கொண்டாள்.

இப்படி விநதை அவளுக் கடிமையாகி வேலை செய்துகொண்டுவரும்போது உடையாமலிருந்த அவளுடைய மற்ெருரு முட்டை பருவகாலம் வந்து விரிந்து அதிலிருந்து மிகவும் பலமுள்ள கருடன் உற்பத்தியாயினன். அங்ஙனம் உற்பத்தியான கருடனும் பருவம் வந்தவுடன், தன் தாய், கத்துருவுக்கு அடிமைப்பட்டிருந்ததை முன்னிட்டுத் தானும் அவள் கட்டளையால் அடிமைப்பட்டு அவள் புத்திரர்களாகிய சேஷன் முதலியவர்களுக்குப் பணிவிடை செய்துவந்தான். இவ்வாறு செய்துவரும்போது இந்தப் பணிவிடைத்தொழில் மிகுந்த கஷ்டத்தைக் கொடுத்தபடியால், தன் தாய் அடிமையான காரணத்தை அவளிடம் வினவித் தெரிந்து கொண்டு பின்னும் சிலகாலம் பணிவிடைத் தொழில் புரிந்து முடிவில் நாரதரால், கத்துருசெய்த சூதையறிந்து மனம் வருந்தித் தன் வல்லமையைக் காட்டும் பொருட்டு நாகர்களை ஆகாயத்திற் கொண்டுபோய்ச் சூரிய வெப்பத்தால் கஷ்டப்படச்செய்து, பின்னர் தன் தாய்க்கும் தனக்கும் ஏற்பட்டிருக்கும் அடிமைத்தொழிலை நீக்கிக்கொள்ளக் கருதி ஒருசமயம் கத்துருவிடம், 'என்ன செய்தால் இந்த அடிமைத்தொழிலை நீக்குவாய்?' என்று கேட்க, அவள், 'என் மக்களுக்குத் தேவாமிர்தத்தைக் கொண்டுவந்து கொடுத்தால் இவ் வடிமைத்தொழிலை நீக்குவேன்,' என்று சொல்ல, அவ்வாறே கருடன் தேவலோகஞ் சென்று ஒருவகை உபாயத்தினல் தேவாமிர்தத்தைக் கொண்டுவந்து கொடுத்துத் தன்

தாயின் அடிமைத்தொழிலை நீக்கினான். இக் கதையைப் பாரதம் ஆதிபர்வத்தில் விரிவாகக் காணலாம்.

இந்தச் செய்யுளில், 'அந்தணன்செங் கந்தைதனை யெடுத்துச் சாவு தவிர்த்தான்,' என வருதலால், அந்தணன் செங்கந்தை யெடுத்துத் தந்தை சாவைத் தவிர்த்தான் என்று ஒரு கதை யிருப்பதாக விளங்குகின்றது; ஆயினும், இக் கதை இன்ன நூலில் வருகிறதென்பது விளங்கவில்லை; ஆதலால், இதனை வருமிடத்துக் கண்டுணர்க.

---

## "நன்றி மறவேல்."

என்பதற் கேற்ப, நன்றி மறவாதிருத்தலின் உயர்வை விளக்குவோ ரியல்பு.

21. உன்னாட்டார் நன்றா லுயிர்காத்துக் கோத்திரத்தில்
எந்நாளும் வாழ்ந்தே யிருப்பதனால்—பன்னாளும்
பூதலத்தின் மேன்மைபெறு புன்னைவன நாதனே
ஏதமற நன்றிமற வேல்.

(ப - ரை) பன்னாளும் - பல தினங்களிலும், பூதலத்தில் - இம் மண்ணுலகத்தில், மேன்மை பெறு - உயர்வை யடைகின்ற, புன்னைவன நாதனே-புன்னைவனத்திலுள்ள தலைவனே! ('நன்றி மறவேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி மனிதராயினோர் ஒருவர் செய்த நன்றியை மறவாதிருக்கவேண்டும்; அங்ஙனம் நன்றி மறவாதிருப்போர் இகத்திலும் பரத்திலும் மேன்மை யடைவர்; இந் நீதிபற்றியே) உன் நாட்டார் - உன்னுடைய நாட்டிலுள்ளவர்கள், நன்றால் - செய்ந்நன்றி மறவாதிருத்தலாகிய நன்மையால், உயிர் காத்து - பல வுயிர்களையும் காப்பாற்றி, கோத்திரத்தில் - நல்ல குலத்தில், எந்நாளும் - எக்காலத்தும், வாழ்ந்தே யிருப்பத

ஞல் - உயர்வோடு வாழ்ந்துகொண்டிருப்பதனுலே, (நன்றி மறவா திருத்தலின் உயர்வை நீயு முணர்ந்து) ஏதம் அற - குற்றமற, நன்றி மறவேல் - ஒருவர் செய்த நன்றியை மறவாதிருப்பாயாக.

(வி-ரை) நன்று - நன்மை யென்னும் பண்புச்சொற் றிரிபு; இதில் மை விகுதி கெட்டுத் துவ் விகுதி சேர்ந்து 'நன்று' என் ருயது. புன்னைவன நாதனே! உன்னுட்டார் நன்றி மறவாதிருத்த லாகிய நற்செய்கையின் பயனுகவே நற்கோத்திரத்திற் ருேன்றி யெந்நாளும் மேன்மையோடு உயிர்புரக்குந் தன்மையை யடைந்து வாழ்ந்திருக்கின்றனராதலின் நீயும் அக் குணத்தைக் கைக்கொள்வா யாக என்பது இதன் கருத்து.

---

## "பருவத்தே பயிர்செய்."

என்பதற் கேற்பப் பருவ மறிந்து பயிர் செய்தலின் உயர்வை விளக்கும்

### வேளாளர் கதை.

22. உன்னுட்டிற் பொற்களந்தை யூரார்நன்னுட் செய்தபயிர்
பொன்னே விளையப் புகழ்பெற்ருர்—ஒன்னுர்
பயந்திடுவேற் புன்னைவன பார்த்திபா நீயுஞ்
செயும்பருவத் தேபயிர் செய்.

(ப-ரை) ஒன்னுர் - பகைவர்கள், பயந்திடு - அஞ்சத்தக்க, வேல் - வேலாயுதத்தையுடைய, புன்னைவன பார்த்திபா - புன்னை வனத்திற் கிறைவனே! ('பருவத்தே பயிர்செய்,' என்று ஒளவை கூறிய நீதிப்படி நல்ல பருவமறிந்து அதில் பயிரிடவேண்டும்; அங் ஙனம் பயிர்த்தொழில் செய்துவரின் அது விசேஷ பலனைத் தரும்; இந் நீதியைக் கடைப்பிடித்தே) உன் நாட்டில் - உனது நாட்டிலேயுள்ள, பொற்களந்தை ஊரார் - பொற்களந்தை யென்னு

ழூரினர், (நல்ல பருவத்திலேயே பயிர்செய்து) நல் நாள் - அந்த நல்ல நாளிலே, செய்த பயிர் - இட்ட பயிரானது, பொன்னே விளைய - பொன்னாகவே பலனைத் தர, (அதனாலே) புகழ்-கீர்த்தியை, பெற்றார் - அடைந்தார்கள்; (ஆதலால், அவ்வாறு பயனடையும்படி) நீயும்—, செய்யும் பருவத்தே-செய்யத்தக்க பருவத்திலே, பயிர் செய் - பயிர்த்தொழிலைச் செய்யக்கடவாய்.

(வி - ரை) நன்னாள் - இதில் நன்மையின் மை விகுதி கெட்டது. பயந்திடு - இதில் 'இடு' துணைவினை. 'பருவத்தே பயிர்செய்,' என்று ஔவை கூறிய நீதிப்படி பருவமறிந்து பயிர் செய்ததனால் களந்தையூரார் பொன் விளையப் பெற்றுப் புக ழடைந்தார்; அவ்வூரும் அதனால் 'பொற்களந்தை' என்று பெயர் பெற்றது. ஆதலால், நீயும் அவ்வாறே பருவத்தே பயிர்செய் என்பது இதன் கருத்து. களத்தூரில் பொன்விளைந்த கதையை,

"நன்றாய் விளைந்ததை வேதியற் கீந்தந்த நன்மையினாற்
பொன்றான் விளைந்திட நெற்போலவேயதைப் போரடித்துக்
குன்றாக்கு வித்ததை நெற்பரி மாற்றங் கொடுத்தளித்தான்
மன்றார் களந்தைக் குடிதாங்கி யுந்தொண்டை மண்டலமே."

என்னும் தொண்டைமண்டல சதகச் செய்யுளா னுணர்க.

---

## "மண்பறித் துண்ணேல்."

என்பதற் கேற்பக் கெடு வழக்குக் கூறிப் பிறனுடைய நிலத்தைப் பறித்து அதனை லுண்டு ஜீவித்தல் தீங்கென்பதை விளக்கும்

### கூனைசகடன் கதை.

23. கூறவழக் கெண்ணாத கூனைசக டற்குவண்டில்
ஏறமுன்போல் வாரா திருந்ததனாற்—றேறியென்றும்

மாதிலகா புன்னைவன மன்னுகேள் பூமியதி
லேதிலன் மண்பறித்துண் ணேல்.

(ப - ரை) புன்னைவனம் - புன்னைவன மென்னுந் தலத்திற்கு, மா - சிறந்த, திலகா - நெற்றித் திலகம்போற் சிறந்தவனே!, மன்னு - இறைவனே! கேள் - நான் சொல்வதைக் கேட்பாயாக!, ('மண்பறித் துண்ணேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி, மனிதர் கெடுவழக்குக் கூறி ஒருவனுடைய நிலத்தை அனியாயமாகக் கைப்பற்றி அதன் பலனு லுண்டு ஜீவித்த லாகாது; அங்ஙனம் புரியின் அவர்க்குப் பலர் நிந்தையும் பாவமும் உண்டாகும்; நற்கதியுங் கிடைக்காது; இந் நீதிக்கு விரோதமாக நடந்த கூதைசகடற்கும் தீங்குண்டாயிற்று; அங்ஙனம்) வழக்கு - நியாயம் பேசுதலில், கூற - நீதிப்படி சொல்ல, எண்ணுத - நினையாத, கூதைசகடற்கு- கூதைசகடனுக்கு, (அங்ஙனம் நீதிக்கு விரோதம் புரிந்ததனுலே) வண்டில் - வழக்கம்போல் ஏற வரும் வண்டிலானது, ஏற - ஏறுதற்கு, முன்போல் - முந்தின வழக்கப்படி, வாராதிருந்ததனுல் - வாராமலிருந்தபடியினுலே, தேறி - (நீயும் இச் செய்கை தகாதென்று) தெளிந்து, என்றும் - எக்காலத்திலும், (கெடுவழக்குக் கூறி) பூமியதில் - இப் பூவுலகத்தில், ஏதிலன் - மாற்ருனுடைய, மண் - பூமியை, பறித்து-அனியாயமாகக் கைப்பற்றி, உண்ணேல்- அதனு லுண்டு ஜீவிக்காதே. (நியாயப்படி வழக்குரைத்துப் பிறனுடைய பூமியை நீதிக்கு விரோதமாக அபகரிக்காமல் புகழையும் புண்ணியத்தையுந் தேடிக்கொள்வாயாக.)

(வி - ரை) 'கூறவழக் கெண்ணுத,' என்பதை, 'வழக்குக் கூற எண்ணுத,' என மாற்றுக. எண்ணுத - பெயரெச்சம். கூதைசகடனென்பவன் நியாயமாக வழக்குக் கூற எண்ணுதபடியால், அவனுக்கு வழக்கமாக ஏறவரும் வண்டிலானது வாராமலிருந்ததென்பது மட்டும் இச் செய்யுளால் விளங்குகின்றது. இக் கதை

இன்ன நூலிலுள்ள தென்பது விளங்கவில்லை; ஆதலின், இதனை வருமிடத்துக் கண்டுணர்க.

---

## "இயங்கித் திரியேல்."

என்பதற் கேற்ப, ஐம்புலன்களின் வழியிற் செல்லா துறுதியுடனல்வழியி னடக்கு முயர்வை விளக்குதல்.

24. மன்னவனுக் குன்னாட்டார் வந்து முடிசூட்ட [போல்
முன்னனலின் மூழ்கி முதன்மைபெற்றார்—அன்னவர்
நன்றறியும் புன்னைவன நாதனே வையகத்தில்
என்றுமியங் கித்திரி யேல்.

(ப - ரை) ('இயங்கித் திரியேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி ஐம்புலன்கள் செல்லுங் கெட்டவழிகளி லெல்லாம் சென்று கெடாமல் அவற்றை யடக்கி நன்மார்க்கத்திற் சென்று புகழைத் தேடுதலே மனிதர்க் குயர்ந்த செய்கையாம்; ஆதலின், இந் நீதியை அனுசரித்துவந்த பழக்கத்தினாலே,) புன்னைவன நாதனே - புன்னைவனத்திற் கிறைவனே!, உன் நாட்டார் - உன்னுடைய நாட்டிலுள்ளவர்கள், முன் - முன்னே, மன்னவனுக்கு - அரசனுக்கு, முடிசூட்ட வந்து-கிரீடம் புனைதற்கு வந்து சேர்ந்து, அனலில் மூழ்கி - தீயிற் குளித்து, (தங்கள் உயர்ந்த செய்கையை உலகத்திற்குக் காட்டி) முதன்மை பெற்றார் - தலைமை யடைந்தனர்; அன்னவர்போல்-அப்பேர்ப்பட்ட அவர்களைப்போல, நன்று-நன்மையை, அறியும்-தெரிந்து நடக்கின்ற, புன்னைவன நாதனே-புன்னைவனத்திற்குத் தலைவனே!, வையகத்தில் - பூமியில், (நீயும்) என்றும் - எப்பொழுதும், இயங்கி - கெட்ட புலன்களின் வழியே நடந்து, திரியேல் - நீதிக்கு விரோதமாக மாறுபட்டுக் கெடாதே

(புலன்களை யடக்கி நன்மார்க்கத்தில் நடந்து புகழான காரியங்களைத் தேடுவாயாக.)

(வி - ரை) 'உன்னுட்டார் வந்து மன்னவனுக்கு முடிசூட்ட முன் அனலின் மூழ்கி முதன்மை பெற்றார்,' என்பதற் கேற்ப, ஆத்திசூடியின் நீதிவாக்கியக் கருத்துக்கள் முதலிலேயே எச்சமாக வருவித் துரைக்கப்பட்டன. புன்னைவன நாதனே! என்னும் விளி தீபகமாக இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. புன்னைவன நாதனுடைய நாட்டார் மன்னவனுக்கு முடிசூட்ட வந்து அனலின் மூழ்கி முதன்மை பெற்றதை,

"தாயினு நல்ல தயையுடை யோர்க்க டமதுடலம்
வீயினுஞ் செய்கை விடுவர்கொல் லோதங்கண் மெய்ம்முழுதும்
தீயினும் வீழ்வர் முதுகினுஞ் சோறிட்டுச் சீறரவின்
வாயினுங் கையிடு வாரவர் காண்டொண்டை மண்டலமே."

என்னும் தொண்டைமண்டல சதகச் செய்யுளா னுணர்க.

---

## "அரவ மாட்டேல்"

என்பதற் கேற்ப, அரவத்தை யெடுத்தாட்டி விளையாடல் தீங்கென்பதை யுணர்த்தும்

## பரிச்சித்து கதை.

25. இருடிமேற் செத்தபாம் பேற்றிப் பரிச்சித்
தரவினாற் பட்ட தறிந்தே—திரைக்கடல்சூழ்
மண்ணுலகிற் புன்னைவன மன்னவா பாவமிதென்
றெண்ணி யரவமாட் டேல்.

(ப-ரை) புன்னைவன மன்னவா-புன்னை வனத்திற் கிறைவனே!, ('அரவ மாட்டேல்,' என்று ஔவை கூறிய நீதியை

அனுசரித்து எவரும் அரவத்தை யெடுத்தாட்டி விளையாடுதலை ஒழித்தல்வேண்டும்; அங்ஙன மொழிக்காமல் அரவாட்டப்புகின், அது கடித்தலாலும், வேறு காரணங்களாலும் தீங்கே யுண்டாகும்; இந் நீதியைக் கடைப்பிடியாமல், பரிச்சித்துவும் பாம்பெடுத்துவிளையாடித் தீங்கடைந்தான். அங்ஙனம்) பரிச்சித்து - பரிச்சித் தென்னும் மன்னன், செத்த பாம்பு - இறந்த பாம்பை, இருடி மேல் - யோகத்திருந்த முனிவர்மீது, ஏற்றி - சுமத்தி, (அதனால் அந்த முனிவரின் சாபத்தை யடைந்து) அரவினால்-அந்தப் பாம்பினாலே, பட்டது - அடைந்த துன்பத்தை, அறிந்தே - தெரிந்து, திரைக்கடல் சூழ் - அலையையுடைய கடலாற் சூழப்பெற்ற, மண்ணுலகில் - இந் நிலவுலகத்திலே, இது - இக் காரியம், பாவம் என்று எண்ணி- பாதகமென்று நினைத்து, (நீயும்) அரவம் ஆட்டேல்-அரவத்தை யெடுத்தாட்டி விளையாடாதே.

(வி - ரை) செத்த-பெயரெச்சம். இருடி - ரிஷியென்னும் வடமொழித் திரிபு. 'அறிந்தே' என்பதில் ஏகாரம் தேற்றப்பொருளது. திரைக்கடல் - இரண்டாம் வேற்றுமைத்தொகை.

அரவமாட்டியதால் துன்புற்ற பரிச்சித்து கதையாவது:— குருகுலத்திற் றோன்றிய பாண்டவரின் பேரனும், அபிமன்யுவின் புத்திரனுமாகிய பரிச்சித்து பாண்டவர் காலத்திற்குப் பின், கலியை நீக்கித் தருமத்தை நான்கு பாதத்தால் நடக்கச்செய்து அரசு புரிந்துவந்தனன். அங்ஙனம் அரசு புரிந்துவருங் காலத்தில், இவன் ஒரு தினம் வேட்டைக்குச் சென்று மிருக வேட்டையாடித் தன் அம்பிற்குத் தப்பி யோடிய ஒரு புலியைத் தொடர்ந்து அது மறைந்துபோகவே அதனைப் பல விடங்களினும் தேடி ஓரிடத்தில் மௌனமுற்றிருந்த சமீகரிஷியைக் கண்டு, "இந்த வழியாக வந்த புலி எவ்விடத்திற் சென்றது?" என்று வினவினன். அவர் ஒன்றும் சொல்லாமல் மௌனமா யிருந்தனர். அதைப்

பார்த்துப் பரிச்சித்து கோபங்கொண்டு, "என்னுடைய கேள்விக்கு விடை பகராதிருக்கின்றனேயா?" என்று அங்குச் செத்துக்கிடந்த ஒரு பாம்பை யெடுத்து அவருடைய கழுத்தில் சுற்றிப் போட்டு விட்டுச் சென்றனன்.

இவன் இவ்வாறு செய்து சென்றபின் அம் முனிவரின் குமாரராகிய சிருங்கிமுனி அங்கே வந்து தம் தந்தையின் கழுத்தில் பாம்பு சுற்றிக் கிடத்தலைப் பார்த்துக் கோபித்து, "இந்த அடாத காரியத்தைச் செய்தவர் யாவர்?" என்று அங்கிருந்த முனிவர்களிடம் வினவ, அவர்கள், "இதைச் செய்தவன் பரிச்சித்து மகாராஜன்," என்று கூறினர். அதைக் கேட்டவுடனே சிருங்கிமுனி, முன்னிலும் அதிக கோபங்கொண்டு, "என் தந்தைக்கு இவ்வகைத் தீங்கைப் புரிந்த அவ்வரசன், இதற் கேழாநாள் தக்ஷனென்னும் பாம்பினுல் இறக்கக்கடவன்," என்று சாபமிட்டனர். அதன்மேல் சமீகரிஷி யோகநிலை கலைந்து நடந்ததை யுணர்ந்து தம் புத்திரன் அவ்வாறு பரிச்சித்து மகாராஜனுக்குச் சாபங் கொடுத்ததைப்பற்றி வருந்தி, ஏழுநாள்வரை பாம்பு வாராவிடத்தி லிருக்கும்படி பரிச்சித்தவுக்குத் தெரிவிக்குமாறு கௌரமுகரை யனுப்பினன். அவர் அவ்வாறே சென்று தெரிவிக்க, பரிச்சித்து மன்னன் சுகரால் தத்துவ முணர்ந்து ஏழு நாள்வரை ஜாக்கிரதையாகவிருந்தும் சாபப்படியே ஏழாநாள் தக்ஷனல் கடியுண் டிறந்தனன்.

---

## "இலவம்பஞ்சிற்றுயில்."

என்பதற் கேற்பச் சயனத்தின் உயர்வை விளக்குதல்.

26. அன்னத்தின் றூவிபொங்க ராகு மாசற்குப்
பன்னும் பருத்திதான் பாங்கலவே—அன்னதனுல்

மன்னனெனும் புன்னை வனநாதா! மையிரவிற்
றுன்னிலவம் பஞ்சிற் றுயில்.

(ப - ரை) மன்னன் எனும் - அரசன் என்கின்ற, புன்னை வன நாதா - புன்னை வனத்திற்குத் தலைவனே!, (சயன வகைக ளில்) அன்னத்தின் தூவி - அன்னத்தின் மயிரும், பொங்கர் - இலவம்பஞ்சும், அரசற்கு - மன்னனுக்கு, ஆகும் - படுக்கைக்குப் பொருந்தினவாகும்; பன்னும் - சொல்லுகின்ற, பருத்தி - விரை நீக்கப்படாத பருத்தியானது, பாங்கல - எவர்க்கும் படுக்கைக்கு அழகான தன்று; (இதுபற்றியே ஒளவையும், 'இலவம் பஞ்சிற் றுயில்,' என்று கூறியிருக்கின்றனள்) அன்னதனால் - (அவள் அவ்வாறு கூறிய) அத்தன்மையான நீதிவாக்கியத்தினாலே, (தெளிந்து நீயும்) மை - கரிய, இரவில் - இராத்திரி காலத் தில், துன் - பொருந்திய, இலவம்பஞ்சில் - இலவம்பஞ்சினாற் செய்யப்பட்ட மெத்தையில், துயில் - படுத்து நித்திரை செய்யக் கடவாய்.

(வி - ரை) இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி ஆகிய ஐந்துவகைச் சயனங்களில் இலவம்பஞ்சும், அன்னத்தூவியும் உயர்ந்தன வாகலின் அவ் விரண்டையும் அரச னுக்காமென ஆசிரியர் இங்கு விளக்கிக் காட்டி, அவ் விரண்டினுள் ளும் இலவம்பஞ்சு உட்சூட்டை நீக்கக்கூடிய தாகலானும், ஒளவை யும் அதனையே முதன்மையாகக் கூறியிருத்தலானும் அதனை முதன்மையாகக் கருதி இலவம்பஞ்சு மெத்தையில் நித்திரை செய் யும்படி கூறினர். விதை நீக்கப்படாத பஞ்சைப் பருத்தியென்றும், விதை நீக்கி மிருது செய்யப்பட்டதைப் பஞ்சு என்றும் சொல்வது தென்னாட்டு வழக்கம். விதையோடு கூடிய பருத்தி உடம்பில் அழுத்தி வேதனையை யுண்டாக்கு மாதலின், அது மெத்தைக்கு

யோக்கிய மன்றும்; அதனுலேயே, 'பன்னும் பருத்திதான் பாங் கல,' என்றார். இங்குக் கூறிய ஐந்துவகை மெத்தையுள்ளும், ஒவ் வொன்றிற்கும் ஒவ்வொரு குண முண்டு: இலவம் பஞ்சு மெத்தை உட்சூட்டை நீக்கும்; வெண்பஞ்சு மெத்தையும், செம்பஞ்சு மெத் தையும் இரத்த விருத்தியை யுண்டாக்கும்; மயிரும், தூவியும் உடற்கினிமையைத் தரும். சயனங்கள் ஐந்துவகை யென்பதை, "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேண, முறு தூவி சேக்கை யோ ரைந்து," என்று சீவக சிந்தாமணி 838 ஆஞ் செய்யுளுரை யில் வரும் உதாரணச் சூத்திரத்தா லுணர்க. இதிற் பூளை யென் பது ஒருவகைச் செடியின் பூ; இலவம் பஞ்சிற்கும் இப் பெயர் கூறப்படும். தூவி யென்பதில் மயிர் வகையும், தூவி வகையுமா கிய இரண்டு மடங்கும். சேணமென்பது மெத்தை, சேக்கையென் பது மதுவே. இவ் வைவகை மெத்தையும் மன்னர் முதலியோர்க் காம். மற்றையர்க்குத் தாழை, கோரை, பிரம்பு, பேரீந்து, பனை யோலை முதலியவற்றின் பாய்கள் உபயோகமாம். இவற்றுள் நல்லவையும் கெட்டவையு முண்டு. கோரைப்பாய் அக்கினிமந்தம் சுரதோஷம் முதலியவற்றை நீக்கும்; பிரப்பம்பாய் மூலரோகத் தை யுண்டாக்கும்; பேரீத்தம்பாய் வாதகுன்மம், சோபை ஆகிய வற்றை நீக்கும், உஷ்ணதிக்கத்தை யுண்டாக்கும்; பனையோலைப் பாய் மிகுந்த உஷ்ணத்தையும், வாத நிக்ரகத்தையு முண்டாக்கும். தாழம்பாய் தலைசுழற்றல், பாண்டு, பித்ததோஷம், நீராமைக் கட்டி, வெகு மூத்திரரோகம் ஆகியவைகளை நீக்கும். "மொழிந்த பொருளோ டொன்ற அவ்வயின், மொழியா ததனையு முட் டின்று முடித்தல்," என்னு முத்தியால் இங்குத் தாழம்பாய் முதலிய மற்ற சயனவகைகளும் உரையில் விளக்கிக் காட்டப் பட்டன.

---

## "வஞ்சகம் பேசேல்."

என்பதற் கேற்ப, கபடமான வார்த்தைகளைப் பேசலாகா தென்பதை விளக்கும்

### தூருவாசர் கதை.

27. மாயனார் தம்மக்கண் மாமுனியைக் கேட்டகெற்பம்
ஏயவரைக் கொல்லு மிருப்புலக்கை—ஆயதனால்
மாரனெனும் புன்னை வனநாதா! வையத்திற்
சீருறு வஞ்சகம்பே சேல்.

(ப - ரை) மாரன் எனும் - அழகில் மன்மதனென்று சொல்லத்தக்க, புன்னைவன நாதா - புன்னை வனத்திற்கு இறைவனே!, ('வஞ்சகம் பேசேல்,' என்று ஔவை கூறிய நீதியைக் கடைப்பிடித்து எவரும் கபடமான வார்த்தைகளைப் பேசலாகாது; அங்ஙனம் பேசின் மிக்க தீங்குண்டாகும்; இதற்கு உதாரணமாக) மாயனார் தம்மக்கள் - கிருஷ்ணனைச் சார்ந்த மனிதர்களாகிய கோபாலர்கள், (வஞ்சனையாக) மா முனியை - சிறந்த முனிவராகிய தூருவாசரிஷியிடம், கேட்ட - ஆணோ பெண்ணோவென்று வினவிய, கெற்பம் - கருப்பமானது, (அவருடைய சாபத்தால்,) ஏய் - பொருந்திய, அவரை-அந்தக் கோபாலரை, கொல்லும் - கொலை செய்யத்தக்க, இருப்புலக்கை ஆயதனால் - இருப்புலக்கை யானபடியினாலே, (நீ இதனை மிகவும் தீங்குடையது என்றுணர்ந்து) வையத்தில் - இப் பூவுலகில், சீர் உறு - சிறப்பில்லாத, வஞ்சகம் - கபடமான வார்த்தைகளை, பேசேல் - பேசாதே. (கபடமற்ற உண்மை வார்த்தைகளையே கூறிக் கீர்த்தி யடைவாயாக.)

(வி - ரை) கோபாலரைப் பிள்ளைகளைப்போலக் கிருஷ்ணன் பாதுகாத்தமையால், 'மாயனார் தம்மக்கள்' என்பதற்குக் 'கிருஷ்ண மூர்த்தியின் பிள்ளைகள்' எனப் பொருள்கோடலு

மொன்று. முனியை - உருபுமயக்கம், ஏழாம் வேற்றுமை இரண்டாம் வேற்றுமையாக மயங்கி வந்தது. கேட்ட - பெயரெச்சம்.

**தூருவாசர் கதையாவது:** அத்திரி ரிஷிக்கு அநசூயையிடம் பிறந்த குமாரராகிய தூருவாசரிஷி, ஒருகாலத்தில் தம்முடைய ஆச்சிரமத்தி லிருக்கும்போது, கோபாலர்கள் தங்களில் ஒருவனுக்குக் கருப்பஸ்திரீ வேடந் தரித்து அவனை அழைத்துக்கொண்டு போய் அந்தத் தூருவாசரிடம் நிருத்தி அவனைக் 'கருப்பஸ்திரீ' என்று கூறி, 'இவள் வயிற்றிற் பிறப்பது ஆணோ? பெண்ணோ?' என்று வினவிப் பரிகசித்தார்கள். அதைக் கேட்டவுடனே அம்முனிவர் உண்மையை உணர்ந்துகொண்டு, அவர்கள் பரிகசித்ததற்குக் கோபங்கொண்டு, அவர்களை நோக்கி, "இந்தக் கருப்பத்திலிருந்து உங்கள் வம்சத்தை நாசமாக்கும் ஓர் இருப்புலக்கை யுண்டாகக்கடவது," என்று சாபமிட்டனர்.

---

## "அழகலாதன செயேல்."

என்பதற் கேற்ப, அழகற்ற செய்கைகளைச்
செய்யலாகா தென்பதை விளக்கும்

### வாணாசுரன் கதை.

28. வானன் சிவனை வணங்கிவசஞ் செய்துலகோர்[லாம்
காணநின்று தன்வாயிற் காக்கவைத்துப்—பாணியெ
போனதனுற் புன்னைவன பூபாலா! யாரிடத்தும்
தானழக லாதனசெய் யேல்.

(ப - ரை) புன்னைவன பூபாலா - புன்னைவனத்திற் கிறைவனே!, ('அழகலாதன செயேல்,' என்று ஔவை கூறிய நீதியை ஆராய்ந்து அழகற்ற காரியங்களைச் செய்தல் தீங்கென் றுணர்ந்து

அத்தகைய காரியங்களை, மனிதராயினுர் செய்யா தொழிதல் வேண்டும்; அங்ஙனமின்றி அவற்றைச் செய்யப்புகின் மிக்க தீங்கே யுண்டாகும்; இந் நீதியை ஆராய்ந்துணராமையினுலே) வாணன் - பாணுசுரன், சிவனை - சிவபெருமானை, வணங்கி - முதலில் நமஸ்கரித்துத் தொழுது (அவரிடம் தனக்கு வேண்டிய வரங்களையெல்லாம் பெற்றுப் பின்னர்) வசம் செய்து - அவரைத் தன் வசப்படுத்தி, உலகோர் - உலகத்திலுள்ளவர்கள், காண - பார்க்கும்படி, தன் வாயில் நின்று - தன்னுடைய வாயிலிலே நின்று, காக்கைவைத்து - காவற்ருெழில் புரியுமாறு நிறுத்திவைத்து, (அவரையே யுத்தத்திற்கு மழைத்து அழகற்ற காரியத்தைச் செய்தபடியினுலே முடிவில்) பாணி எல்லாம் - தன்னுடைய ஆயிரங் கைகளும், போனதனுல் - போனபடியால், (நீயும் இது தீங்கென்றுணர்ந்து) யாரிடத்தும் - எவரிடத்திலும், அழகலாதன - அழகற்ற காரியங்களை, செய்யேல் - செய்யாதே, (அழகான காரியங்களையே செய்யக்கடவாய்.)

(வி - ரை) ஈற்றடியின் முதலிலுள்ள தான் - அசை. அழகலாதன செய்து ஆயிரங் கைகளையு மிழந்த வாணுசுரன் கதையாவது:—பலிக்கு மூத்த குமாரனுகப் பிறந்த பாணுசுரன், கிருஷ்ணன் மாமனுகிய கம்சனுக்கு நண்பனுகிச் சோணித புரத்திலிருந்தரசாண்டு சிவபூஜை செய்து சிவன் அனுக்கிரகத்தால் அளவற்ற ஐசுவரியத்தையும் ஆயிரங் கைகளையும் பெற்றுச் சிவபெருமானைத் தன் வசமாக்கி, அவர் உமாதேவியோடும், கணேசரோடும், குமாரக்கடவுளோடும் தன்னுடைய வாயில் காத்திருக்கச் செய்து, தன்னைப் போரில் வெல்வா ரொருவருமின்றி இறுமாப்படைந்து, ஒரு சமயம் தனக்கு எல்லா மேன்மைகளையுங் கொடுத்த சிவபிரானிடமே சென்று, "சுவாமி! என்னேடு போர் செய்வா ரொருவருமில்லை; அதனுல், நெடுநாட்களாக என் தோள்கள் தினவெடுத்துப்

போயிருக்கின்றன; ஆதலால், நீரே போர்புரியவேண்டும்," என்று கூறி அவரைப் போருக்கழைத்தனன். அதைக் கேட்டுச் சிவ பிரான் புன்சிரிப்புற்று, அவனை நோக்கி, "வாணாசுரனே! நீ போரில்லையென்று விசன முறாதே; சமீபத்தில் போர் நிகழும்; துவாரகையிலிருந்து வந்து கண்ணன் உன்னோடெதிர்த்து உன் கைகளை யறுப்பார்; உன் துவஜமும் அறுபடும்; இப்போர் உன் மகளால் நேரும்," என்று கூறினர். வாணன் அதைக் கேட்டு மாளிகையில் சுகமாக வாழ்ந்திருந்தான்.

இப்படி யிருக்கும்போது ஒரு சமயம் வாணன் மகளாகிய உஷை யென்பவள், நித்திரையில் கண்ணன் பௌத்திரனாகிய அநிருத்தன் தன்னைக் கலந்ததாகக் கனவு கண்டு அவன்மேல் மோகங் கொண்டு, சித்திரலேகை யென்னுந் தோழி யெழுதிக் காட்டிய படத்தின் மூலம் அவனை இன்னவனென் றுணர்ந்து, அவளைக் கொண்டே, துவாரகையிற் சயனித்திருந்த அநிருத்தனை மஞ்சத்துடன் கொணர்வித்து, அவனைக் கூடிக் கருப்பமுற்றனள். அதை யுணர்ந்து வாணன் அநிருத்தனைப் பிடித்துச் சிறைச்சாலையி லடைத்தனன். அதுகண்டு உஷை மனம் வருந்தினள். அச் சமயம் வாணனுடைய மயூரத்துவஜம் அற்று வீழ்ந்தது. இவற்றை யெல்லா முணர்ந்த நாரதர் ஸ்ரீ கண்ணபிரானுக் கறிவிக்க, அவர் வாணனோடு யுத்தம் புரிதற்குப் போர்க்கோலங் கொண்டு சேனைகளுடன் சோணிதபுற மடைந்து முதல்வாயிலி லிருந்த விநாயகரை மோதகம், பாலுணவு முதலியவற்றால் மகிழ்வித்து அவரனுமதிபெற்று அதனைக் கடந்துபோய், இரண்டாம்வாயிலி லிருந்த குமாரக்கடவுளைப் பூஜித்து அவரிடமும் விடை பெற்று அதனைக் கடந்து, மூன்றாம் வாயிலி லிருந்த உமாதேவியாரைப் பணிந்து அவரனுமதி பெற்று அதனையுங் கடந்து நான்காம் வாயிலிற் சென்றனர். அப்போது சிவபெருமான், முன்னொரு காலத்தில் மைநாகமலையில் தம்மை நோக்

இத் தவஞ் செய்த திருமாலுக்கு, 'நா னெதிர்ப்பினும் நீ என்னையும் வெல்லக்கடவை,'' என்று வரங் கொடுத்ததைக் காப்பாற்ற வேண்டிப் பிநாகவில்லைக் கரத்திற் றாங்கி ஸ்ரீ கண்ணபிரானைக் கண்ட மாத்திரத்தில் அவரை நோக்கி, "என்னை வென்ற பின்னன்றோ வாணனை வெல்லவேண்டும்,'' என்று அவருட னெதிர்க்க, அவர் போர் செய்தற்கு மனங் கூசி, சிவபிரானைத் துதித்தனர். அப்போது சிவபெருமான் ஸ்ரீகண்ணபிரானைப் பார்த்து, "நீர் என்னோடு போர் செய்தற்கு யோசிக்கவேண்டாம்; உம்முடைய வருகையை முன்னரே வாணனுக்கு உரைத்திருக்கிறேன்; நீர் என்னோடெதிர்த்துப் போர் புரிவது முருகன் விளையாடல் போலாம்'' என்று சொல்லக் கண்ணபிரான் எதிர்த்துக் கணைகளை யேவினர். இருவருக்கும் போர் நடந்தது. அச்சமயத்தில் சிவபெருமான் தாம் கொடுத்த வரத்தை நிறைவேற்றக் கருதித் தோற்றவர்போல நடித்துக் கண்ணபிரானுக்கு வெற்றியை யளித்தனர்.

இவ்வாறு கண்ணபிரான் வெற்றி யடைந்தவுடனே வாணாசுரன் சினங்கொண்டு வந்து கண்ணபிரானோ டெதிர்த்துப் போர் புரிந்தனன். அப்போது சிவனருளால் கண்ணபிரான் வலிமையுற்று வாணனுடைய புயங்களை ஒவ்வொன்றாக அறுத்துவந்தனர். இப்படி யறுத்துக்கொண்டுவரும்போது சிவபெருமான், "என்னை யருச்சித்த இரண்டு கரங்களும் இருக்கட்டும்,'' என்று கண்ணன்பாற் கூற, அவ்வாறே கண்ணன், அவ்விரண்டு கரங்களும் தவிர மற்றைய கரங்களை யெல்லா மறுத்தனர். அப்போது வாணன் சஞ்சலத்தை யடைந்தனன். அதுகண்டு சிவபெருமான் அவன்பாற் சென்று, "போரில்லாமல் விசன முற்றிருந்த வாணனே! இப்போது உன் தோள்களின் தினவு தீர்ந்ததா?'' என்று வினவ, வாணன் நாணமுற்று, "சுவாமி! அடியேன் செய்த பிழையைப் பொறுத்தருள வேண்டும்,'' என்று வணங்க, சிவபெருமான் அவன்மீது கிருபை

செய்தனர். அதனால் அவன் மீண்டும் தன்னுடைய ஆயிரம் கைகளையும் பெற்று, சிவன் கட்டளைப்படியே தன் மகளை அநிருத்தனுக்கு மணஞ் செய்துகொடுத்துத் துவாரகைக் கனுப்பிவிட்டுத் தான் திருக்கைலையிற் குடமுழாவெடுக்கும் பாக்கியம் பெற்றனன்.

---

"இளமையிற் கல்."

என்பதற் கேற்ப, கல்வியை இளமையிலேயே
கற்கவேண்டு மென்பதை விளக்கும்

காளிதாசன் கதை.

29. கல்வியிள மைக்குளிலாக் காளிதா சன்மனையாள் [ள்
வல்வசையாற் பொல்லா மரணமுற் றுச்-செல்லலுற்று
நற்றுமா! புன்னைவன நாதா! இதையறிந்து
கற்று விளமையிற் கல்.

(ப - ரை) நல் தாமா - நல்ல மாலையை யணிந்தவனே!, புன்னைவன நாதா-புன்னைவனத்திற் கிறைவனே!, ('இளமையிற் கல்,' என்று ஔவை கூறியபடி மனிதர் இளம்பருவத்திலேயே கல்வியைக் கற்றுக்கொள்ளவேண்டும்; அங்ஙனங் கற்பவர்க்குத் தான் கல்வி நிரம்புதலாகி நற்பயனைத் தரும்; அங்ஙனம் கல்லாதார்க்குப் பலவித துன்பங்களுண்டாகும்; இதற்குதாரணமாக) இளமைக்குள் - இளம்பருவத்துள்ளே, கல்வி இல்லா - கல்வி நிரம்புதலில்லாத, காளிதாசன் மனையாள் - காளிதாசனுடைய மனைவி, ('இவள் மூடனுக்கு வாழ்க்கைப்பட்டாள்' என்று ஊரார் கூறிய) வல் - வலிமை பொருந்திய, வசையால் - பழிச்சொல்லினாலே, பொல்லா மரணம் உற்று - கெட்ட மரணத்தை யடைந்து, செல்லல் உற்றாள் - இவ் வுலகத்தை விட்டுச் செல்லுதலைப் பொருந்தி

ளுள்; (அதனுலே காளிதாசனும் துன்பத்தை யடைந்தான்; ஆகையினுலே நீயும்) இதை அறிந்து-இந்தச் செய்கையை யுணர்ந்து, கற்றல்-கல்வி கற்கத்தொடங்கினுல், இளமையில் - இளமைப் பருவத்திலேயே, கல் - கல்வியைக் கற்றுக்கொள்வாயாக.

(வி - ரை). கல்வி - தொழிற்பெயர். இளமைக்குள் - இதில் உள்-ஏழாம்வேற்றுமை யுருபு. வல் - வன்மை யென்பதன் மை விகுதி கெட்டு நின்றது.

காளிதாசன் மனைவி யிறந்த கதையாவது:—காளிதாசன் மனைவிக்குக் கலியாணம் நடக்குமுன் அவளிடம் சபதஞ் செய்திருந்த மந்திரிகுமாரன், படிப்பே யில்லாதிருந்த காளிதாசனைக் கொண்டுவந்து மகா பண்டிதனைப்போல நடிக்கச் செய்து அவளுக்கவனைக் கணவனுக்கிவிட, அவள், தன் கணவனுக்குக் கல்வியில்லாதிருந்ததை யுணர்ந்து வெட்கி, ஊரார் பழிப்புக் கஞ்சிக் கல்வி பெறும்பொருட்டு அவனிடம் சொல்லிக் காளியை உபாசிக்கச் செய்தனள். அவ்வாறே அவன் செய்யக் காளி பிரசன்னமாகி அவனுக்கும மகா பாண்டித்யத்தை நல்கினள். அவன் உடனே அளவில்லாத கவி பாடுந் திறமை பெற்றுக் காளியை உபாசித்தவனுன படியினுலே காளிதாசன் என்னும் பெயர் தாங்கித் தன் மனைவியே தான் வித்வானுதற்குக் காரணமா யிருந்தபடியால் அவன் தனக்குக் கல்விஞானம் வந்தவுடன் அவளைத் தாயென்று கருதி உடனே அவளிடம் சென்று அவளை மும்முறை வலம் வந்து அவளுக்கு முன்னே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துவிட்டான். அவன் வித்வானுன பின்பு அவனேடு கூடி மகிழ்ச்சியுடன் வாழ்ந்து மந்திரி குமாரனை அவமானப்படுத்தவேண்டுமென்று நினைத்திருந்த அவள், காளிதாசன் இவ்வாறு தன்னைத் தாயென்று கூறி நமஸ்கரித்தவுடனே அளவிலாத் துக்கத்தை யடைந்து அத் துயர் சகிக்க முடியாமல் உடனே காளிதாசனை நோக்கி, "நீ அவ்வாறென்

இளமையை வீணாக்கினபடியால் பெண்ணால் துயருறக்கடவாய்,'' என்று சாபமிட்டுத் தன்னுயிரைப் போக்கிக்கொண்டனள். இன்னும் இக் கதையின் விரிவைக் காளிதாச சரிதையா லுணர்க.

---

## "அறனை மறவேல்."

என்பதற் கேற்ப, அறத்தை மறவாது செய்தலின் உயர்வை விளக்கும்

## பத்திரகிரியார், சனகன், விதுரன் ஆகியவர்களின் இயல்பு.

30. பத்திரகிரி ராசன் பகர்சனகன் மெய்விதுரன்
சித்தபரி சுத்தஞ் செலுத்திபதால்—இத்தரையில்
மன்னனெனும் புன்னை வனநாதா! யாவுறினும்
இன்பா மறனைமற வேல்.

(ப - ரை) மன்னன் எனும் - அரசன் என்று சொல்லத் தக்க, புன்னைவனநாதா-புன்னைவனத்திற் கிறைவனே!, ('அறனை மறவேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும் தருமத்தை மறவாது செய்யவேண்டும்; அங்ஙனம் புரியில் மேலான கதி கிடைக்கும்; இதை உயர்வென்று நினைத்து) பத்திரகிரிராசன் - பத்திரகிரி மன்னரும், பகர் - பெரியோர் புகழ்ந்து கூறுகின்ற, சனகன் - மிதிலைராஜனும், மெய் - சத்தியத்தையுடைய, விதுரன் - விதுரனும், சித்தபரிசுத்தம் - மனத்தூய்மையான அறத்தை, (தங்களிடத்தே வைத்து) செலுத்தியதால் - உலகத்தில் நடத்தியபடியால், (மேன்மை யுற்றனர்; ஆதலின், நீயும் அறத்தின் உயர்வை யுணர்ந்து) இத்தரையில் - இந்தப் பூமியில், யா உறினும் - என்ன துன்பங்கள் வந்தபோதிலும், இன்பாம் - இன்பமாகிய, அறனை - தருமத்தை, மறவேல் - மறந்துவிடாதே, (எப்பொழுதும் ஞாபகத்துடனே அதனைச் செய்துவருவாயாக.)

(வி - ரை) சித்தபரிசுத்த மென்பது ஆகுபெயராய்ப் பரிசுத்த வடிவமாகிய தருமத்தை யுணர்த்திற்று. 'செலுத்தியதால்' என்பதற்குப் பின், 'மேன்மையுற்றனர்; ஆதலின்,' என்பன முதலிய சில சொற்கள் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டன.

பத்திரகிரியார் கதையாவது:—பத்திரகிரியார் என்பவர் பத்திரகிரியை ஆண்ட அரசர்; இவர் அரசாட்சி புரிந்துவருங் காலத்தில், பட்டினத்தடிகள், பத்திரகிரியிலுள்ள காட்டுப் பிள்ளையார் கோவிலில் நிஷ்டையிலிருக்க, சில திருடர்கள் பத்திரகிரிராஜன் மாளிகையில் திருடப் புறப்பட்டுக் காட்டுப் பிள்ளையார் கோவிலருகே போய்ப் பிள்ளையாரை நோக்கி, "சுவாமி! எங்களுக்குப் பொருள் அகப்பட்டால் உனக்கு ஆபரணஞ் சாத்துகின்றோம்," என்று கூறி அரசன் மாளிகையிற் புகுந்து தங்களுக்கு மிகுந்த பொருள்கள் அகப்பட்டபடியால் அவற்றைத் திருடிக் கொண்டு வெளியேறிக் காட்டுப் பிள்ளையார் கோவிலுக்கு வந்து தாங்கள் கூறியபடியே அப் பிள்ளையார் கழுத்தில் ஓர் ஆபரணத்தைப் போட்டார்கள். அது பக்கத்திலிருந்த பட்டினத்தடிகளின் கழுத்தில் விழுந்தது. அங்ஙனம் அது கழுத்தில் விழுந்து கிடந்ததைப் பட்டினத்தடிக ளறியாராதலின், நிஷ்டை கலைந்தபின் பகலில் அதனுடனே வெளியேறிச் சென்றனர். அங்ஙனம் செல்லும்போது திருட்டுப்போன ஆபரணம் கழுத்திற் கிடப்பதைக் காவலரறிந்து அவரைக் கள்வனென்று கருதி அழைத்துக் கொண்டுபோய் அரசனிடம் விட்டனர். பத்திரகிரியார் அவரைத் திருடனென்றே தீர்மானித்துக் கழுவி லேற்றும்படி கட்டளையிட்டுத் தாமும் கழுமரத்தருகே சென்றனர். அப்போது பட்டினத்தடிகள் சிவனைத் தியானித்துக் கழுமரத்தின்பாற் சார்ந்து அதனை நோக்கினர்; அஃதுடனே தீப்பற்றியெரிந்தது. அதைப் பார்த்தவுடனே பத்திரகிரியார் பயந்து பட்டினத்தடிகளின் தன்மையை உணர்ந்து

அவர்க்கடிமை பூண்டு அவர் கட்டளைப்படியே துறவுகொண்டு அவருடன் திருவிடைமருதூ ரடைந்து பிக்ஷையேற்றுத் தம் ஆசிரியராகிய அவருக் களித்துக்கொண்டு, அவர் கிழக் கோபுரவாயிலிவிருக்க, தாம் மேற்குக் கோபுரவாயிலி லிருந்தனர். அப்போது பத்திரகிரியார், ஒட்டில் பிக்ஷை யேற்றுண்டு மிகுந்த அன்னத்தை அங்கு வந்த ஒரு நாய்க்கு இட்டுவந்தனர். அதனால் அந்நாய் அவரை விட்டு அகலாதிருந்தது. அவர் பிக்ஷை யேற்கும் ஓடும் அந்த நாயும் அவர்பா விருந்தன. இப்படி யிருக்கும்போது சிவபெருமான் பத்திரகிரியாரிட மிருக்கும் அந்த ஓட்டையும், நாயையும் ஒழித்துவிடக் கருதி ஒரு சித்தவுருக்கொண்டு பட்டினத்தடிகளிடம் சென்று பிக்ஷை கேட்டனர். அப்போது அடிகள், அவரிடம், "சமுசாரி மேற்குக் கோபுரவாயிலி லிருக்கிறான்; அவன்பாற் செல்லும்," என்று கூற, அவ்வாறே சிவபெருமான் பத்திரகிரியாரிடம் சென்று தாம் பட்டினத்தடிகளிடம் பிக்ஷைக்குச் சென்றதையும், அவர் கூறினதையுங் கூறினர். அதைக் கேட்டவுடன் பத்திரகிரியார், "இந்த நாயும் ஓடுமன்றோ என்னைச் சமுசாரி யாக்கின," என்று வெறுத்து அவ் வோட்டை நாயின்மீ தெறிந்தனர். அவ்வோடு நாயின் மண்டையிற்பட்டு உடைய நாயு மிறந்து காசிராஜன் மகளாய்த் தோன்றி அவர்பா லடைய, அவர் அவளுடனே பட்டினத்தடிகளிடம் சென்று அவரனுக்கிரகத்தால் சோதியிற் கலந்தனர்.

**ஜனகன் கதையாவது:**—இந்த ஜனகன் அச்வரோமனுக்குப் புத்திரனாகப் பிறந்து மிதிலைநாட்டை யாண்டு, சீதையை வளர்த்து தக்ஷயாகத்தில் வீரபத்திரரால் தன் வம்சத்தவரிடம் வைக்கப்பட்டுத் தன்னிடஞ் சார்ந்திருந்த வில்லை, சீதையின் பொருட்டு ஸ்ரீ ராமமூர்த்தியை வளைக்கச் செய்து, அச் சீதையை அவருக்கு மணம்புரிந்து கொடுத்து இராஜரிஷியா யிருந்து, சுகருக்கும் ஒரு சமயம்

ஞானோபதேசஞ் செய்தனன். இன்னும் இவன் மற்றொரு சமயம் நரகத்திலிருந்த பாபிகளைக் கண்டு அங்கே, 'ஹாஹா,' என்று முழக்கஞ் செய்து அவர்களை அந்நரகத்தினின்றும் வெளியேற்றினன். விநாயகக்கடவுளை வழிபட்டு அவரால் ஞானோபதேசம் பெற்றனன். இவன் எப்பொழுதும் இளமை நீங்காதிருந்த காரணத்தால், 'ஜனகன்' என்னும் பெயர் பெற்றனன்.

விதுரன் கதையாவது:—இவன் அம்பாலிகையின் தோழி வயிற்றில் வியாசருக்கு யமனம்சமாகப் பிறந்தவன்; யமன், மாண்டவ்யரைப் பதின்மூன்று வயதில் கழுவில் துன்ப மடையச்செய்த படியினாலே, அவர், 'நீ மனிதனாகப் பிறக்கக்கடவை,' என்று சபிக்க இந்த விதுரனாகப் பிறந்தனன். இவன், விவேக முடையவனா யிருந்தமைபற்றி இங்ஙனம் விதுரனென்னும் பெயரை யடைந்தனன். இவ் விதுரன், மகா தருமகுணம் பொருந்தியவன்; பாண்டவருக்கு நாடு கொடுக்கும்படி துரியோதனனுக்குப் புத்தி கூறியவன்; கிருஷ்ணனுக்கு விசேஷமான விருந்திட்டவன்; துரியோதனனுடைய துர்ச்செய்கைகள் தனக்குப் பிடிக்காமையால் அவனுக்குப் புத்தி கூறி அவனால் நிந்திக்கப்பட்டு அவன்மீது வெறுப்புற்றுப் பாரதயுத்தத்திற் சேராமல் நீங்கித் தீர்த்தயாத்திரை செய்து யுத்தம் முடிந்த பின்னர், பாண்டவர் அரசாட்சி செய்யும்போது அவர் நாட்டுக்கு வந்தவன்; தான் துறவடைந்து காட்டில் தவம் புரிந்துவருகையில் தன்னைக் காணவந்த தருமரையும் அவர் சேனைகளையுங் கண்டு பயந்தவன்போல நடித் தோதுங்கி ஒரு மரத்தடியிற் றங்கித் தருமர் தனிப்பட்ட சமயத்தில் பிரமதேசசால் விழித்து அந்தத் தருமரைப் பார்த்து ஆவி நீங்கின மகா புண்ணிய புருஷன்.

---

"அனந்த'லாடேல்."

என்பதற்கேற்ப, காலமல்லாத காலங்களில் நித்திரை செய்யலாகா தென்பதை விளக்கும் நித்திராபலன்.

31. காலைதுயில் சீலம்போங் கண்டபக லாக்கம்போம்
மாலைதுயி லோயாம் வகையறிந்து—ஞாலமதில்
புண்ணியமெ லாந்தெரிந்த புன்னை வனநாதா!
எண்ணி யனந்தலா டேல்.

(ப - ரை) ஞாலமதில் - பூமியில், புண்ணியம் எல்லாம் - தருமங்களெல்லாவற்றையும், தெரிந்த - அறிந்த, புன்னைவனநாதா - புன்னைவனத்திற்குத் தலைவனே!, காலை துயில் - காலைநேரத்திற் செய்யும் நித்திரையால், சீலம் போம் - அழகு நீங்கும்; கண்ட - சூரியனைப் பார்த்த, பகல் - பகல் நித்திரையால், ஆக்கம் போம் - செல்வம் நீங்கும்; மாலை துயில் - மாலைக்காலத்திற் செய்யும் நித்திரையால், நோய் ஆம் - பிணி யுண்டாகும்; (ஆதலால், இந்த நேரங்களில் நித்திரைசெய்யாமல், நித்திரை செய்தற்குரிய சாமத்தில் சிறிதுநேரம் நித்திரை செய்யவேண்டும்; இங்ஙனம் இந்த நேரங்களில் நித்திரை செய்தல் தீங்காகையினலே இவ்வாறு கண்ட நேரமெல்லாம் அதிகமாக நித்திரை செய்யலாகா தென்பதை விளக்கிக் காட்டி ஔவையாரும், 'அனந்தலாடேல்,' என்று கூறினர். ஆதலின்,) வகை அறிந்து - இந்த விவரங்களைத் தெரிந்து, எண்ணி - அதிக நித்திரை செய்தல் தீங்கென்று நினைத்து, அனந்தல் ஆடேல் - கண்டநேரத்திலெல்லாம் அதிகமாக நித்திரை செய்யாதே.

(வி - ரை) காலை துயில் - ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகை. 'மாலை துயில்' என்பதும் அது. துயில் சீலம் - மூன்றாம் வேற்றுமைத் தொகை. துயில் என்பது

பகல் என்பதற்குப்பின்னும் தீபகமாகக் கூட்டப்பட்டது. 'அனந்த லாடேல்' என்பதற்கு 'நித்திரை செய்யாதே' என்பது அருத்த மாயினும் காலமல்லாத காலத்தில் அதிகமாக நித்திரை செய்ய லாகாதென்று கொள்ளவேண்டும். இதனுல் எப்பொழுதுமே தூங் காம லிருக்கவேண்டு மென்பதன்று.

---

"கடிவது மற."

என்பதற் கேற்ப, கோபத்தை நீக்காமல் எவரிடத்தும் கோபங் காட்டி நியாய மின்றி அவரைத் தண்டித்தல் தீங்கா மென்பதை விளக்கும்

## இரணியன் கதை.

32. இரணியனு மாங்காரத் தெண்ணு துரைத்து
நரஹரியா விற்ருன்முன் ஞளிற்—சுரதருவைப்
போலே கொடுக்கின்ற புன்னைவனநாதா!
மாலே! கடிவது மற.

(ப - ரை) சுரதருவைப்போலே - தேவதருவை நிகர்த்து, கொடுக்கின்ற - கேட்பவைகளை யெல்லா மளிக்கின்ற, புன்னை வன நாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, மாலே - காக்குந் தொழிலில் விஷ்ணுவைப் போன்றவனே!, (உலகத்தில் எவரும் நியாயமின்றிக் கோபித்து நல்லோரைத் தண்டித்த லாகாது; அங் ஙனம் செய்யின், அவ்வாறு செய்வோர்க்கு விரைவிற் கேடுண்டா கும்; இந் நீதியை அனுசரியாமல்,) இரணியனும் - இரணியாசுர னும், ஆங்காரத்து - கோபத்தினுலே, எண்ணுது - பின் வருவதை ஆராயாமல், உரைத்து - தானே தெய்வமென்று கூறித் தன் பிள்ளையாகிய பிரகலாதனைக் கோபித்து வருத்தி, நரஹரியால் - நரசிம்ம மூர்த்தியினுலே, முன்னுளில் - முற்காலத்திலே, இற்

ருன் - அழிந்தான்; (ஆதலின், நீயும் அவ்வாறு செய்யாமல்) கடிவது - நல்லோரைக் கோபித்துத் தண்டித்தலை, மற - மறந்து விடக்கடவாய்.

(வி - ரை) 'இரணியனும்' என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. தேவதரு - கற்பகம்; இது கேட்டதை யெல்லாந் தரவல்லது. புன்னைவனநாதனும் இதைப்போற் கொடுக்கக் கூடியவனாதலின் இவனுக்கு அந்தக் கற்பகத்தை உவமை கூறினர். இன்னும் இவன், மாலைப்போல மனிதரைக் காக்கும் இயல்புடையவனாதலின், இவனை 'மால்' என்றும் கூறினர்.

இரணியன் கதையாவது:— இவனுக்கு இரணியகசிபென்றும் பெயர்; இவன், காசிபருக்குத் திதியிடம் உதித்த அசுரன்; இரண்யாக்ஷனுக்கு மூத்தவன்; இவன் பாரி கியாதியிடம் அநுகிலாதன், சமகிலாதன், கிலாதன், பிரகலாதன் என நான்கு புத்திரரும், சிம்மகி யென்று ஒரு புத்திரியும் உதித்தனர். இவர்களுள் பிரகலாதன் என்பவன் இளமையில் ஆசாரிய புத்திரனாகிய சண்டனிடத்தில் தந்தை கட்டளைப்படி கல்வி கற்கத்தொடங்கி, அவன் முதலில் ஓதிய இரணிய நாமத்தை ஓதாமல் அரி நாமத்தை ஓதினன்: அதை, சண்டன், இரணியகசிபுவிடம் தெரிவிக்க, அவன் கோபித்து, பிரகலாதன்மீது பல ஆயுதங்களைப் பிரயோகித்தும், அவனை அக்கினியில் தள்ளியும், நாகங்களை விட்டுக் கடிப்பித்தும், யானைகளால் மிதிப்பித்தும், கோபுரத்திலேற்றித் தள்ளியும், கடலிற் கட்டிப்போடுவித்தும், சம்மட்டியால் அடிப்பித்தும், விஷத்தைப் பருகச்செய்தும் நெஞ்சிரக்க மின்றிப் பலவாறு துன்பப் படுத்தினன். இவ்விதம் இம்சித்தும் பிரகலாதன், சிறிதும் அஞ்சாமல் இரணியகசிபின் எதிரிலிருந்தே ஹரிநாமம் உச்சரித்தான். அதைக் கேட்டவுடன் அசுரன் முன்னிலும் அதிகமாகக் கோபங்கொண்டு பிரகலாதனை நோக்கி, "நீ கூறும் உன்னுடைய தேவன்

எங்கே யிருக்கின்றனன்?" என்று வினவ, பிரகலாதன், "அவன் எங்கு முளன்" என்றுரைத்தனன். உடனே இரணியகசிபு, "அப் படியானால் இந்தத் தூணில் இருக்கின்றானோ?" என்று எதிரி லிருந்த தூணைச் சுட்டிக்காட்டி வினவ, பிரகலாதன், "ஆம்; அவன் இந்தத் தூணிலு மிருப்பான், துரும்பிலு மிருப்பான்," என் றுரைத்தான். அவ்வா றுரைத்தவுடனே இரணியகசிபு அடங்காக் கோபங்கொண்டு அந்தத் தூணில் காலினால் உதைத்தான்; உட னே ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி நரசிங்கரூபமாக அத் தூணினின்றும் வெளியேறி இரணியகசிபைச் சங்கரித்தார்.

---

## "காப்பது விரதம்."

### என்பதற் கேற்ப விரதத்தின் உயர்வை விளக்கும் சிலாதன் கதை.

33. துய்ய சிலாதன்செய் துங்கவிர தங்களெலாஞ்
செய்யநந்தி யாகச் சிறப்புற்றான்—பொய்யலவே
தேன்கால்சொற் புன்னைவன தீரனே யைம்புலனைத்
தான்காப் பதுவிர தம்.

(ப - ரை) தேன் கால் - தேன் சொரிகின்ற, சொல் - சொற்களையுடைய, புன்னைவன தீரனே - புன்னை வனத்திலுள்ள வீர புருஷனே!, துய்ய - மனப்பரிசுத்தமுடைய, சிலாதன் - சிலாத னென்பவன், (ஐம்புலன்களையும் பொறிகளின் வழியிற் செல்லாமல் காத்துத் தவமியற்றியபடியினாலே) செய் - அங் ஙனம் புரிந்த, துங்கம்-உயர்வாகிய, விரதங்கள் எல்லாம்-தவங்க ளெல்லாம், (திரண்டு) செய்ய - செம்மையாகிய, நந்தியாக - நந்தி யென்னும் புத்திராகத் தோன்றிவர, (அதனாலே) சிறப்புற்றான் - கீர்த்தியை அடைந்தான்; பொய் அல - (அங்ஙனம் அடைந்தா னென்பது) அசத்தியமன்று, (மெய்யே; இதுபற்றியே ஔவை

யும், 'காப்பது விரதம்,' என்று கூறினள்; ஆதலின், இக் கருத்தின்படி) ஐம்புலனை - பஞ்ச அறிவுகளையும், (பொறிகளின் வழியிற் சென்று துர்க்கிருத்தியங்களைச் செய்யாமல்) காப்பது - காத்து நல்வழியிற் றிருப்புவதே, விரதம் - மேலான தவமாம்; (ஆதலின், நீயும் அங்ஙனமே ஐம்புலன்களைக் காத்துத் தவஞ் செய்து மேன்மையை அடைவாயாக.)

(வி - ரை) துய்ய - தூய்மை யென்னும் பண்புச் சொற்றிரிபு. சிலாதன் - கல்லையுண்டு தவஞ் செய்தவன். செய்ய - செம்மை யென்னும் பண்புச்சொற் றிரிபு. ஐம்புலன்களை யடக்கி விரத மனுஷ்டித்தலே சிறந்ததாகலின், 'ஐம்புலனைக் காப்பது விரதம்,' என்று கூறினர்.

ஐம்புலன்களை யடக்கித் தவஞ் செய்து சிறப்படைந்த சிலாதன் கதையாவது:— சிலாதமுனி யென்பவன், தன்னுடைய மனைவியாகிய சித்ரவதி யென்பவளுடன் கூடிப் புத்திரப்பேறு வேண்டிக் கற்களையே ஆகாரமாகக் கொண்டு சிவபெருமானை நோக்கி, ஐம்புலன்களை யடக்கித் தவஞ் செய்துவந்தனன். அங்ஙனம் தவஞ் செய்துவரும்போது ஒருசமயம் சிவபெருமான் அவனுடைய தவத்திற் கிரங்கி அவனுக்கு முன்னே தோன்றி, "நீ விருத்தனாதலால், உன் மனைவியிடம் உனக்குப் புத்திரோற்பத்தி யுண்டாவ தருமை; நீ யாகஞ் செய்து புத்திரப் பேற்றை யடையக்கடவாய்; நீ யாகஞ் செய்யும்பொருட்டு நிலத்தை யுழும்போது அவ் வுழுசாலில் ஒரு புதல்வன் தோன்றுவன்; அவன் எனக்குச் சமானமானவனா யிருப்பான்," என்று சொல்லி மறைந்தனர். பின்னர், சிவபெருமான் கூறியவாறே சிலாதமுனிவன், யாகஞ் செய்யும்பொருட்டு நிலத்தை உழுதனன். அப்போது அவ் வுழுசாலில் ஒரு பொற் பெட்டியில் நந்திதேவர் இருந்தனர். அவரைக் கண்டவுடனே சிலாதமுனிவன், சிவனருளை வியந்து சந்

தோஷித்து அவரை யெடுத்து வளர்த்தனன். இந்த நந்திதேவர்க்கு வைதஹவ்யர் என்று பெயர். இவர் பிறந்த காலத்தில், அங்கு வந்த தேவர்களுள் பிரமன், இந்திரனை நோக்கி, "இக் குழந்தை எல்லோருக்கும் ஆனந்தத்தை யுண்டாக்கினபடியால் இவனுக்கு நந்தீசன் என்னும் பெயர் வழங்குக,' என்று கூறினர். அதனுல் இவர்க்கு நந்திதேவர் என்னும் பெயரும் வழங்கலாயிற்று. இன்னும் இவர் சிலாதனுக்குப் புத்திரனுக உற்பவித்தபடியால் முனிவர்கள் இவர்க்கு சைலாதியென மற்ருெரு பெயரு மிட்டனர். சிலாத முனிவன் ஐம்புலன்களையு மடக்கித் தவஞ் செய்தனனுதலின், சிலாதன், (கல்லை ஆகாரமாகக் கொண்டவன்) என்னும் காரணப்பெயர் பெற்றனன். இவ் வரலாறு சிவாகஸ்யத்திலுள்ளது. சிவமகாபுராணத்தும், இலிங்கபுராணத்தும் இக் கதை வேறு வகையாகக் கூறப்படும்.

---

## "கிழமை படவாழ்."

என்பதற் கேற்ப, மனிதர், தம்முடல் பொருள் ஆவி மூன்றும் பிறர்க்குரிமை யாகும்படி உபகாரிகளாக வாழவேண்டு மென்பதை விளக்கும்

### தொண்டைமண்டலத்தார் கதை.

34. தண்டமிழ்க்காக்கம்பருக்குத் தாமடிமை யென்றுதொ
ண்டை, மண்டலத்தா ரேட்டில் வரைந்ததுபோல்—
எண்டிசைக்கும், பொன்னுன புன்னைவன பூபாலா
தென்பாகை, மன்னு கிழமைபட வாழ்.

(ப - ரை) எண் திசைக்கும் - அஷ்டதிக்கி லுள்ளவர்களுக்கும், பொன் ஆன-பொன்னைப்போல உயர்வாகப் போற்றப்படுவதான, புன்னைவன பூபாலா - புன்னைவனத்திற் கிறைவனே!, தென் - அழகிய, பாகை-பாகையையுடைய, மன்னு - அரசனே!,

('கிழமை படவாழ்,' என்று ஔவை கூறியதற் கேற்ப, மனித ராயினுர், உடல் பொருள் ஆவி மூன்றும் பிறர்க்குரிமை யாகும்படி உபகாரிகளாக வாழவேண்டும்; அங்ஙனம் வாழின் இகத்தும் பரத்தும் சுக முண்டாம்; இதுபற்றியே தொண்டைமண்டலத்தாரும் ஒரு காலத்தில் கம்பருக் கடிமைப்பட்டுப் புக ழடைந்தனர். ஆதலால்,) தொண்டைமண்டலத்தார் - அந்தத் தொண்டைமண்டலத்தார்கள், தண்-குளிர்ச்சி பொருந்திய, தமிழ்க்கா-தமிழ்ப்பாடலுக்காக, தாம் - தாங்கள், கம்பருக்கு - கம்பநாட்டாழ்வாருக்கு, அடிமை என்று-அடிமைகள் என்று, எட்டில் - ஓலையிலே, வரைந்தது போல் - எழுதி அந்தப்படியே நடந்ததுபோல, கிழமை பட - உன்னுடல் பொருள் ஆவி மூன்றும் பிறர்க்குரிமை யாகும்படி, வாழ் - நீயும் உபகாரியாக வாழக்கடவாய்.

(வி - ரை) தண் - தண்மையென்னும் பண்புச்சொல்லின் மையீறு கெட்டது. எண்டிசை - இடவாகுபெயர்; இது திக்குகளிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. புன்னைவனம் பலராலும் உயர்வாகக் கொண்டாடப்படுவதென்பது விளங்க, 'பொன்னனை புன்னைவனம்' என்ருர். கம்பர், சோழனேடு பகைமைகொண்டு அவன் நாட்டைவிட்டு நீங்கி வெளியேறிப் பல விடங்கட்கும் சென்று தொண்டைநாடு சார்ந்தபோது ஆங்குள்ள பலரைத் தமக் கடிமைகளாக்கிச் சென்றனர். இக் கதையை 'நாவலர் சரிதை' 'வேளாண்மரபியல்' முதலிய நூல்களா லுணர்க.

---

"கீழ்மை யகற்று."

என்பதற் கேற்ப, கீழானவருக் கிடங்கொடாமல் அவர்களை விலக்கவேண்டு மென்பதை விளக்குதல்.

35. பெண்கேட்ட வேந்தனுக்குப் பெண்ணையைப் பந்தரிலே
கண்காண நின்குலத்தார் கட்டிவைத்த—பண்பதுபார்

நன்பாகை புன்னைவன நாதனே யப்படிப்போற்
றுன்பான கீழ்மை யகற்று.

(ப - ரை) நன் பாகை - நல்ல பாகையையுடைய, புன்னை வன நாதனே - புன்னைவனத்திற்குத் தலைவனே !, ('கீழ்மை யகற்று,' என்று ஔவை கூறிய நீதியை யனுசரித்து, அறிவுடையோர் உலகத்தில் கீழானவர்களுடைய சம்பந்தத்தை நீக்கவேண்டும்; அங்ஙனம் நீக்காவிடின் மிக்க தாழ்மை யுண்டாகும்; இதற்கேற்ப,) நின் குலத்தார் - உன் குலத்தினர், பெண் கேட்ட - தம்மிடம் பெண்ணைக் கேட்ட, வேந்தனுக்கு - அரசனுக்கு, (அவன் தங்கள் குலத்திற் றாழ்ந்தவனென்றும், அவனுக்குப் பெண் கொடுத்தல் தகாதென்றும் கருதி) பந்தரிலே - கலியாணப் பந்தலிலே, பெண் நாயை - பெட்டை நாயை, கண் காண - எல்லோருடைய கண்களும் பார்க்கும்படி, கட்டிவைத்த - கட்டி நிறுத்தியிருந்த, பண்பது - குணத்தை, பார்-நீ ஆராய்ந்து நோக்குவாயாக; (அதனாலேயே கீழ்மையை அகற்றவேண்டு மென்பது நன்கு விளங்கும் ஆதலின்,) அப்படிப்போல் - அவர்கள் செய்த விதத்தைப் போல, (நீயும்) துன்பான - துன்பரூபமான, கீழ்மை - கீழானவர்களின் சம்பந்தத்தை, அகற்று - நீக்குவாயாக.

(வி - ரை) கேட்ட - பெயரெச்சம். பந்தர் - இதனீற்றில் லகாரத்துக்கு ரகாரம் போலியாக வந்தது; இது மொழியிறுதிப் போலி யெனப்படும். நன்பாகை-இதில் நன்மை யென்பதின் மையீறு கெட்டு 'நன்' என நின்றது; "அல்வழிக் கணைத்துமெய் வரினு மியல்பா கும்மே," என்ற விதியால், இதில் வலி வர, னவ்வீறு இயல்பாயிற்று. கீழ்மை யென்பது பண்பாகுபெயராய் அதனையுடையவரை யுணர்த்திற்று. புன்னைவனநாதன் மரபினர் பெண் கேட்ட வேந்தனுக்குப் பந்தலிலே பெண்ணாயைக் கட்டிவைத்த கதையை வருமிடத்துக் கண்டுணர்க.

---

"குணமது கைவிடேல்."

என்பதற் கேற்ப, நற்குணமுடையோரைக் கைவிட லாகா தென்பது.

36. நீர்கலந்த பாலையன்ன நீர்பிரித்துக் கொள்வதுபோற்
சீர்கலந்தார் நற்குணமே தேர்ந்துகொள்வார்-ஏர்கொள்
புகழாளா! புன்னைவன பூபால னே!மிக்
கருண மதுகைவி டேல்.

(ப - ரை) ஏர் கொள் - அழகைக் கொண்ட, புகழாளா - கீர்த்தியை யுடையவனே!, புன்னைவன பூபாலனே-புன்னைவனத் திற் கிறைவனே!, ('குணமது கைவிடேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி மனிதர், நற்குண முடையோரைக் கைவிடலா காது; அவருடைய சேர்க்கையால் இருமைக்கும் நன்மை யுண்டா கும்; இதை உத்தேசித்தே) சீர்-சிறப்பாகிய குணத்தோடு, கலந் தார்-சேர்ந்த பெரியோர், அன்னம்-அம்சபக்ஷியானது, நீர் கலந்த பாலை - நீரோடு கூடிய பாலை, நீர் பிரித்து-அதிலுள்ள நீரை நீக்கி விட்டு, கொள்வதுபோல் - உட்கொள்வதைப்போல, (துர்க்குண முடையோரும் நற்குணமுடையோரும் கலந்திருக்கு முலகத்தில் துர்க்குணமுள்ளவரை நீக்கி), நற்குணமே - நல்லகுணத்தை யுடை யவரையே, தேர்ந்து - ஆராய்ந்து தெளிந்து, கொள்வார் - சிநேக மாகக் கொள்வார்கள், (ஆதலால்,) மிக்க - மிகுந்த, குணமது - நற்குணமுடையோரை, கைவிடேல் - கைவிடாதே.

(வி - ரை) கலந்த - பெயரெச்சம். நீர் பிரித்து - இரண் டாம் வேற்றுமைத்தொகை. நற்குணமென்பது பண்பாகுபெயராய் அதனை யுடையாரை யுணர்த்திற்று. 'குணமது கைவிடேல்,' என்று ஔவை கூறிய நீதியை யனுசரித்துச் சீர்த்தியுள்ள பெரி யோர், அன்னமானது நீரோடு கலந்த பாலை வேறு பிரித்து உட்

கொள்ளல்போல் நற்குணமுடையாரையே தேர்ந்துகொள்வர். ஆதலின், புன்னைவனநாதனே! நீயும் நற்குணமுடையாரைக் கைவிடாதே யென்பது இச் செய்யுட் கருத்து.

---

## "கூடிப் பிரியேல்."

என்பதற் கேற்ப, ஒருவருடனே கூடிப் பிரியலாகா தென்பதை விளக்கும்

### அருச்சுனன் கதை.

37. *அர்ச்சுனன்மால் சார்பிழந்த வன்றே கருதலர்த்துன்*
*கைச்சிலைவெற் பாக்கனத்துக் கைதளர்ந்தான்—நிச்சய*
*மன்றல்சூழ் புன்னை வனநாதா! தக்கோரை [மே*
*என்றுங்கூ டிப்பிரி யேல்.*

(ப - ரை) *மன்றல் சூழ்* - வாசனை நிறைந்த, *புன்னைவன நாதா* - புன்னை வனத்திற்குத் தலைவனே! ('கூடிப் பிரியேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி பெரியோரோடு முதலிற் கூடிப் பின் பிரியலாகாது; அங்ஙனம் பிரியின் தீங்குண்டாம்; இதற்குதாரணமாக) *அர்ச்சுனன்* - வலிமையிற் சிறந்த அருச்சுனனும், (முதலில் கிருஷ்ணனோடு கூடியிருந்து மகா சாமர்த்தியமான காரியங்களை யெல்லாம் நடத்திப் பின்னர் அவர் உயிர் நீங்குங்காலத்தில் அவரை விட்டுப் பிரிந்து) *மால்* - அந்த மால்வடிவாகிய கிருஷ்ணனது, *சார்பு* - தொடர்பை, *இழந்த அன்றே*-கைவிட்ட அன்றைக்கே, (தன் வல்லமை யெல்லாம் குறைந்து) *கருதலர்த்துன்*-பகைவரிடம் நெருங்கிப் போர் செய்கின்ற, *கைச்சிலை* - கையிலுள்ள வில்லானது, *வெற்பா* - மலையாக, *கனத்து*-கனக்க, (அதனைச் சுமக்க முடியாமல்) *கை தளர்ந்தான்*-கைசோர்ந்தான்; *நிச்சயமே*-இது சத்தியமாம்; (ஆதலால் நீ, இதனை யுணர்ந்து பெரியோரைக்

கூடிப்பிரிதல் தீங்காமென்று கருதி) என்றும்-எக்காலத்தும், தக்கோரை-பெரியோரை, கூடி - முதலிற் சார்ந்து, பிரியேல் - பின்னர் அவரை விட்டுப் பிரியாதே.

(வி - ரை.) கருதலர்த்துன் - ஏழாம் வேற்றுமைத்தொகை. 'துன்னல்' என்னுந் தொழிற்பெயர் அல்லீறு கெட்டுத் 'துன்' எனப் பகுதியளவாய் நின்றது. கைச்சிலை-ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்கதொகை. 'கனக்க' என்னும் செயவெனெச்சம், 'கனத்து'எனச் செய்தெனெச்சமாகத் திரிந்து வந்தது; "சொற்றிரியினும் பொருடிரியா வினைக்குறை," என்பது விதி.

கிருஷ்ணன் உயிர் நீங்குங்காலத்தில் அருச்சுனன் முதலியோரை வரவழைத்து அவர்களுடைய பலத்தை வாங்கிவிட அவ்வருச்சுனனும் வீமன்முதலியோரும் தாங்கள் இலகுவாகக் கையில் வைத்திருந்த ஆயுதங்களையும் தூக்கமுடியாமல் வருந்தினரென்பது பாரத கதை. இது பாரதத்தில் விரிவாகக் காணப்படும்.

---

## "கெடுப்பதொழி."

என்பதற் கேற்ப, பிறரைக் கெடுத்தலை ஒழிக்கவேண்டுமென்பதை விளக்கும்

## இராமன் கதை.

38. **வா**லிகெட ராமனொரு வாளிதொட்ட வெம்பழிக்கா,
மேலொருசன் மத்திலன்னோன் மீண்டுகொன்றான்—
ஞாலமதில், வல்லவனே! புன்னை வனநாதா! யாரெனினும், ஒல்லை கெடுப்ப தொழி.

(ப - ரை) ஞாலமதில் - இப் பூமியில், வல்லவனே-வல்லமையுடையவனே!, புன்னைவனநாதா-புன்னைவனத்திற் கிறைவனே!,

(விரோதிகளா யிருந்தாலும் அவர்களை அடியோடு கெடுத்துவிடுதல் தீங்காகும்;) வாலி கெட - வாலியென்பவன் அழியும்படி, ராமன் - இராகவன், ஒரு வாளி தொட்ட-ஓர் அம்பைத் தொடுத்தேவி அவனைக் கொன்ற, வெம் பழிக்கா - வெவ்விதாகிய பாவத்திற்காக, மேல் ஒரு சன்மத்தில் - பின்னொரு பிறப்பில், அன்னோன் - அப்பேர்ப்பட்ட தன்மையையுடைய அவன், (வேடனாகத் தோன்றி), மீண்டு கொன்றான் - திரும்ப அந்த ராமனைக் கொன்றான்; (இதுபற்றியே ஔவையும், 'கெடுப்ப தொழி,' என்று கூறினர்; ஆதலின்) யார் எனினும் - எவர்களா யிருந்தபோதிலும், ஒல்லை - சீக்கிரத்தில், கெடுப்பது - கெடுக்குந் தொழிலை, ஒழி-நீக்குவாயாக.

(வி - ரை) 'கெட' என்னும் வினையெச்சம், 'தொட்ட' என்னும் பெயரெச்சத்தோடு முடிந்தது. கெடுப்பது - தொழிற்பெயர். இராமன், சுக்கிரீவன் பொருட்டு வாலியை மறைந்து நின்று அம்பேவிக் கொல்ல, அவன் மறு ஜன்மத்தில் சரன் என்னும் வேடனாகத் தோன்றி, கிருஷ்ணனாக அவதரித்த இராமனைக் கொன்றானென்பது புராண கதை.

---

## "கேள்வி முயல்."

என்பதற் கேற்ப, உயர்ந்த சாஸ்திரக் கேள்விகளைக் கேட்க முயலவேண்டு மென்பதை விளக்கும்

### பகவத்கீதை மான்மியம்.

39. முன்பகவற் கீதை முனியுரைக்கக் கன்னிமரந்
தன்படியே கேட்டுலகிற் ருர்வேந்தா!-அன்புறல்போல்
மாதவனே! புன்னை வனநாதா! நன்மையுற
மூதறிவோர்க் கேள்வி முயல்.

(ப-ரை) தார் வேந்தா-மாலையை யணிந்த அரசனே!, மாதவனே - காத்தற் றொழிலில் இலக்குமி நாயகனான மகாவிஷ்ணு போன்றவனே!, புன்னைவன நாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, ('கேள்வி முயல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி சாஸ்திரக் கேள்விகளைக் கேட்டலில் முயற்சி செய்யவேண்டும்; அங்ஙனம் கேட்க முயன்றால் அக் கேள்வியின் பயனாக இம்மைப் பயனும் மறுமைப் பயனும் சித்தியாகும்; சாஸ்திரக் கேள்வியின் உயர்வு கருதி முன்னொரு மரமும் கீதை கேட்டுவந்தது; அவ்வாறு) முன் - முற்காலத்தில், பகவற் கீதை - எல்லா நூல்களினும் மேம்பட்டதாகிய பகவத்கீதை யென்னும் நூலை, முனி உரைக்க - இருடி சொல்ல, கன்னிமரம் - ஒரு கன்னிமரமும், தன்படியே - தன்னிஷ்டப்படியே, உலகில் - இந்தப் பூமியில், கேட்டு—, அன்புறல் போல் - அதன்மீது ஆசை கொண்டதுபோல, (நீயும்) நன்மை உற - நன்மையடைய, மூதறிவோர் - பெரிய அறிவினையுடையோரிடம், கேள்வி-சாஸ்திரங்களைக் கேட்டலில், முயல்-முயன்று அச் சாஸ்திரக் கேள்விகளைக் கேட்டு மேன்மை யடைவாயாக.

(வி - ரை) 'தன்படியே' என்பதற் கிடையில் 'இஷ்டம்' என்னும் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. 'மரம்' என்பதில் இழிவு சிறப்பும்மை தொக்கது. இவ் வும்மையால் ஓரறிவுயிராகிய மரமும் அங்ஙனம் பகவத்கீதை கேட்டன்புற்றதென்றால், மனிதர் கேட்கவேண்டுமென்பது கூறவும் வேண்டுமோ என்பது பெறப்படும்; மாதவன் - உவமையாகுபெயர். மூதறிவோர்க் கேள்வி - ஏழாம்வேற்றுமைத் தொகை. 'மூது' என்பது முதுமை என்னும் பண்புச்சொற்றிரிபு; ஈறு போய் ஆதி நீண்டது. மரம் பகவத்கீதை கேட்டுவந்த கதையை, பகவத்கீதை மான்மியத்தா லுணர்க.

---

"கைவினை கரவேல்."

என்பதற் கேற்ப, மனிதர் வேறொன்று கருதித் தம் கைத் தொழிலை மறைத்துவிட லாகா தென்பதை விளக்கும்

இந்திரன் கதை.

40. இந்திரன்வாள் வைக்க வெடுத்துமுன்னே மாதவத்
தோர், தந்தருமம் விட்டுத் தவமழிந்தார்—சந்ததமும்,
பாகையில்வாழ் புன்னைவன பார்த்திபா வாகையினூ,
லேகை வினைகர வேல்.

(ப - ரை) சந்ததமும் - தினந்தோறும், பாகையில் வாழ் - பாகையினூலே சிறப்புற்று வாழுகின்ற, புன்னைவன பார்த்திபா - புன்னைவனத்திற் கிறைவனே!, (மனிதராயினூர் வேறொன்று கருதித் தம் கைத்தொழிலை விட்டு வேறொரு தொழிலைச் செய்ய லாகாது; அங்ஙனம் செய்யின் வீண் நஷ்டமுங் கஷ்டமு முண்டாகும்; இதுபற்றியே ஔவையும், 'கைவினை கரவேல்,' என்று கூறினர்; இந் நீதியை யுணராமையால்) முன்னே - முற்காலத்தில், மா தவத்தோர் - சிறந்த தவத்தினையுடையார், இந்திரன் - தேவர்க்கதிபன், வாள் வைக்க - வாளாயுதத்தை வைக்க, எடுத்து - அதனை யெடுத்து வேறு தொழில் செய்யத் தொடங்கி, தம் தருமம் - தம்முடைய அறநெறியை, விட்டு - கைவிட்டு, தவம் அழிந்தார் - தவங் கெட்டார்கள்; ஆகையினூலே-ஆதலால், (நீயும் வேறொன்று குறித்து) கைவினை - உன் கைத்தொழிலை, கரவேல் - செய்யாமல் மறைத்துவிடாதே.

(வி - ரை) வைக்க, எடுத்து, விட்டு ஆகியவை வினையெச்சங்கள்: அழிந்தார் என்பதனூடு முடிந்தன. தவமழிந்தார் - சினைவினை அதற்குரிய முதல்வினையோடு முடிந்தது; "சினைவினை சினையொடும் முதலொடுஞ் செறியும்," என்பது சூத்திரம்.

மாதவத்தோர் தந்தொழில்விட்டுத் தவமழிந்த கதையாவது:—முனிவர் ஒருகாலத்தில் கோரமான தவஞ்செய்யக் கண்டு இந்திரன் அதனைக் கெடுக்கும்பொருட்டு அவர்க் கெதிரில் ஒரு வாளை வைத்துச் சென்றனன்; அவர் அந்த வாளை யெடுத்து, முதலில் புல், கொடி முதலியவற்றை அறுக்கத் தொடங்கிப் பின்னர் அவ்வாளைக்கொண்டே கொலை முதலிய கொடுந் தொழில்களையும் செய்து தம் தவநெறியைக் கைவிட்டுக் கெட்டனர்.

---

## "கொள்ளை விரும்பேல்."

என்றதற் கேற்ப, பிறர் பொருளைக் கொள்ளையிடுவதால் தீங்குண்டா மென்பதை விளக்கும்

### துரியோதனன் கதை.

41. கொட்டமிட்டே யுத்தரத்திற் கோக்கொள்ளை யாட வந்து, துட்டனர வக்கொடியோன் றோற்றிடுக்கண்— பட்டதனால், நீதிபரா! புன்னைவன நேயனே யேதெனினும், பேதைமையாக் கொள்ளைவிரும் பேல்.

(ப-ரை) நீதிபரா-நீதிச்செய்கையை யுடையவனே!, புன்னைவன நேயனே-புன்னைவனத்திலுள்ள நேயம் பொருந்தியவனே!, ('கொள்ளை விரும்பேல்,') என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும் கொள்ளையிடுதலை விரும்பலாகாது; அங்ஙனம் கொள்ளையிடப் புகின் மிக்க தீங்குண்டாம்; இந் நீதியை அனுசரியாமல் கொள்ளையிட விரும்பியதனால் துரியோதனனும் ஒருகாலத்தில் துன்ப மடைந்தான்; அங்ஙனம்) துஷ்டன் - தீங்குடையவனாகிய, அரவக்கொடியோன்- நாகதுவஜத்தையுடைய துரியோதனன், கொட்டமிட்டு - பல பொல்லாங்குகளைச் செய்து, (விராடதேசத்திலே) உத்தரத்தில் - வடதிசையில், கோ - பசுக்களை, கொள்ளை

யாட வந்து - அபகரித்துச் செல்ல வந்து, தோற்று - அருச்சுன னால் தோல்வி யடைந்து, இடுக்கண் பட்டதனல்-துன்ப மடைந்த தால் (நீ, இத் தொழில் கொடிதா மென்பதை யுணர்ந்து) எதெனி னும்-யாதாயினும், பேதைமையா - மூடத்தனமாக, கொள்ளை விரும்பேல் - கொள்ளையிடுதலை விரும்பாதே.

(வி-ரை.) துட்டன் அரவக்கொடியோன் - இருபெயரொட் டுப் பண்புத்தொகை. தோற்று - வினையெச்சம். பரம் - செய்கை ஆதலின், 'நீதிபரா' என்பதற்கு 'நீதிச்செய்கையை யுடையவ னே!' என்று பொருள் கூறப்பட்டது. விராடதேசத்தில் துரியோ தனன் உத்தரதிக்கிற் புகுந்து பசுக்களைக் கொள்ளையாடி அருச் சுனனாற் றோல்வி யடைந்து துன்பமுற்ற கதையைப் பாரதம் விராடபருவத்தா லுணர்க.

---

## "கோதாட்டொழி."

என்பதற் கேற்ப, குற்றமுடைய செய்கையை ஒழிக்கவேண்டு மென்பதை விளக்கும்

## செம்பியன் கதை.

42. நம்பனுக்காஞ் செவ்வந்தி நன்மலர்வே சிக்களித்த
செம்பியனு மண்மழையாற் சிரழிந்தான்—அம்புவியில்
எவ்வாறும் புன்னைவனத் தேந்தலே! நீநீதிக்
கொவ்வாத கோதாட் டொழி.

(ப - ரை) புன்னைவனத்து ஏந்தலே - புன்னைவனத்தி லுள்ள தலைவனே!, ('கோதாட்டொழி,' என்று ஒளவை கூறிய நீதிப்படி குற்றமான செய்கையை ஒழித்துவிடவேண்டும்; அங் ஙன மொழிக்காவிடின் தீங்குண்டாகும்; இந் நீதியைக் கவனியா மல்,) நம்பனுக்காம் - சிவபெருமானுக் குபயோகமாகும், நல் -

தல்ல, செவ்வந்தி மலர் - செவ்வந்தி புஷ்பத்தை, வேசிக்கு அளித்த - தாசிக்குக் கொடுத்த, செம்பியனும்—, அம் புவியில் - அழகிய பூவுலகத்தில், மண் மழையால் - மண்மாரியால், சீர் அழிந்தான் - சிறப்பழிந்தான்; (ஆதலால்,) நீ - நீயும், எவ்வாறும் - எவ்விதத்தும், நீதிக்கு ஒவ்வாத - நீதிக்குப் பொருந்தாத, கோதாட்டு-குற்றமான செய்கையை, ஒழி - நீக்கிவிடுவாயாக.

(வி-ரை) 'கோதாட்டு' என்பதில், 'ஆடு' ஈறு கெட்ட தொழிற்பெயர்; "நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட், டற வொற் றிரட்டும் வேற்றுமை மிகவே," என்னும் சூத்திர விதியால் ஆடுஎன்பது டகர மிரட்டி ஆட்டு என்ருயது. 'செம்பியனும்' என்பதில் உம்மை உயர்வுசிறப்புப் பொருளது. அவனே கோதாட்டினல் தீங்கடைந்தானெனில் மற்றைய ரடைவ ரென்பது சொல்லவும் வேண்டுமோ என்பது இதன் பொருள். இதிற் கூறப்படும் செம்பியன் கதை இன்ன நூலில் வருகின்ற தென்பது விளங்கவில்லை. இதனை வருமிடத்துக் கண்டுணர்க.

---

"சக்கரநெறி நில்."

என்பதற் கேற்ப, தெய்வத்தின் ஆக்ஞையாகிய சக்கரத்தின் வழியிலே நிற்கவேண்டு மென்பதை விளக்கும்

தண்டன் கதை.

43. மண்டலத்திற் செங்கோல் வழியிற் செலுத்தாமல்
தண்டகனென் னும்மொருவன் ருன்மடியக்—கண்டத
வேள்புரையும் புன்னைவன வித்தகா வெந்நாளும்[னல்
நீள்சக் கரநெறி நில்.

(ப - ரை) வேள் புரையும் - மன்மதனை நிகர்த்த, புன்னைவன வித்தகா - புன்னைவனத்திலுள்ள அறிஞனே!, (சக்கர நெறி

நில்,' என்று ஔவை கூறிய நீதிக்கிணங்கி எவரும் தெய்வத்தின் ஆக்ஞையாகிய சக்கரத்தின் வழியிலே பிசகாமல் நிற்கவேண்டும்; அங்ஙனமின்றிப் பிசகின் அவர்க்குக் கேடுண்டாகும்; இதற்கு உதாரணமாக) மண்டலத்தில் - இப் பூவுலகில், தண்டகன் என்னும் ஒருவன் - தண்டகன் என்னும் ஓரரசன், செங்கோல் - அரசாட்சியை, வழியில் - நல்ல மார்க்கத்திலே, செலுத்தாமல் - நடத்தாமல், (தீயவழியிலே நடத்தி,) தான் —, மடிய - அழிய, கண்டதனால் - நாம் அறிந்ததனாலே, (சக்கரநெறியில் நிற்கவேண்டுமென்பதை அவசியமாகக் கொண்டு நீயும்) எந்நாளும் - எந்த நாளிலும், நீள் - நீண்ட, சக்கர நெறி-தெய்வத்தின் ஆக்ஞாசக்கரத்தின் வழியிலே, நில் - பிசகாமல் நிற்கக்கடவாய்.

(வி - ரை) மண்டலம் - வட்டம்; இஃதாகுபெயராய் வட்டமாயிருக்கும் பூமியை யுணர்த்திற்று. 'செங்கோல்' என்பதற்கு, 'நேரான கோல்' என்பது பொருள்; இஃதாகுபெயராய்த் தன்னைப்போல் சாயாதிருக்கும் அரசாட்சியை யுணர்த்தியது. இங்கே, 'சக்கரம்' என்றது தெய்வத்தின் ஆக்ஞையாம்; அது பல நீதி நூல்களைக் குறிக்கும். தெய்வத்தின் ஆக்ஞையானது தீங்கியற்றுவோரைச் சக்கரம்போல அறுத்துத் தண்டிக்கக் கூடியதாதலின் அதனைச் 'சக்கரம்' என்றார். இங்ஙனம் ஆக்ஞையைச் சக்கரமென்றது உவமையாகுபெயர். இன்னும், முற்காலத்தில் சக்கரவர்த்திகளிடத்தில் தருமசக்கா மிருந்து தீங்கு செய்வோரைத் தண்டித்தும், நன்மை செய்வோரை ஆதரித்தும் அரசியலை நடத்துவித்துக்கொண்டிருந்ததெனச் சரித்திரங்களில் வருதலினாலே இங்குச் சக்கர மென்றதை அந்தச் சக்கரமாகக் கொண்டு, 'அரசர்களுக்குரிய நீதிச் சக்கரத்தின் வழியிலே நின்று அதற்கிணங்கி நீதியோடு நடக்கக்கடவாய்,' எனப் பொருள் கோடலுமொன்று.

சக்காரநெறி நில்லாமற் கெட்ட தண்டன் கதையாவது:—
இந்தத் தண்டனென்பவன் இக்ஷ்வாகுவின் குமாரன். இவனுக்குத் தண்டகனெனவும் பெயர்; இவன், விந்தியத்திற்கும் சைவலத்திற்கும் இடையிலுள்ள நாட்டை யாண்டவன். இவன் சக்கரநெறி நில்லாமல் மிகக் கொடியவனு யிருந்தபடியால் ஒரு சமயம் தண்டத்திற் குட்படுவா னென்பதை யுணர்ந்து இவனுடைய தந்தை இவனுக்குத் தண்டன் என்று பட்டப்பெயர் சூட்டி யழைத்தனன். இவன் ஒரு காலத்தில் பார்க்கவருடைய புத்திரியாகிய அரசை யென்பவளைக் கற்பழித்து, தன் நாடு காடாகவும், தன் நாட்டில் மண்மாரி பெய்யவும், அவரால் சாபம்பெற் றழிந்தனன்.

---

## "சான்றோ ரினத்திரு."

என்பதற் கேற்ப, பெரியோர் கூட்டத்தைச்
சார்ந்திருப்பதன் உயர்வை விளக்கும்

### அகத்தியர் கதை.

44. ஈச னுமைமணத்தி லேவடதிக் காழ்ந்ததெனக்
காசினிசீ ராகக் கலசமுனி—வாசமதாற்
செய்ததுபார் புன்னைவன தீரனே யப்படிச்சீர்
எய்திடச்சான் றோரினத் திரு.

(ப - ரை) புன்னைவனதீரனே - புன்னைவனத்திலுள்ள வீரனே!, ('சான்றோ ரினத்திரு,' என்று ஔவை கூறிய நீதிப்படி மனிதராயினர், பெரியோர் கூட்டத்தைச் சார்ந்திருக்கவேண்டும்; அங்ஙனங் கூடியிருப்பின் எவரும் கொண்டாடத்தக்க மேன்மை யுண்டாகும்; அங்ஙனம் பெரியோ ரினத்தைச் சார்ந்திருந்தபடியினுலே அகஸ்தியரும் ஒருசமயம், உலகத்தா ரெல்லோரும்

கொண்டாடத்தக்க மேன்மை யடைந்தார். அங்ஙனம் அவர் பெருமை யடையும்படி) ஈசன் - சிவபெருமான், உமை மணத்திலே - பார்வதி தேவியின் கலியாணத்திலே, (சகல தேவர்களும் உத்தர திக்கில் வந்து கூடியபடியினலே பூமியின் வடபக்கம் தாழ்ந்து தென்பக்க முயர்ந்து எல்லோருக்கும் கலக்க முண்டாக) வடதிக்கு - உத்தர திசையானது, ஆழ்ந்தது என - அவ்வாறு தாழ்ந்த தென்று கருதி, (இதனை நீக்கத் தக்கவர் யாவரென் ருராய்ந்து, அகஸ்தியர் பெரியோரோடு கூடி உயர்ந்த நிலைமையை அடைந்திருப்பதால் அவரே இதற்குத் தகுதியானவரென் றுணர்ந்து அவரைத் தென்றிசையிற்போ யிருக்கும்படி யேவி,) கலசமுனி - அந்தக் கும்பமுனியாகிய அகஸ்தியருடைய, வாசமதால் - தென்றிசை வாசத்தாலே, காசினி - (வடதிசை தாழ்ந்தும் தென்றிசை உயர்ந்து மிருந்த) இப் பூமியானது, சீராக - சமமாகிச் சிறப்படையும்படி, செய்தது - நடத்திய காரியத்தை, பார் - ஆலோசித்துப் பார்; (இதனல், சான்றோரினத்தைச் சார்ந்திருந்ததனலேயே அகஸ்தியர் இவ்வாறு மேன்மை யடைந்தா ரென்பதும், சான்றோரினத்திருத்தலின் உயர்வும் நன்கு விளங்கும்; ஆதலால் நீயும்) அப்படி - அவ்விதமாகவே, சீர் எய்திட-சிறப்படையும்படி, சான்ரோர் இனத்து இரு - பெரியோருடைய கூட்டத்தைச் சார்ந்திருப்பாயாக.

(வி - ரை) கலசமுனி - கும்பத்திற் ருேன்றியவர். 'புன்னைவன தீரனே! அகஸ்தியர் சான்ருே ரினத்தைச் சார்ந்திருந்து அரிய பெரிய தவங்களை யெல்லா மியற்றி மேன்மையுற்றபடியினலே, பூமி சமநிலை யடையும்படி செய்யும் பெரிய காரியத்திற்கும் சிவபெருமானல் ஏவப்பெற்று அதனையும் செய்து முடித்தார்; இதனல் சான்ருேரினத் திருத்தலின் உயர்வு விளங்கும்; ஆதலின் நீயும் சான்ருேரினத் திருப்பாயாக,' என்பது இதன் கருத்து.

உமாதேவியாரைச் சிவபெருமான் மணம்புரியுங் காலத்தில் அத் திருமணக் கோலங் காணும்பொருட்டுச் சகல தேவர்களும், மற்றவர்களும் இமயத்தில் வந்துகூட, அதனால் பூமியின் உத்தரதிசை தாழ்ந்து தக்ஷணதிசை யுயர்ந்து சகலரும் பயமடைந்தன ரென்பதும், சிவபெருமான் அவ்வா றுண்டான கலக்கத்தைத் தீர்க்கக் கருதி அகஸ்தியரைத் தென்றிசையிற் போயிருக்கும்படி யேவ, அவர் 'திருமணக்கோலக் காட்சி எனக்கில்லாமற் போகின்றதே' என்று வருந்த, சிவபெருமான் அகஸ்தியரிருக்கு மிடத்தில் வந்து திருமணக்கோலக் காட்சி தருவதாகச் சொல்லி அவரை யனுப்பின ரென்பதும், அவர் அங்ஙனமே புறப்பட்டுப் போய்ப் பொதிகையைச் சார்ந்திருக்கப் பூமி சமநிலை யடைந்த தென்பதும், சிவபெருமான், தாம் கூறியபடியே மண நிகழுங் காலத்தில் திருமணக்கோலக் காட்சியை அவர்க்கு நல்கின ரென்பதும், அகஸ்தியர் அங்கிருந்தபடியே குமாரக்கடவுளின் கிருபையால், அகத்தியம் முதலிய இலக்கணநூல்களைச் செய்து தமிழ்ப்பாஷையை விருத்தி செய்தன ரென்பதும் கந்தபுராண கதை.

---

## "சித்திரம் பேசேல்."

என்பதற் கேற்ப, மனிதர் பிறரிடத்தில் தம்முடைய இயலைப் பற்றித் தற்புகழ்ச்சி செய்து சித்திரமாகப் பேசுதல் கூடாதென்பதை விளக்கும்

### சூர்ப்பநகி கதை.

45. சீதைபண்பி ராவணற்குச் செப்பிக் குலங்கெடுத்த
பாதகிமூக் கன்றிழந்த பங்கம்பார்—ஆதலினால்
தாரணிக்குட்புன்னைவனத் தாடாளா தன்னையெண்ணிச்
சேரலர்க்குச் சித்திரம்பே சேல்.

(ப - ரை) புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, தாடாளா - நன் முயற்சியை யுடையவனே!, ('சித்திரம் பேசேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி எவரும், பிறரிடத்தில் தம்முடைய சிறப்பைப்பற்றிப் புகழ்ந்து கூறலாகாது; அங்ஙனம் பேசின், 'தன்னைப் புகழ்ந்த பதர்,' என்று பலராலும் இகழப்படும் இழிவு தமக் குண்டாவதோடு பல தீங்குகளும் வந்தடையும்; இதற் குதாரணமாக) சீதை பண்பு - சீதாதேவியினுடைய இயற்கை யழகை, இராவணற்கு - இராவணனுக்கு, செப்பி - சொல்லி, (சீதாதேவியை அவன் எடுத்துக்கொண்டு போய்ச் சுற்றத்தாரோடு அழியும்படி செய்து) குலம் கெடுத்த - அவனுடைய குலத்தை அழித்த, பாதகி - பாவ முடையவளாகிய சூர்ப்பநகி, அன்று - அக்காலத்தில், (இராமருக்கு முன்னே தன்னுடைய அருவருக்கத்தக்க தேக வடிவத்தைப்பற்றி இலச்சையின்றித் தன்னைப் புகழ்ந்தும் சீதையை யிகழ்ந்தும் கூறி இராமரை மணந்துகொள்ள விரும்பி) மூக்கு இழந்த - இலக்குமணரால் மூக்கறுபட்டிழந்த, பங்கம் - ஈனத்தை, பார் - நீ ஆலோசித்துப் பார், (இதனாலேயே, மனிதர் தம்மைப் புகழ்ந்து சித்திரம் பேசுவதா லுண்டாம் தீங்கு நன்கு விளங்கும்) ஆதலினல்-ஆகையினலே, தாரணிக்குள் - இப் பூமியிலே, தன்னை எண்ணு - தன்னை உயர்வாகக் கருதாத, சேரலர்க்கு-பகைவரிடத்தில், சித்திரம் பேசேல் - தன்னைப் புகழ்ந்து சித்திரமாகப் பேசாதே.

(வி - ரை) சீதை பண்பு - ஆறும் வேற்றுமைத் தொகை. 'தாரணிக்குள்' என்பதில், 'உள்' ஏழாம் வேற்றுமை யுருபு. சேரலர்க்கு - உருபுமயக்கம்; ஏழாம் வேற்றுமை நான்காம் வேற்றுமையாக மயங்கி வந்தது. ஒருவருடைய இயற்கையைப்பற்றிக் கொண்டாடாதவர் அவரோடு பகைமை யுடையரா யிருத்தல் இயல்பாதலின் அவரைச் 'சேரலர்' என்றார். இதனல், எத்தகையரும் எவரிடத்தும் தற்புகழ்ச்சி செய்யலாகா தென்பது விளங்கும்.

சூர்ப்பநகி தற்புகழ்ச்சிகூறி மூக்கறுபட்ட கதையாவது:— இந்தச் சூர்ப்பநகை விச்சிரவாவின் புத்திரி; இராவணனுக்குத் தங்கை; வித்யுச்சவனுக்கு மனைவி; இவளுக்குப் புத்திரன் சம்புகுமாரன்; இவள், தண்டகாரணியத்தில் இராமரிருக்குங் காலத்தில் காமவல்லி யென மறு பெயர் வைத்துச் சென்று அவரைக் கண்டு அவர்மீது மோகங் கொண்டு, சீதையை யிகழ்ந்து தன்னைப் புகழ்ந்து தற்பெருமை கூறிச் சீதைக்குத் துன்பியற்றத் தொடங்க, அப்போது இலக்குமணருக்கும் இராமருக்கும் கோப முண்டாக, உடனே இராமருடைய கட்டளையால் இலக்குமணர் இவளுடைய மூக்கையும், மற்றொரு அவயவத்தையும் அறுத்தனர். அதனால் இவள் மானபங்கமுற்று, கரதூஷணரையும் திரிசிரரையும் ஏவி, இராம லக்குமணரோடு சண்டை புரியும்படி செய்து அவர்களிறந்தபின், இராவணனுக்குச் செய்தி கூறி அவனையும் போரில் இழுத்துவிட்டு அவனுடைய குலத்தையும் கலத்தையும் அழித்தனள். இவள் கதையின் விரிவை, இராமாயணத்திற் காண்க.

---

"சீர்மை மறவேல்."

என்பதற் கேற்ப, புகழான செய்கையைச் செய்ய மறக்கலாகா தென்பதை விளக்கும்

கங்கைகோத்திரன் கதை.

46. உற்றதொடைப் புண்ணுக் குடைகீறிக் கட்டிநின்றான்
கொற்றவன்முன் னுன்கங்கை கோத்திரத்தான்—வெற்
மன்னான புன்னைவன வள்ளலே யாதவினால் [றிபுனை
எந்நாளுஞ் சீர்மைமற வேல்.

(ப - ரை) வெற்றி புனை - வெற்றிமாலையைச் சூடிய, மன்னான - அரசனான, புன்னைவன வள்ளலே - புன்னைவனத்திலுள்ள ஈகையாளனே! ('சீர்மை மறவேல்,' என்று ஔவை கூறிய

தற் கேற்ப எவரும் புகழான காரியத்தைச் செய்ய மறவாதிருக்க வேண்டும்; அங்ஙனம் மறவாது செய்யின் உலகத்தில் என்று மழி யாப் புகழ் நிலைபெறும்; இந்நீதி உயர்வா மென்பதைக் கருதி) உன் கங்கை கோத்திரத்தான் - உன்னுடைய கங்கை கோத்திரன், கொற்றவன் முன் - அரசனுக்கு முன்னே, உற்ற - பொருந்திய, தொடைப் புண்ணுக்கு - தொடைக்காயத்துக்கு, உடை கீறி - உடையைக் கிழித்து, கட்டி நின்ருன் - கட்டிப் புகழ்பெற்று நின்ருன்; ஆதலினுல் - ஆதலால், (நீயும்) எந்நாளும் - எந்த நாளி லும், சீர்மை - புகழான காரியத்தை, மறவேல் - செய்ய மறந்து விடாதே, (மறவாமற் செய்வாயாக.)

(வி - ரை) 'வெற்றி' என்பது ஆகுபெயராய் மாலையை யுண ர்த்திற்று. கங்கை கோத்திரத்தான் தொடைப் புண்ணுக் குடை கீறிக் கட்டினு னென்பது இச் செய்யுளால் விளங்குகின்றது. இக் கதை இன்ன நூலி லுள்ளதென்பது விளங்கவில்லை. இதனை வரு மிடத்துக் காண்க.

---

### "சுளிக்கச் சொல்லேல்."

என்பதற் கேற்ப, பிறர் வெறுக்கும்படி குற்றமான வார்த்தைகளைக் கூறலாகாதென்பதை விளக்கும்

### சகுனி கதை.

47. சகுனிதுரி யோதனற்குச் சற்பனையாக் கேடு
மிகவுரைத்துத் தன்னுயிரு மீந்த—தகைபார்
மனுநெறிதேர் புன்னை வனநாதா! யாவ
ரெனினுஞ் சுளிக்கச்சொல் லேல்.

(ப - ரை) மனு நெறி - மானிட நீதியை, தேர் - ஆராய்ந்துணர் ந்த, புன்னைவன நாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, (பிறர் வெறுக்கும்படி கேடான வார்த்தைகளையே கூறி ஒருவனைக்

கெடுக்கலாகாது; அங்ஙனம் செய்யின் தனக்கும் கேடு வருவதன்றி உலகத்தில் அழியாப்பழியும் நிலைநிற்கும்; இதுபற்றியே ஔவையும், 'சுளிக்கச் சொல்லேல்,' என்று கூறினள்; இந் நீதியை அனுசரிக்காததனால்) சகுனி - துரியோதனன் மர்மனாகிய சகுனியென்பான், துரியோதனற்கு - துரியோதனனுக்கு, சற்பனையா-சதியாக, மிக-மிகுதியாக, கேடு - கெடுதியான வார்த்தைகளையே, உரைத்து - சொல்லி, (அவனைக் கெடுத்து முடிவில்) தன் உயிரும்-தன்னுடைய உயிரையும், ஈந்த - யுத்தகளத்திற் கொடுத்த, தகை - தன்மையை, பார் - நீ ஆராய்ந்து பார்; (இக் கதையினாலே, சுளிக்கச் சொல்லுதலால் உண்டாகும் கேடு நன்கு விளங்கும்; ஆதலின்) யாவர் எனினும் - எவர்களாயிருந்தபோதிலும், (அவர்களிடத்தே) சுளிக்க-பிறர் வெறுக்கும்படி, சொல்லேல் - கேடான வார்த்தைகளைச் சொல்லி அவர்களைக் கெடுக்காதே, (நன்மையான வார்த்தைகளையே கூறு.)

(வி - ரை) விரோதிகளா யிருந்தாலும் அவர்களிடத்தும் கேடான வார்த்தை கூறலாகாதென்பது தோன்ற, 'யாவரெனினும்' என்றார்.

சகுனி, மித்திரபேதமான வார்த்தைகளைக் கூறி நயவஞ்சகமாகவிருந்து துரியோதனனைக் கெடுத்து முடிவில் தானும் உயிரிழந்த கதையின் விரிவைப் பாரதத்தா லுணர்க.

---

## "சூது விரும்பேல்."

என்பதற்கேற்ப, சூதாட்டத்தை விரும்பலாகா
தென்பதை விளக்கும்

## பாண்டவர் கதை.

48. தோராத நூற்றுவருந் தோற்றபஞ்ச பாண்டவரும்
பாரே யகன்றுபட்ட பாரதம்பார்—பேராண்மை

வற்ருத புன்னைவன மாகடலே! மிக்கசெல்வம்
பெற்ருலும் சூதுவிரும் பேல்.

(ப - ரை) புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, வற்ருத - குறையாத, மா - சிறந்த, ஆண்மைக்கடலே - ஆண்தன்மை நிறைந்த சமுத்திரமே!, (சமுத்திரம்போல் நிறைந்த ஆண்மையை யுடையவனே!) (உலகத்தில் எவரும், பஞ்சமாபாதகங்களுள் ஒன்ருகிய சூதாட்டத்தை விரும்பலாகாது; அங்ஙனம் அதனை விரும்பிச் செய்யின், எவர்க்கும் எவ்விதத்தும் கேடே யுண்டாகும்; இதை யுத்தேசித்தே ஒளவையாரும், 'சூதுவிரும்பேல்' என்று கூறினர். இதற் குதாரணமாக, சூதாட்டத்தை விரும்பியபடியால், அதில்,) தோராத - தோல்வி யடையாத, நூற்றுவரும் - துரியோதனுதியர் நூறுபேர்களும், தோற்ற-தோல்வி யடைந்த, பஞ்சபாண்டவரும் - பாண்டவர்கள் ஐந்துபேர்களும், (அச் சூதாட்டத்தினுலேயே பகைமை அதிகரித்து) பாரே - பெரிதாக வெண்ணிப் பகைமை கொண்டதற்குக் காரணமாயிருந்த பூமியே, அகன்று - தங்கள் கைவிட்டகல, பட்ட - எல்லோருமே அழிந்த, (வரலாருகிய)பாரதம் பார்-பாரதகதையை ஆராய்ந்துபார், (அதனுலேயே சூதாட்டம் எவ்வழியிலும் தீங்கு பயக்கத்தக்கதாமென்பது நன்கு விளங்கும். ஆதலால், நீ) மிக்க - அதிகமாகிய, செல்வம் பெற்ருலும் - செல்வத்தைப் பெறுவதா யிருந்தாலும், சூது - சூதாட்டத்தை, விரும்பேல் - விரும்பாதே.

(வி - ரை) தோராத, தோற்ற - பெயரெச்சங்கள். அகல என்னும் வினையெச்சம் அகன்று எனத் திரிந்துவந்தது. 'பட்ட' என்பதற்குப் பின் 'வரலாறு' என்பது இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. ஆண்மைக்கடல் - உவமையாகுபெயராய் அக்கடல் போன்றவனை யுணர்த்திற்று. பெறுவதானுலும் என எதிர்

காலங் காட்டி வருதற்பாலது, காலவழுவமைதியால் பெற்றாலும் என இறந்தகாலங் காட்டிவந்தது. பெற்றாலும் என்பது ஒருவகை வினையெச்சம், சூது விரும்பேல் என்பதனோடு முடியும். சூதாடுவோர் எதைப் பெற விரும்பி ஆடுவார்களோ அதுவும் முடிவிற் கைகூடாமற் போம் என்பது தோன்ற, 'பாரே அகன்று,' என்று ஆசிரியர் கூறினர். பாண்டவர் சூதாட்டத்தில் தோல்வியுற துரியோதனாதியர் வெற்றி பெற்றுப் பூமியை யாண்டிருந்தும் அது காரணமாகப் பகை வளர்ந்து போர் நிகழ அவர்களும், மற்றைய சுற்றத்தாரும் அப் பூமியை விட்டொழிந்தனர். பாண்டவர் பின் பூமியை யடைந்தும் சுற்றத்தா ரொருவரு மின்றி நாம் மட்டும் தனித்திருந் தரசாள்வது பயனற்றதென்று வெறுப்புற்று அவர்களும் சீக்கிரத்தில் இவ் வுலகத்தை நீத்துச் சென்றனர். ஆகவே, இரு கக்ஷியாரிடத்தும் அப்பூமி நெடுங்காலம் தங்காமற் போயிற்று. இதுபற்றியே, பாண்டவர் யுத்தத்திற்குப் பின் பூமியை யடைந்திருந்தும், அவர்களையுஞ் சேர்த்து, 'நூற்றுவரும் பாண்டவரும் பட்ட பாரதம் பார்,' என்றார். இவர்கள் சரித்திர விரிவைப் பாரதத்தா லுணர்க.

---

"செய்வினை திருந்தச் செய்."

என்பதற் கேற்ப, செய்கின்ற காரியத்தைத் திருத்தமாகச் செய்யவேண்டு மென்பதை விளக்கும்

## தக்கன் கதை.

49. வேள்விக்கு மூவருமே வேண்டுமென் றெண்ணமல்
தாழ்வுசெய்து தக்கன் தலையிழந்தான்—எழுலகும்
வீசுபுகழ்ப் புன்னைவன வித்தகா! செய்கையறிந்
தேசெய் வினை திருந்தச் செய்.

(ப - ரை) எழுலகும் - சப்தலோகங்களிலும், வீசு - பரவுகின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னை வனம்-புன்னைவனத்திலுள்ள, வித்தகா - அறிஞனே!, ('செய்வினை திருந்தச்செய்,' என்று ஔவை கூறியதற் கேற்ப, எவரும் உலகத்தில் செய்யுங் காரியத்தைச் செய்யவேண்டிய ஒழுங்கின்படி திருத்தமாகச் செய்யவேண்டும்; அங்ஙனமின்றி ஒழுங்கீனமாகச் செய்யின், தீங்குண்டாம்; இந் நீதியை யுணராமல்) தக்கன் - தக்ஷன், வேள்விக்கு - யாகத்திற்கு, மூவருமே - திரிமூர்த்திகளுமே, வேண்டும் என்று - முக்கியஸ்தரா யிருக்கவேண்டு மென்று, எண்ணாமல் - கருதாமல், (சிவனைத் தள்ளி யாகஞ் செய்யத் தொடங்கி) தாழ்வு செய்து - பெருங் குற்றத்தை இயற்றி, (சிவன் கோபத்துக்காளாகி) தலை - தன்னுடைய சிரசை, இழந்தான் - வீரபத்திரக் கடவுளாலும் காளியாலும் இழந்து வருந்தினன்; (ஆதலால்,) செய்கை அறிந்தே - இச் செய்கையைத் தெரிந்தே, (இதனால் செய்வினை திருத்தமாகச் செய்யாவிடில் தீங்குண்டா மென்பதை யுணர்ந்து நீ) செய்வினை - செய்யுங் காரியத்தை, திருந்தச் செய் - திருத்தமாகச் செய்யக்கடவாய்.

(வி - ரை) 'அறிந்தே' என்பதிலுள்ள ஏகாரம் தேற்றப் பொருளது. செய்வினை திருந்தச் செய்யாத தக்கன் தலையிழந்த கதையாவது:—இந்தத் தக்கன், பிரமனுடைய மானஸ புத்திரர்களி லொருவன்; பிரமனது கட்டைவிரலிற் பிறந்தவன்; இவன் மனைவி தாரணி; இவளைக் கூடித் தக்கன் ஆயிரம் புத்திரர்களைப் பெற்றனன். இவர்கள் நாரதர் உபதேசத்தால் துறவடைந்தனர்; அதனால் தக்ஷன் தன்னுடைய வமிசவிருத்தி யில்லாமற் போனதைப்பற்றி நாரதர்மீது கோபங் கொண்டு, அவர் நிலையில்லாமற் றிரியவும், கலகப்பிரியரா யிருக்கவும் அவரைச் சபித்துப் பின்னர் அவன் அசக்னியிடம் அறுபது பெண்களைப் பெற்றுத் தருமப்பிர

சாபதிக்குப் பத்துப் பெண்களையும், காசிபர்க்குப் பதின்மூன்று பெண்களையும், சந்திரனுக்கு இருபத்தேழு பெண்களையும், பூதா - ஆங்கிரசு - கிரிசுவா ஆகியவர்களுக்கு இரண்டிரண்டு பெண்கள் வீதம் ஆறு பெண்களையும், தாட்சயபருக்கு நான்கு பெண்களையும் கொடுத்தான். சந்திரனனவன், தனக்குக் கொடுத்த பெண்களில்: கிருத்திகை, உரோகணி ஆகிய இருவருந் தவிர மற்றவர்களிடத்து இன்பைச் செலுத்தாமலிருந்தபடியால், தக்ஷன் சந்திரன் மீது கோபங் கொண்டு கலைகள் தேயும்படி சந்திரனைத் சபித்தனன். பின்னர் தக்ஷன், சிவபெருமானை நோக்கித் தவஞ் செய்து தான் உமாதேவியைக் குமாரியாகப் பெறவும், அந்தச் சிவபெருமான் தனக்கு மருகராகவும் அவரிடம் வரம் பெற்று உமையைப் புத்திரியாக அடைந்து அவளுக்குத் தாக்ஷாயணியெனப் பெயரிட்டு அவளை வளர்த்துப் பருவகாலத்தில் சிவபெருமானுக்கு மணஞ் செய்து கொடுத்து, ஒருசமயம் தன் புத்திரியைக் காணும்பொருட்டுக் கைலைக்குச் செல்ல, அங்கே செல்லாதபடி பூதகணங்கள் தடுத்தபடியால் திரும்பிச் சிவபெருமான் தன்னை மதிக்கவில்லையென்று கோபங் கொண்டு அவருக்கு விரோதமாக ஒரு யாகஞ் செய்யத் தொடங்கி, விஷ்ணுமுதலிய தேவர்களை யாகத்தலைவராக்கி, தேவர், இருடியர் முதலியவர்களை வரவழைத்து அந்த யாகத்தைச் செய்தனன். அப்போது ததீசிமுனிவர், சிவபெருமானுக்கு அவி கொடுக்கும்படி கூறினர். தக்ஷன் அதைக் கேளாமல் யாகத்தை நடத்தினன். அப்போது அந்த யாகத்தைக் காணும் பொருட்டுத் தாக்ஷாயணியாகிய உமாதேவி அங்கே வந்தாள். அவளையும் தக்ஷன், சிவபெருமான்மீது கொண்ட விரோதத்தால் உபசரிக்காதிருந்தனன். அதனால் அவள் கோபங் கொண்டு, அவனுடைய யாகசாலையைச் சுடுகாடாகும்படி சபித்துவிட்டுச் சிவபெருமானிடம் சென்று நடந்தது கூறி அந்த யாகத்தை அழிக்கும்படி வேண்டினள். அப்போது சிவபெருமான் அந்த யாகத்தை

அழிக்கும் பொருட்டு வீரபத்திரரைச் சிருஷ்டித்தனர்; உமா தேவி காளியைச் சிருஷ்டித்தனள். பின்னர் இருவரும் யாகத்தை அழித்துவரும்படி கட்டளையிட்டு அவ் விருவரையும் அனுப்பினர். அக் கட்டளையைப் பெற்ற வீரபத்திரரும் காளியும் சென்று தக்ஷன் யாகசாலையிற் கூடியிருந்த தேவர்களை வருத்தித் தக்கன் தலையை யும் அறுத்துத் தள்ளினர். அந்தத் தலையை ஒரு பூதம் விழுங்கி விட்டது. அதன்மேல் பிரமன், தன் புத்திரனுகிய தக்ஷனை யெழு ப்பும்படி சிவபெருமானை வேண்டினன். அவர் அதற்கிசைந்து தக்ஷன் தலை அகப்படாமையால், ஒரு ஆட்டுத்தலையை யெடுத்து அவன் கழுத்திற் பொருத்தி அவனை யெழுப்பினர். அதன்மேல் தக்கன் ஆட்டுத்தலை யுடையவனுய்ப் பிரமன் கட்டளைப்படி கங்கா தீரத்தில் சிவப்பிரதிஷ்டை செய்து சிவபெருமானைப் பூசித்து சிவகணத் தலைமையை அடைந்தனன்.

---

"சேர்விடமறிந்துசேர்."

என்பதற் கேற்ப, மேலான விடத்தைச் சேருதலின் உயர்வை விளக்கும்

### மார்க்கண்டன் கதை.

50. இருமைக்கு மெய்த்துணையா மென்றுமார்க் கண்டன்
அரனடியைச் சேர்ந்தா னவன்போல்—அருள்பெருகும்
பூசா பலா!பாகை புன்னைவன மே!மனமொத்
தேசேர் விடமறிந்து சேர்.

(ப - ரை) அருள் பெருகும் - சீவராசிகளிடத்திற் கிருபை அதிகரிக்கின்ற, பூசாபலா-தேவபூஜையின் பலனை யுடையவனே!, பாகை - பாகையையுடைய, புன்னைவனமே - புன்னைவனத்தி லுள்ளவனே!, ('சேர்விடமறிந்துசேர்,' என்று ஒளவை கூறிய

நீதிப்படி மனிதராயினோர், சேரத்தக்க உயர்வான விடத்தை யறிந்து சேரவேண்டும்; அங்ஙனம் சேரின் இருமையிலும் நன்மையுண்டாம்; இந் நீதியை அனுசரித்தே,) மார்க்கண்டன்-மார்க்கண்டேயன், இருமைக்கும் - இம்மை மறுமையென்னு மிரண்டிடத்திற்கும், மெய்த்துணையாம் என்று - உண்மைத் துணையாகுமென்று கருதி, அரன் அடியை - சிவபெருமானுடைய திருப்பாதத்தை, சேர்ந்தான் - அடைந்து தனக்குப் பதினறு வயது ஏற்பட்டிருந்தும் சிவனருளால் என்றும் பதினறுகிய சிரஞ்சீவி வரம் பெற்றான், (ஆதலால்) அவன்போல் - அந்த மார்க்கண்டேயனைப்போலவே, மனம் ஒத்து-மனம்பொருந்தி, சேர்விடம் அறிந்து - சேரத்தக்க மேலான விடத்தை யறிந்து, சேர்-அடையக் கடவாய் (அதனால் மிக்க மேன்மை யுண்டாகும்.)

(வி - ரை) இருமை - உம்மை, மறுமை; இம்மை - இவ்வுலக வாழ்வு; மறுமை - இதற் கடுத்துவரும் மேலுலக வாழ்வு. அடியிற் சார்ந்தான் என்பது உருபு மயக்கத்தான், 'அடியைச் சார்ந்தான்' என வந்தது. 'புன்னைவனம்' என்பது இடவாகு பெயராய் அதிலுள்ள தலைவனை யுணர்த்திற்று. சேர் இடம் 'சேர்விடம்' என்றாயது; இதில் இவ் எழுத்துப்பேறு; இதனை: "மெய்யீற் றுடம்படுமெய்" என்பர் நச்சினார்க்கினியர்; இது, 'எகர வினா முச்சுட்டின் முன்னர்' என்னும் சூத்திரவிதியில், 'நெறி' என்ற மிகையால் கொள்ளப்பட்டது; 'விண்வத்துக் கொட்கும்,' 'செலவுழிச் செல்க' என்பன இதற்கு உதாரணமாம்.

மார்க்கண்டேயர் கதையாவது:—இவர், மிருகண்டு முனிவருக்கு மருத்துவதி தேவியிடம் பிறந்த புதல்வர்; இவருக்குப் பதினறு வயதில் ஆயுள் முடிவேற்பட்டிருந்தபடியால் அதனை யுணர்ந்த இவருடைய தாய்தந்தையர் இவரிடம் அவ் வுண்மையைக் கூற, இவர், 'அதற்குள் சிவனடியைப் பூசித்து அவனருளைப் பெற்றுக்

கொள்ளவேண்டும்' என்று கருதி உறுதியான மனத்துடனே சிவ பூஜை செய்யத்தொடங்கி, அச் சிவபெருமானிடத்தே மனதைச் செலுத்தி வேறு சிந்தனையின்றி யிருந்தார். அப்படி யிருக்கும்போது இவருக்கு ஆயுள் முடிந்துவிட்டபடியால் அச் சமயத்தில் யமன் வந்து இவர்மீது பாசத்தை வீசினன். அங்ஙனம் வீசியும் இவர் சிவ பூஜை நிலை தவறும லிருந்தார். அப்படி யிருந்தும் மேலும் யமன் இவரை வருத்தினன். அதனுல் சிவபெருமான் கோபங்கொண்டு சிவலிங்கத்தினிடமிருந்து உக்கிரமூர்த்தியாய்த் தோன்றி யமனை உதைத்துத் தள்ளி, என்றும் பதினுறுவயதுட னிருக்கும்படி மார்க்கண்டேயருக்குச் சிரஞ்சீவி வரங் கொடுத்தருளினுர். பின் னர், பூமிதேவி வேண்டியதற் கிரங்கி யமனையும் எழுப்பி அவனுக் கனுக்கிரகஞ்செய் தனுப்பினர். இந்த மார்க்கண்டேயர், பாண்ட வர்க்குத் தருமங் கூறினர்; அநேகம் ஜலப்பிரளயங் கண்டவர்; இந் திரத்துய்ம்மனைச் சந்தித்து ஆயுளின் அளவைக் கூறியவர்; கோட் டானைச் சந்தித்து ஆயுளின் அளவைக் கேட்டவர்; கண்ணனைச் சிவபூஜைக்குக் காரணம் வினவி அவரால் முதற்பொருள் அறிந்த வர். ஒருகாலத்தில் மகாவிஷ்ணுவின் தேகத்துட் புகுந்து பிரபஞ் சங்களைக் கண்டவர்.

---

## "சையெனத் திரியேல்."

என்பதற் கேற்ப, பெரியோர் பார்த்துச் சீயென்று அருவருக் கும்படி மனிதர் திரியலாகா தென்பதை விளக்கும்

### மாரீசன் கதை.

51. தூயபாகு ராமன்பால் சோரமுனி மாரீசன்
மாயமா னய்த்திரிந்து மாய்ந்ததுபார்—ஞாயமன்று
வீசுபுகழ் புன்னைவன மேகமே யித்தலத்தி
லேசை யெனத்திரி யேல்.

(ப - ரை) வீசு - உலகத்திற் பரவுகின்ற, புகழ் - கீர்த்தியை யுடைய, புன்னைவன மேகமே - புன்னைவனத்தி லிருக்கின்ற மேகம் போன்றவனே!, ('சையெனத் திரியேல்,' என்று ஔவை நீதி கூறியிருப்பதால் எவரும், பெரியோர் பார்த்துச் சீயென்று சொல்லி அருவருக்கும்படி நீதிக்குப் பொருந்தாத காரியங்களைச் செய்ய லாகாது; அங்ஙனம் செய்யின் உலகத்தில் மிக்க தீங்கே யுண்டாகும்; புகழு மின்றாம்; இதற் குதாரணமாக) மாரீசன் - மாரீசனென்பவன், சோரம் உன்னி - வஞ்சனை கருதி, தூய - பரிசுத்தமுடைய, இரகுராமன்பால் - இரகுராமமூர்த்தியினிடத்தே, மாய மானாய் - சூதான பொய்மானாகச் சென்று (சீதையை இராவணன் எடுத்துச் செல்வதற் குதவியாக), திரிந்து - உலாவிச் சஞ்சரித்து, மாய்ந்தது - இறந்த கதையை, பார் - நீ ஆராய்ந்து பார்; ஞாயம் அன்று - இது ஞாயமல்லாத செய்கையாகும், (இதனாலேயே சையெனத் திரியலாகா தென்பது விளங்கும்; ஆதலால் நீயும்) இத்தலத்திலே - இப் பூவுலகின்கண்ணே, சை என - பெரியோர் பார்த்துச் சீயென்று அருவருக்கும்படி, திரியேல் - கெட்ட காரியங்களைச் செய்துகொண்டு திரியாதே.

(வி - ரை) தூய - பெயரெச்சம். இரகு - இராமருடைய இரண்டாம் பாட்டன்; இவர் அந்த இரகுவமிசத்தில் வந்த காரணத்தைக் கொண்டு இரகுராமர் எனப்பட்டார். உன்னி யென்பது 'உனி' என நடுக்குறைந்து வந்தது. மேகம் - உவமையாகுபெயர். இது மேகத்தைப் போன்ற ஈகைத்தன்மையுடைய புன்னைவனநாதனை யுணர்த்திற்று.

மாய மானாகி யிறந்த மாரீசன் கதையாவது:— மாரீசனென்பவன், தாடகையிடம் சுநந்தனுக்குப் பிறந்தவன்; இவன் ஒரு காலத்தில், தன் தகப்பனைக் கொன்ற அகஸ்தியரை வெல்லக் கருதி அவர்பாற் சென்று, அவரால் அரக்கனாகச் சபிக்கப்பட்டுச்

சுமாலியைத் தந்தையாக அடைந்தவன்; சுபாகின் சகோதரன். விசுவாமித்திரர் யாகஞ்செய்யுங் காலத்தில் இவன், தன் சகோதரனாகிய சுபாகுவுடன் சென்று அந்த விசுவாமித்திரருடைய யாகத்திற் கிடையூறு செய்யத் தொடங்கினன். அதனால் விசுவாமித்திரர் இவ்வித இடையூறு உண்டாகா திருக்கும்பொருட்டு இராமரை அழைத்து வந்து அந்த யாகத்திற்குக் காவலாயிருக்கும்படி யேற்படுத்தியும், யாகத்திற் கிடையூறுசெய்பவரைக் கொல்லும்படிக்கும் அவருக்குக் கட்டளையிட்டிருந்தார். இப்படியிருக்கும்போது மாரீசனும், சுபாகுவும் அந்த யாகசாலையைச் சமீபித்து அதனைக் கெடுக்க ஆரம்பித்தார்கள். அப்போது, இராமமூர்த்தி ஆக்னேயாஸ்திரத்தை யேவி மாரீசனைக் கடலில் தள்ளினர். அதனால் இவன், 'இராமருக் கெதிரே சென்றால் ஆபத்து நேரும்' என் றச்சங்கொண்டு தென் கடற்கரையில் ஓர் ஆச்சிரமம் ஏற்படுத்தி அதிலிருந்து தவஞ் செய்துகொண்டுவந்தான். இவன் பின்னர் இராமர் ஆரணிய வாசத்திற்கு வந்திருக்குங் காலத்தில் இராவணன் வேண்டுகோளால் இராமரை யேமாற்றும்பொருட்டுப் பொன்மானுருக் கொண்டு சீதைக்கு முன்னே மேய, அவள் அந்த மானுருவத்தைக் கண்டு மயங்கி, தனக்கு அம்மானைப் பிடித்துத் தரும்படி இராமரை வேண்டினள்; இராமர் அவ்வாறே அதனைப் பிடிக்கும்படி பின் தொடர்ந்து அது நெடுந்தூரம் தம்மை ஏமாற்றி யழைத்துக்கொண்டு போனபடியால் அதனை மாயமா னென்று நினைத்து அதன் மீது அஸ்திரத்தைப் பிரயோகித்தார். அந்த அஸ்திரம் படவே மாயமா னுருவமா யிருந்த மாரீசன் தன் உருவத்துடனே மேலும் சீதையை இராவணன் கொண்டுசெல்வதற் கேதுவாக, "சீதா! இலக்ஷ்மணா!" என்று இராமர் அபாய காலத்திற் கூறுவது போலக் கூறி உயிரை விட்டனன். இந்த சப்தத்தால் 'இராமருக் காபத்து வந்தது' என்று சீதை ஏமாந்து தனக் குதவியாயிருந்த இலக்குமணனை அவர் சென்றவழியே அனுப்பித் தான் தனித்திருந்து

இராவணனாற் கொண்டுபோகப்பட்டாள். இதற்கு உதவியாயிருந்தவன் மாரீசன்; அதனாலேயே அவ னிறந்தான்.

---

## "சொற்சோர்வு படேல்."

என்பதற் கேற்ப, பேசுங்காலத்தில் சோர்வுண்டாகப் பேசுவதால் தீங்குண்டா மென்பதை விளக்கும்

## கும்பகர்ணன் கதை.

52. நித்தியத்தைக் கேட்கப்போய் நித்திரையென் றே
குளறிப், புத்தியற்ற கும்பகர்ணன் பொன்றினன்பார்-
மத்தமத, குன்றம்போற் புன்னைவனக் கொற்றவா!
பாகைமன்னா!, என்றுஞ்சொற் சோர்வு படேல்.

(ப-ரை) புன்னைவனக் கொற்றவா-புன்னை வனத்திலுள்ள வெற்றி பொருந்தியவனே!, பாகை மன்னா - பாகையையுடைய அரசனே!, (மனிதராயினோர் என்றும் எவரிடத்தும் பேசுங் காலத்தில் சொற்களிலே சோர்வுபடாமற் பேசவேண்டும்; அங்ஙனமின்றிச் சொற்சோர்வுபடப் பேசின் மிக்க தீங்குண்டாகும்; இதுபற்றியே ஔவையும், 'சொற்சோர்வு படேல்,' என்று கூறினள். இந்நீதியை யுணராமையால், திருத்தமாகப் பேசுந் திறனற்று) புத்தி அற்ற-மதி யில்லாத, கும்பகர்ணன்-கும்பகர்ண னென்போன், நித்தியத்தை - தனக்கு அழிவின்மையை, கேட்கப்போய் - பிரமனிடம் கேட்கச் சென்று, நித்திரை யென்று குளறி-தூக்கமென்றுளறிக் கூறி, (அதனால் தான் அதிகரித்த தூக்க முடையவனாகி) மத்தம்-களிப்பையுடைய, மதகுன்றம்போல் - மதம்பொருந்திய மலையை நிகர்த்த யானையைப்போல, பொன்றினன் - அற்பாயுளா யிறந்தனன்; பார்-இதனை நீ ஆராய்ந்துபார்; (இதனாலும் சொற்சோர்வுபடல் தீங்கா மென்பது நன்கு விளங்கும்;

10

ஆதலின் நீ,) என்றும் - எப்பொழுதும், சொற்சோர்வு படேல் - பேசுங்காலத்தில் சொற்களிலே சோர்வடையாதே, (திருத்தமாகப் பேசக்கடவாய்.)

(வி - ரை) நித்தியம் - எப்பொழுதும் அழிவின்றி யிருத்தல். கும்பகர்ணன் - கும்பம்போன்ற காதுகளையுடையவன். 'குன்றம்' என்பது "மதம்' என்கிற அடைமொழிக் குறிப்பால் யானையை யுணர்த்திற்று; இஃது உவமையாகுபெயராம்.

திருத்தமாகப் பேசுதலின்றி, நித்தியத்துவம் வேண்டுமென்று கேட்டற்கு நித்திராதத்துவம் வேண்டுமென்று கேட்டுப் பொன்றிய கும்பகர்ணன் கதையாவது:— இந்தக் கும்பகர்ணனென்பவன், விசிரவசுவிற்குக் கேகசியிட முதித்தவன்; இராவணனுக்குத் தம்பி; இவன், 'நித்தியத்துவம் வேண்டும்' என்று பிரமனை நோக்கித் தவஞ்செய்ய, தேவர்கள் 'அங்ஙன மவன் வரம் பெற்றுற் கெடுதியாம்' என்று கருதி அதனைத் தடுத்துவிடும் பொருட்டுப் பிரமதேவனிடம் சென்று, அங்ஙனம் வரங் கொடாதிருக்கும்படி வேண்டிக்கொண்டதோடு, சரஸ்வதியிடம் சென்று "இவன் அவ்வாறு வரங் கேட்குங் காலத்தில், இவனுடைய நாவிலிருந்து நித்தியம் என்ற வார்த்தையை நித்திரையென்று புரட்டிவிடவேண்டும்" என்றுங் கேட்டுக்கொண்டனர். கலைமகள் அதற் கிசைந்தனள். பின்னர் இவன் வரங் கேட்குங்காலத்தில், சரஸ்வதியிருந்து நாவைப் புரட்டிய காரணத்தால், நித்தியத்துவம் வேண்டு மென்பதற்குப் பதிலாக 'நித்திராதத்துவம் வேண்டும்' என்று வரங்கேட்டான். பிரமன் அவ்வாறே வர மளித்தனன். அதனால் இவன் அதிகரித்த நித்திரை யுடையவனாயிருந்து இராவண சம்மாரகாலத்தில் உயிர் துறந்தனன். இவன் சரித்திர விரிவை இராமாயணத்தா லுணர்க.

---

## "சோம்பித் திரியேல்."

என்பதற் கேற்ப, சோம்பலின்றித் தொழில் செய்வோர் நன்மை யடைவா ரென்பதை விளக்கும்

### நளன் கதை.

53. நளனிருது பன்னன்றேர் நாளொன்றில் வீமன்
வளநகரிற் சேர்த்து மனையாள்—உளமகிழ
நின்றதுபார் புன்னைவன நேயனே! தன்முயற்சி
என்றுஞ்சோம் பித்திரி யேல்.

(ப - ரை) புன்னைவன நேயனே - புன்னைவனத்திலுள்ள நேயம் பொருந்தியவனே!, (உலகத்தில் எவரும் தொழில் செய்யுங் காலத்தில் சோம்பலுற்றுத் திரியலாகாது; அங்ஙனந் திரிவார்க்கு எத்தொழிலுங் கைகூடாமற் போவதுமன்றி எக்காலத்தும் தரித்திரமும் நீங்காது; சோம்பலின்றித் தொழில் செய்வார்க்கு எல்லா நன்மையுங் கைகூடும்; இதுபற்றியே ஔவையும், 'சோம்பித் திரியேல்,' என்று கூறினள்; இந் நீதியை அனுசரித்து) நளன் - நளமகாராஜன், இருதுபன்னன் தேர் - இருதுபன்னனுடைய இரதத்தை, நாள் ஒன்றில் - ஒரே தினத்தில், வீமன் - வீமராஜனுடைய, வள நகரில் - வளம் பொருந்திய நகரத்தில், சேர்த்து- சோம்பலின்றிச் சுறுசுறுப்பாகக் கொண்டுபோய்ச் சேர்த்து, (அந்த இருதுபன்னனை மகிழ்வித்துத் தன்னைப் பிடித்திருந்த கலியும் நீங்கப்பெற்றுத் தான் வேற்றுரு நீங்கி உண்மை வடிவத்துடன் வெளிப்பட்டு) மனையாள்-தன்னுடைய மனைவியாகிய தமயந்தி, உளம் மகிழ - மனம் சந்தோஷிக்கும்படி, நின்றது பார் - கீர்த்தியுடனே நின்ற செய்கையை ஆராய்ந்துபார், (இதனாலேயே சோம்பலை நீக்கிச் சுறுசுறுப்புட னிருப்பதன் உயர்வு நன்கு விளங்கும்; ஆதலின், நீயும்) தன் முயற்சி - தன்னுடைய தொழின் முயற்சியிலே, என்றும் - எப்பொழுதும், சோம்பித் திரியேல் -

சோம்பலுற்றுத் திரியாதே, (சுறுசுறுப்புடன் தொழில் நடத்திச் சீர்த்தியையுங் கீர்த்தியையு மடைவாயாக.)

(வி - ரை) இருதுபன்னன் தேர் - ஆறும் வேற்றுமைத் தொகை. மகிழ - வினையெச்சம். நளன் மிக்க தாழ்மை யடைந்திருந்தும் சோம்பலின்றித் தொழில் நடத்தியபடியால் தன் குறைவு நீங்கப்பெற்று மேன்மை யடைந்தான்; ஆதலின், புன்னை வன நேயனே! நீயு மங்ஙனஞ் சோம்பலை நீக்கின் உயர்வடைவாய் என்பது இச் செய்யுட் கருத்து.

நளன் விரைவிற் றேர் செலுத்தி உயர்வுற்ற கதையாவது:— நளன் சூதாட்டத்தினால் தன்னுடைய நாடு நகரம் முதலிய செல்வங்களை யெல்லா மிழந்து, மனைவி மக்களையும் பிரிந்து, சனியின் வஞ்சனையால் வேற்றுரு வடைந்து, அயோத்தியை யாண்ட இருதுபன்னன்பாற் போய்ச் சேர்ந்து, சுயம்பாகத் தொழிலிலும் அசுவவித்தையிலும் வல்லவனாய்த் தொழில் புரிந்து வந்தனன். அப்போது அவன் மாமனாகிய வீமன், 'அந்த நளன் அயோத்தியி லிருக்கின்றான்' என்று சந்தேகித்துத் தமயந்தியின் வேண்டுதற்படி அவனைக் காணவேண்டிப் பொய்யாகத் தமயந்திக்கு மறு சுயம்வரம்' ஏற்படுத்தி, 'மறுநாளே சுயம்வரம்' என்று இருதுபன்னனுக்குச் சொல்லும்படி ஒரு வேதியனை யனுப்ப, அவன் அவ்வாறே சென்று அம் மன்னனுக் கறிவித்தான். அப்போது இருதுபன்னன் நளனை யழைத்து, "நீ என் இரதத்தில் தகுந்த குதிரைகளைப் பூட்டி இன்றைக்கே என்னைக் குண்டினபுரத்திற் கொண்டுபோய்ச் சேர்க்கவேண்டும்," என்று கூற, அவன் அதற் கிசைந்து தான் கற்றிருந்த அசுவஹிருதய வித்தையின் பலத்தால் அவ்வாறே தேரைச் செலுத்திக் குறித்த நேரத்தில் அவனைக் குண்டினபுரத்திற் கொண்டுபோய்ச் சேர்த்துத் தானும் கலி நீங்கப்பெற்று மேன்மை யடைந்தான். இக்

கதை, நைடதம் முதலிய நூல்களில் விரிவாகக் காணப்படும். நளன் விரைந்து தேர் செலுத்தி ஒரே தினத்தில் இருதுபன்னனை வீமன் நகரிற் சேர்த்தா னென்பது,

"தளரு நுண்ணிடைத் தமயந்தி சுயம்வர நாளை
யுளைவ யப்பசும் புரவி னுள்ளமோர்ந் தனையேற்
றெளியுங் கேள்வியாய்! விரைவினிற் செலுத்துக தேரென்
றளிமு ரன்றுபைந் தேனுகர் தாரினு னறைந்தான்."

என, நைடதம் கலிநீங்கு படலத்தில் இருதுபன்னன் நளனுக் குரைத்ததாக வருஞ் செய்யுளானும்,

"நோறில்வ யப்பரித் தேர்பண்ணி நொய்தினிற் கொணரா
எறுழ்வ லித்தடந் தோளினுய்த் தேர்மிசை யிவரின்
நறும லர்ப்பசும் பூந்தொடை விதர்ப்பர்கோ னூட்டில்
உறுவ லிப்பகல் கழிவதன் முன்னென வுரைத்தான்."

என, நளன் இருதுபன்னனுக் குரைத்ததாக வருஞ் செய்யுளானு முணரப்படும். இச் செய்யுளில், 'நாள் மூன்றில் வீமன் வளநகரிற் சேர்த்து,' என்று நாள் மூன்றெனக் கூறப்பட்டிருந்தது. இது, நைடதம் முதலிய நூல்களிற் சொல்லப்பட் டிருப்பதற்கு விரோதமா யிருந்தபடியால் அவற்றிற் கேற்ப நாள் ஒன்றெனத் திருத்தி இந்த நைடதச் செய்யுட்களை உதாரணங் காட்டினும்.

---

"தக்கோனெனத்திரி."

என்பதற் கேற்ப, பெரியோர்கள் பார்த்துத் தக்கோனென்று மதிக்கும்படி, மனிதன் புண்ணிய செய்கை யுடையவனாய்த் திரியவேண்டு மென்பதை விளக்கும்

திருஞானசம்பந்தர் கதை.

54. சைவசம யத்தைத் தலையாகச் சம்பந்தர்
செய்ததனு லியாண்டுஞ் சிறப்புற்றார்—வையகத்தில்

பொங்குபுகழ்ப் புன்னைவன பூபாலா! பாகைமன்னா!
எங்குந்தக் கோனெனத் திரி.

(ப - ரை) வையகத்தில் - இப் பூவுலகின்கண்ணே, பொங்கு- அதிகரிக்கின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவன பூபாலா - புன்னைவனத்திற் கிறைவனே!, பாகை மன்னா - பாகை புனைந்த வேந்தனே!, ('தக்கோனெனத்திரி,' என்று ஔவை கூறிய நீதிப்படி உலகத்திற் புகழடைய விரும்புவோர், பெரியோர் பார்த்து இவர்கள் தகுதியானவர்கள் என்று மதித்துச் சொல்லும் படி நன்மையான காரியங்களையே செய்துகொண்டு திரியவேண்டும்; அங்ஙனம் செய்யின் இம்மையிற் புகழும் மறுமையில் நற் பதவியு முண்டாம்; இந் நீதியைக் கடைப்பிடித்து) சம்பந்தர் - திருஞான சம்பந்தமூர்த்தி, சைவசமயத்தை - சிவமதத்தை, தலையாக - எல்லாவற்றுள்ளும் உயர்ந்ததாக, செய்ததனால் - செய்துவந்தபடியினாலே, யாண்டும் - எவ்விடத்தும், சிறப்புற்றார் - கீர்த்திபெற்று மேன்மை யடைந்தார்; (ஆகையினாலே நீயும் இந் நீதியை யனுசரித்து) எங்கும் - எவ்விடத்தும், தக்கோன் என - பார்ப்பவர் 'இவன் நற்றகுதி யுடையவன்' என்று சொல்லும்படி, திரி - புண்ணிய காரியங்களை நடத்திக்கொண்டு திரிவாயாக.

(வி - ரை) 'தலைமை' என்னும் பண்புச்சொல் மைவிகுதி கெட்டுத் 'தலை' என நின்றது. பொங்குபுகழ் - வினைத்தொகை. திருஞான சம்பந்தர் சைவசமயத்தை உயர்வடையச் செய்து மேன்மை யடைந்த கதையைப் பெரியபுராணத்தா லுணர்க.

---

"தானமது விரும்பு."

என்பதற் கேற்ப, மனிதர் ஈகை யுடையவரா யிருத்தலின் உயர்வை விளக்கும்

## கன்னன் கதை.

55. முன்செய் யறத்தை முகுந்தற் களித்தகன்னன்
பின்செயலு மீதலுறப் பேறுபெற்றான்—றன்செயல்
ருதாவாம் புன்னைவனத் தாடாளா! பூமியின்மே[பொற்
லேதா னமது விரும்பு.

(ப - ரை) தன் செயல் - தன்னுடைய ஈகை பொருந்திய செய்கையினாலே, பொன்-பொன்னையுடைய, தாதாவாம் - வள்ளலாகின்ற, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, தாடாளா - நன்முயற்சியாளனே!, (உலகத்தில் மானிடராகப் பிறந்தவர்க்கு, வறுமைப்பட்டோர் விரும்பியதைக் கொடுத்தலாகிய தானமே சிறந்ததாம்; ஆதலின், தானத்தைச் செய்வோர் இவ் வுலகத்தில் அழியாப் புகழையும், மேலுலகத்தில் நற்பதவியையும் அடைவர்; ஔவையும் இத் தானத்தின் உயர்வை விளக்குதற் பொருட்டே, 'தானமது விரும்பு,' என்று கூறினள். இங்ஙனம் இந்தத் தானம் உயர்வா யிருப்பதுபற்றியே,) முன் செய் - முன்னே இயற்றி வந்த, அறத்தை - தருமத்தை யெல்லாம், முகுந்தற்கு - மகா விஷ்ணுவாகிய கிருஷ்ணமூர்த்திக்கு, அளித்த - உயிர் நீங்குங் காலத்திலும் மனமிசைந்து கொடுத்த, கன்னன் - கர்ணராஜன், பின் செயலும் - தான் அடுத்த ஜன்மம் எடுத்த பின்பு ஏற்படுஞ் செய்கையும், ஈதல் உற - ஈகையாகவே பொருந்தும்படி, (அக் கிருஷ்ணமூர்த்தியிடம வரங்கேட்டு அங்ஙனமே) பேறு - வரப் பேற்றை, பெற்றான் - அடைந்தான்; (ஆதலால், நீயும் அத் தானத்தின் உயர்வை யுணர்ந்து) பூமியின்மேலே-இப் பூவுலகத்தி

லே, தானமது - கொடுத்தலையே, விரும்பு - விரும்பிச் செய்வாயாக.

(வி - ரை) தானமது - இதில், 'அது' முதல்வேற்றுமைச் சொல்லுருபு; ஆவென்பது, சாத்தனுகிறவன் என்பனபோலக் கொள்க. சிலர் அகரம் சாரியை யெனவும், து - பகுதிப்பொருள் விகுதி யெனவுங் கூறுவர்.

**தானத்தை மிகுதியாக விரும்பிப் புகழ் பெற்ற கர்ணன் கதையாவது:**—குந்திதேவி கன்னிகையா யிருக்கும்போது அவளுடைய தந்தை தூருவாசருக்குத் தொண்டு புரியும்படி அவளையனுப்ப, அவ்வாறே சென்று அவள் அவருக்கு எவ்விதத்தாலும் கோபம் வராதபடி நடந்துகொள்ள அதனு லவர் சந்தோஷித்துத் தேவர்களை வரவழைத்துச் சந்ததி விருத்தி செய்துகொள்ளக் கூடிய ஐந்து மந்திரங்களை அவளுக் குபதேசித்துச் சென்றனர். அதன்மேல் ஒருசமயம் அவள் மேலுப்பரிகையில் உலாவும்போது அம் மந்திரங்களில் ஒன்றைப் பரீக்ஷிக்க விரும்பி உச்சரித்தனள். அங்ஙன முச்சரிக்கவே, அதற்குரிய சூரியன் பிரசன்னமாகித் தன்னோடு கூடும்படி அவளை வேண்ட, அவள் 'நான் கன்னிகையா யிருக்கின்றேனே,' என்று நாண, உடனே அவளுக்கு யௌவன பருவ மளித்து அவளைக் கூடிப் புத்திரன் பிறந்த பின்பு மீண்டும் கன்னிகையாகும்படி அவளுக்கு வரங் கொடுத்துச் சென்றனன். அப்போது அவள் வயிற்றில் கவச குண்டலதாரியாய் இக் கர்ணன் பிறந்தனன். ஊர் அபவாதத்துக் கஞ்சிக் குந்திதேவி இவனைப் பெட்டியில் வைத்து ஆற்றில் விட்டு மீண்டும் கன்னியாயினள். அப் பெட்டி அத்தினபுரிக்கு நேரே செல்ல, அதிரதனென்னும் சாரதி அதனை யெடுத்துடைத்துக் கர்ணனைக் கொண்டுபோய் அருமையாக வளர்த்துவந்தான். இவன் குண்டலம் நிறைந்த காதலங்காரத்தோடு பிறந்த காரணத்தால், இவனுக் கப்போது ஆகாய

வாணியால் கர்ணன் என்று பெர் கூறப்பட்டது. இவன் அச் சூதனிடம் வளர்ந்துவருங் காலத்தில் குழந்தையா யிருக்கும்போதே, சூரிய புத்திரன் என்பதை யுத்தேசித்துச் சப்தரிஷிகளும் இவனிடம் வந்து குழந்தைகளை யழைக்கும் வழக்கப்படி கைதட்டி யழைக்க, அவர்கள் ஏதோ தன்னிடம் கேட்கிறார்களென்று கருதித் தான் உச்சியிற் றரித்திருந்த நெற்றிச் சுட்டியை எடுத்துக் கொடுக்கப்போனான்; அதனால், அவர்கள் மகிழ்ந்து, 'இவன் மகா வள்ளலாகக்கடவன்,' என்று வாழ்த்திச் சென்றனர். அதன்மேல் இவன் சுகமாக வளர்ந்து பரசுராமரிடம் வில்வித்தை கற்றுத் தனக்கு வில்வித்தை கற்றுக்கொடுக்க மறுத்த துரோணர்மீது வெறுப்புற்ற காரணத்தால் அவருடைய மாணாக்கரிற் சிறந்தவனாகிய அர்ச்சுனனோடு பகைமைகொண்டிருந்தான். அதனால், முன்னரே பாண்டவரோடு பகைகொண்டிருந்த துரியோதனன் இந்தக் கர்ணனோடு சிநேகங் கொண்டு இவனை அங்கதேசாதிபதியாக்கினன். அதன்மேல் இவன் மகா கொடையாளியாய்த் தன்னிடம் வரும் யாசகர் வேண்டியவற்றை யெல்லாம் இல்லை யென்னாமற் கொடுத்துக் கீர்த்தி பெற்றிருந்தான். பின்னர் பாண்டவர்க்கும் துரியோதனாதியர்க்கும் யுத்த மூண்ட சமயத்தில் குந்தி தேவி இவனிடம் சென்று தான் இவனுக்குத் தாயென்பதையும் பாண்டவர் சகோதரர் என்பதையு முணர்த்தி, அருச்சுனனுக்காக இவன் வைத்திருந்த நாகாஸ்திரத்தை ஒரு முறைக்குமேல் அவன் மீது பிரயோகிக்கா திருக்கும்படி வேண்ட, அவ்வாறே செய்வதாக அவளுக்கு வரங் கொடுத்து, தான் இறந்தபின் தன்னை அவளுடைய புத்திரனென்று உலகத்திற்கு வெளிப்படுத்தும்படி அவளிடம் வரம் பெற்றான்; பின்னர், இவன் பாரதயுத்தத்தில் பாண்டவசேனையுடன் கடினமான யுத்தஞ் செய்ய, அப்போது இவன் கவசகுண்டலங்களை யணிந்திருந்த காரணத்தால் இவனை வெல்வது அருச்சுனனுக்குப் பிரயாசையா யிருந்தபடியால், அவற்

றைக் கவரும்படி அவன் இந்திரனை வேண்ட, அவ்வாறே இந்திரன் பிராமண வுருக்கொண்டு வந்து இந்தக் கர்ணனிடம் கவச குண்டலங்களை யாசிக்க, இவன், அவை தனக்கு ஜெயத்தை யுண்டாக்கக் கூடியவைகளா யிருந்தும் அவற்றைப் பெரிதாக நினையாமல் அவ் விந்திரனுக்குக் கொடுத்தனன். அதன்மேல் இவன் பதினேழாநாள் யுத்தத்தில் தளர்ந்துபோயிருக்க, இவனைக் கொல்லும்படி அர்ச்சுனன் பல பாணங்களை யேவியும், 'தருமம் தலை காக்கும்,' என்ற உயர்ந்தோர் வாக்கின்படி இவனாற் செய்யப்பட்ட தரும மெல்லாம் தருமனைப்போல எதிரே தோன்றி, அப் பாணங்கள் கர்ணன்மீது படவொட்டாமல் தடைசெய்ய, ஸ்ரீ கண்ணபிரான் அதனை யுணர்ந்து, பிராமண வடிவத்துடன் சென்று இவனிடம் தருமத்தை யாசிக்க, இவன் அவ்வாறே அதனைக் கொடுக்க விசைந்து தாரை வார்க்க நீரில்லாமையால், தன்னுடலிற் பாய்ந்திருந்த ஓர் அம்பைப் பிடுங்கி அவ்விடத்தி லொழுகிய இரத்தத்தைப் பிடித்துத் தாரைநீராக வார்த்துத் தன்னுடைய தருமத்தை யெல்லாம் அவருக்குக் கொடுத்து, அப்போது அந்த ஸ்ரீ கண்ணபிரான் இவனை நோக்கி, 'உனக்கு யாது வரம் வேண்டும்?' என்று கேட்க, 'எழுபிறப்பிலும் இல்லையென் றிரப்பார்க் கில்லையென்னாத விதயநீ யருளுதி,' என்று வரம்பெற் றுயிர் நீங்கி நற்பத மடைந்தனன். இக் கதை பாரதத்தில் விரிவாகக் காணப்படும்.

---

"திருமாலுக் கடிமைசெய்."

என்பதற் கேற்ப, திருமாலுக்குத் தொண்டு செய்யவேண்டியதற்குக் காரணங் கூறல்.

56. அண்டர்முனி வர்க்கா வவதாரம் பத்தெடுத்து
மிண்டரைவெட் டித்தரும மேபுரக்க—கண்டதனால்

*மந்தரனே! புன்னைவன வள்ளலே யெந்நாளுஞ்*
*செந்திருமா லுக்கடிமை செய்.*

(ப-ரை) மந்தரனே - மாலையை யணிந்தவனே!, புன்னைவன வள்ளலே - புன்னைவனத்திலுள்ள கொடையாளனே!, அண்டர் முனிவர்க்கா-தேவர் முனிவர் ஆகியவர்களுக்காக, (திருமாலான வர்) பத்து அவதாரம் எடுத்து - தசாவதார மெடுத்து, மிண்டரை - திண்ணியராகிய இராக்ஷதர் முதலிய பல கொடியோரை, வெட்டி - உடலைக் கூறுக்கிச் சங்கரித்து, தருமமே - அறத்தையே, புரக்க - உலகத்திற் காக்க, கண்டதனால்-எல்லோரும் பார்த்தபடியினாலே, (அவரே உலகத்தைக் காக்கக்கூடியவ ரென்றும், எல்லோரும் தொண்டு செய்யத்தக்கவரென்றும் கருதி ஔவையும், 'திருமாலுக் கடிமைசெய்,' என்று கூறினள். ஆகையினாலே, நீ திருமாலுக் கடிமை செய்தல் சிறந்ததாமென் றெண்ணி) எந்நாளும்-எத்தினங் களினும், செந்திருமாலுக்கு-செந்திருவை மார்பிற் றரித்த விஷ்ணு வுக்கு, அடிமை செய் - தொண்டு செய்யக்கடவாய்; (அங்ஙனம் செய்யின் அவர் காத்தற்கடவுளா யிருப்பதனாலே எப்பொழுதும் தீங்கு வாராமல் நின்னைக் காப்பாற்றுவார்.)

(வி - ரை) 'அவதாரம் பத்து' என்பதை, 'பத்தவதாரம்' என மாற்றுக. இதற்கேற்ப, 'திருமாலானவர்' என்பது இசையெச்ச மாக வருவித் துரைக்கப்பட்டது. மந்தாரம் - மாலை. திருமால் உல கத்துக்கு வருந் துன்பங்களை நீக்கிக் காக்கக்கூடியவராதலின், அவர்க்குத் தொண்டு செய்யவேண்டு மென்பது இங்கு உயர்வாகக் கூறப்பட்டது.

திருமால் அவதாரம் பத்தாவன:—மச்சம், கூர்மம், வரா கம், நாரசிங்கம், வாமனம், பரசுராமன், இராமன், பலபத்திரன், கண்ணன், கற்கி என்பனவாம்; இவற்றுள்,

(1) மச்சாவதாரம்: வேதத்தைத் திருடிக் கடலி லொளித்த சோமுகாசுரனைக் கொல்லும்பொருட்டு எடுக்கப்பட்டது.

(2) கூர்மாவதாரம்: கடலைக் கடையும்போது மந்தரமலையைத் தாங்கும்பொருட்டு எடுக்கப்பட்டது.

(3) வராகவதாரம்: இரணியாக்கன் பூமியைப் பாயாகச் சுருட்டினதை விரிக்கவும், அவனைக் கொல்லவும் எடுக்கப்பட்டது.

(4) நரசிங்காவதாரம்: இரணியகசிபைக் கொல்லும்பொருட்டெடுக்கப்பட்டது. (இந் நான்காவதாரத்திற்கும் தாய் தந்தையரில்லை.)

(5) வாமனவதாரம்: மாவலியை யடக்கும்பொருட்டுக் காசிபனுந் திதியுந் தந்தை தாயாக எடுக்கப்பட்டது.

(6) பரசுராமாவதாரம்: அரசராற் சூழ்த்தப்பட்ட பார்ப்பார் நிமித்தம் அவ் வரசர் குலத்தைக் கருவறுக்க, சமதக்கினியும் இரேணுகையும் தந்தை தாயாக எடுக்கப்பட்டது.

(7) இராமாவதாரம்: இராவணன் முதலிய இராக்ஷதர்களைக் கொல்லும்பொருட்டுத் தசரதனும் கௌசலையும் தந்தை தாயாக எடுக்கப்பட்டது.

(8) பலபத்திராவதாரம்: பிரலம்பன் முதலிய இராக்ஷதரைக் கொல்லும்பொருட்டு வசுதேவனும் தேவகியும் உரோகணியும் தந்தை தாயாக எடுக்கப்பட்டது.

(9) கண்ணவதாரம்: பாரதம் நடத்தும்பொருட்டு வசுதேவனும் தேவகியும் தந்தை தாயாக எடுக்கப்பட்டது.

(10) கற்கியவதாரம்: அறத்தை நிலைபெறுவிக்கும் பொருட்டு எடுக்கப்படுவது.

"தீவினை யகற்று."

என்பதற்கேற்ப, கெட்ட செயல்களை நீக்கவேண்டுமென்பதையும், அதனை நீக்காதார் கேடுறுவரென்பதையும் விளக்கும்

தானவ ரியல்பு.

57. ஈசன்வரமுஞ்சிதைந்தே யெய்தியபே ராக்கமும்போய்
தேசழிந்து தானவர்க டேய்ந்ததனாற்-காசினியில் [த்
வாழ்பாகை புன்னைவன மன்னவா! நன்மையன்றிச்
சூழ்தீ வினையகற் று.

(ப. ரை) காசினியில் - பூமியிலே, வாழ்-வாழ்கின்ற, பாகை-பாகையையுடைய, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, மன்னவா - இறைவனே!, ('தீவினை யகற்று,' என்று ஔவை கூறிய நீதியைக் கடைப்பிடித்து எவரும் கெட்ட செயல்களை நீக்கவேண்டும்; அங்ஙனம் நீக்காவிடின் எல்லா நலமும் போய்க் கேடுவந்துறும்; இதற்குதாரணமாகத் தானவர்கள் தீவினை செய்தமையினாலே கெட்டார்கள்; அங்ஙனம் தீவினை செய்ததை முன்னிட்டு) தானவர்கள் - அந்த அசுரர்கள், (ஈசனிடத்தே பெரிய வரங்களை யெல்லாம் பெற்று உயர்ந்த செல்வங்களை யெல்லா மடைந்திருந்தும் அவ்வாறு பெற்ற) ஈசன் வரமும் - சிவபெருமானுடைய வரமும், சிதைந்து - கெட்டு, எய்திய - தாங்கள் அடைந்திருந்த, பேராக்கமும் போய் - பெரிய செல்வமுங் கெட்டு, தேசு அழிந்து-அழகொழிந்து, தேய்ந்ததனால் - நாளடைவில் சுருங்கி மறைந்து போனபடியினாலே, (தீவினை செய்தல் கேட்டிற் கேதுவாமென்பதை யுணர்ந்து நீ) நன்மை அன்றி - நல மில்லாமல், சூழ் - வந்து வளைந்து கேடு செய்கின்ற, தீவினை அகற்று-கெட்ட செய்கையை நீக்குவாயாக.

(வி - ரை) ஈசன் வரம் - மூன்ரும்வேற்றுமைத் தொகை; இது வினைமுதற் பொருண்மையதாய் ஈசனாற் கொடுக்கப்பட்ட

வரம் என விரியும். போய், அழிந்து என்னும் வினையெச்சங்கள் தேய்ந்ததனல் என்னும் எச்சவினையோடு முடிய, அது, அகற்று என்னும் வினைமுற்ருேடு முடிந்தது. தானவர் - அசுரர்கள்; இவர்கள் தேவர்களுக்கு விரோதிகளாய்ச் சுரரல்லாதவர் ஆனபடியாலே அசுர ரெனப்பட்டார். இவர்கள் தைத்திய ரென்றும், தானவ ரென்றும் இருவகைப்படுவர். இவர்களுள் இரணியாக்ஷன், இரணிய கசிபன் முதலியோர் தைத்திய ரென்றும்; தாரகன், நமுசி, அந்தகன், சம்பரன் முதலியோர் தானவ ரென்றுஞ் சொல்லப்படுவர். இன்னும் இவ் வசுர வகுப்பில் தோன்றியவர் அறுபத்தாறுகோடி அவுணர்களாவர். இவர்களுக்குத் தலைவன் அசுரேசன் எனப்படுவன். இவன் சூரசையென்னும் மாயையின் பிதா; இவன் ஒரு காலத்தில் அந்த மாயையை யனுப்பிக் காசிபரைக் கூடச்செய்து சூரபன்மனுதியரை யுதிப்பித்து அவர்களுக்குப் பலவித போதனைகள் செய்து அவர்களால் தேவர்களை வருத்தும்படி செய்தனன். இந்தக் கொடுஞ் செய்கையினுலேயே சூரன் முதலியோர் சிவனிடம் பல வரங்கள் பெற்றிருந்தும் அவையெல்லாம் பயனற்றுப் போகப் பொன்றினர். மற்றையரும் இங்ஙனமே அழிந்தனர். தானவர் கதையின் விரிவை ஸ்காந்தம் முதலிய புராணங்களா லுணர்க.

---

## "துன்பத்திற் கிடங்கொடேல்."

என்பதற் கேற்ப, துன்பமான காரியத்திற் கிடங்கொடாதிருக்க வேண்டு மென்பதை விளக்கும்

## இந்திரன் கதை.

58. தூயரா மன்பகையர்ற் துன்பமுற்றுத் தஞ்சமென்ற
சேயினையுந் தேவேந் திரனிகழ்ந்த—ஞாயம்பார்

*மாதுங்கா! புன்னைவன மன்னவா! அஃதறிந்*
*தேதுன்பத் திற்கிடங்கொ டேல்.*

(ப - ரை) மா-சிறந்த, துங்கா - வெற்றியை யுடையவனே!, புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, மன்னவா - இறைவனே!, ('துன்பத்திற் கிடங்கொடேல்,' என்று ஒளவை கூறிய நீதிப்படி உலகத்தில் எவரும் துன்பமான காரியத்திற் கிடங்கொடுக்க லாகாது; அங்ஙனம் இடங் கொடுத்தால் பலவிதமான கேடுண்டா கும்; இந் நீதியை அனுசரித்தே) தூய-பரிசுத்தமாகிய, இராமன் பகையால் - இராமனுக்குத் தீங்கு செய்து அதனால் வந்த பகையி னலே, துன்பம் உற்று-துன்பத்தை யடைந்து, (அதனைச் சகிக்க முடியாமல்) தஞ்சம் என்ற - தன்பால் அடைக்கலமென்று வந் தடைந்த, சேயினையும் - புத்திரனையும், தேவேந்திரன் - தேவர் களுக் கதிபனுகிய இந்திரன், இகழ்ந்த-(அவனுக்கிதஞ் செய்தால் துன்ப முண்டாமெனக் கருதி) நிந்தித்து தள்ளிய, ஞாயம் பார் - ஒழுங்கை நீ ஆராய்ந்துபார்; (இதனுலேயே துன்பத்திற் கிடங் கொடுக்க லாகாதென்பது நன்கு விளங்கும்; ஆகையினுலே நீயும்) அஃது அறிந்து - அதனை யோர்ந்து, துன்பத்திற்கு இடம் கொ டேல் - துன்பமான காரியத்திற் கிடங் கொடாதே.

(வி - ரை) சேயினையும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப் புப் பொருளது. இந்திரன் மகன் இராமருக்குத் தீங்குசெய்து துன் பத்தை யடைந்து ஓடிவந்தபடியால் அவனுக் கிதஞ்செய்யின் தனக் குத் துன்ப முண்டாமெனக் கருதி இந்திரன் தன் புத்திரனுகிய அவனையு மிகழ்ந்தான்; ஆதலால், எதை முன்னிட்டும் துன்பத்திற் கிடங் கொடுக்கலாகா தென்பது இதனுல் விளங்கும்.

இந்திரன் மகன் துன்பழுற்ற கதையாவது:— இந்திர னுடைய மகன் சயந்தன் என்பவன் ஒருகாலத்தில் காக்கை யுருக்

கொண்டு இராமர் மனைவியாராகிய சீதாபிராட்டியாருக்குஅபசாரம் புரிந்தனன். அதனால் இராமமூர்த்தி கோபத்தையடைந்து இவனுடைய ஒரு கண்ணைப் போக்கினர். இவன், இராமர் பகைகொண்டகாலத்தில் அவரால் துன்பமுற்று இந்திரன்பால் தஞ்சமென்றடைந்தா னென்பதும், அவன் இவனை யிகழ்ந்தா னென்பதும் இச் செய்யுளால் விளங்குகின்றது. இக் கதை இராமாயணம் முதலிய நூல்களால் உணரப்படும்.

---

## "தூக்கி வினைசெய்."

என்பதற் கேற்ப, ஒரு காரியத்தைச் செய்யுங்காலத்தில் பின்வரும் நன்மை தீமைகளை ஆராய்ந்து செய்ய வேண்டு மென்பதை விளக்கும்

### வாலி கதை.

59. எதிரிபலம் பாதிகொள்வ னென்றறிந்து வாலி
வதைபுரிய ராமன் மறைந்து—துதிபெறல்பார்
பாரளந்த் புன்னைவன பார்த்திபா! அப்படிப்போல்
சீரறிந்து தூக்கிவினை செய்.

(ப - ரை) பார் அளந்த - உலகத்தின் நிலைமையை அளந்தாராய்ந்தறிந்த(உலகிய லுணர்ந்த), புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, பார்த்திபா - இறைவனே!, ('தூக்கி வினைசெய்,' என்று ஔவை கூறிய நீதிப்படி மனிதராயினர், ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கும் காலத்தில் பின்வரும் நன்மை தீமைகளை யாராய்ந்து அக் காரியத்தை நல முண்டாகும்படி செய்யவேண்டும்; அங்ஙனஞ் செய்தால் பலவிதமான நன்மைகளு முண்டாம்; அவ்வாறின்றி ஆராயாது கருமம் புரியின் பல கேடுகள் வந்தெய்தும்; இந் நீதியைக் கடைப்பிடித்தபடியால்) இராமன் - இராமபிரானும்

வாலி-வாலியானவன், எதிரி பலம்-தன்னோ டெதிர்த்து யுத்தஞ் செய்பவனுடைய பலத்தில், பாதி கொள்வன் என்று-தான் பெற்ற வரத்தால் பாதி பாகத்தை அடைவானென்று, அறிந்து - உணர்ந்து, வாலி - அவ் வாலியை, வதை புரிய - கொல்ல, மறைந்து - ஒளிந்து, (பாணப் பிரயோகஞ் செய்து அவனைக் கொன்று) துதி பெறல் - இன்னும் பலராலும் மகா புத்திமானென்று செய்யப் படும் ஸ்தோத்திரத்தை யடைதலை, பார்-நீ ஆராய்ந்துபார்; (இதனாலேயே தூக்கி வினைசெய்தலின் உயர்வு உனக்கு நன்கு விளங்கும்; ஆதலின்) அப்படிப்போல் - இராமர் செய்த அந்த விதத்தைப் போல, சீர் அறிந்து - சிறப்பைத் தெரிந்து, (நீ காரியஞ் செய்யத் தொடங்குங் காலத்தில்) தூக்கி-பின் வரும் பலாபலனை ஆராய்ந்து, வினை செய் - காரியத்தைச் செய்வாயாக.

(வி - ரை) 'மறைந்து' என்பதற்குப் பின், 'பாணப்பிரயோகஞ் செய்துஅவனைக் கொன்று' என்னும் வாக்கியங்கள் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டன. 'வாலி' என்பது இரண்டிடத்துங் கூட்டப்பட்டது. 'பாரளந்த பார்த்திபா!' என்பதற்கு, 'உலகளந்த இறையாகிய விஷ்ணுபோன்றவனே!' எனப் பொருள்கோடலுமொன்று. இராமர் மறைந்துநின்று அம்பேவி வாலியைக் கொன்றதையும், எதிரிபலம் பாதியை வாலியடைவ னென்பதையும் இராமாயணத்தா லுணர்க.

---

## "தெய்வ மிகழேல்."

என்பதற் கேற்ப, தெய்வ மிகழலாகா தென்பதை விளக்கும் திரிபுரவாசிகள் கதை.

60. தாரகத்தார் மூவரையுந் தாழ்வுசெய்து தங்கடங்கள்
காரியத்தால் வேறு கதியளித்தார்—தாரணிக்குள்

மாதவனே! புன்னை வனநாதா! மீதிடுக்கண்
எதுறினுந் தெய்வமிக ழேல்.

(ப - ரை) தாரணிக்குள் - இப் பூமியில், மா - சிறந்த, தவனே - தவத்தை யுடையவனே!, புன்னைவனநாதா - புன்னை வனத்திற்குத் தலைவனே!, (உலகத்திலுள்ளோர் எதை முன்னிட்டும் தெய்வத்தை இகழலாகாது; அங்ஙன மிகழின் உயர்ந்த நிலைமை கெட்டுத் தாழ்வுண்டாகும்; இதுபற்றியே ஔவையாரும், 'தெய்வ மிகழேல்,' என்று கூறினர். இந் நீதியை அனுசரிக்காமல் திரிபுரவாசிகள் மூவரும் தெய்வத்தை யிகழ்ந்தபடியால்) தாரகத்தார் - பிரணவத்திற்குரிய சிவபெருமானனவர், மூவரையும் - அந்த மூன்று பேர்களையும், தாழ்வு செய்து - தாழ்மைப்படுத்தி, தங்கள் தங்கள் - தங்கள் தங்களுடைய, காரியத்தால் - தெய்வத்தை யிகழ்ந்த அந்தச் செய்கையால், (அவர்களுக்கு) வேறு கதி - தங்கள் நிலைமையினுந் தாழ்ந்த நிலைமையாகிய வேறு கதியை, அளித்தார் - கொடுத்தார்; (இதனாலேயே தெய்வத்தை இகழ்வதா லுண்டாகும் தீங்கு நன்கு விளங்கும்; ஆதலின், நீ) மீது - உன்மேல், இடுக்கண் - துன்பம், எது உறினும் - எதுவந்து பொருந்தினாலும், தெய்வம் இகழேல் - தெய்வத்தை இகழாதே.

(வி - ரை) தாரகம் - பிரணவம்; சிவபெருமான் அதற் குரியவராதலின் தாரகத்தார் எனப்பட்டார். 'மூவரையுந் தாழ்வு செய்து வேறு கதி யளித்தார்,' என்பதற் கிடையில் அவ்வாக்கியத் தொடருக் கேற்ப, 'அவர்களுக்கு' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. 'மாதவனே' என்பதற்கு 'இலக்குமி நாயகனே!' எனப் பொரு ளுரைத்தலு மொன்று.

தெய்வமிகழ்ந்து தங்கள் நிலைமைகெட்ட திரிபுரவாசிகள் கதையாவது:—திரிபுரவாசிகள்: தாரகாசுரன் குமாரராகிய வித்துன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் ஆகிய மூவருமாவர்; இவர்

கள் மூவரும் ஆதியில் சிவனைப் பூசித்து அவரானுக்கிரகத்தால், முறையே பொன், வெள்ளி, இரும்பு ஆகியவற்றுலாகிய பறக்கும் கோட்டைகளைப் பெற்று, அக் கோட்டைகளுடனே பறந்து சென்று தேவர்களை வருத்திவந்தனர். அதனுல், தேவர்கள் சிவ பெருமானிடம் முறையிட்டனர்; அதற்குச் சிவமூர்த்தி, "அம்மூவ ரும் சிவப்பற்று நீங்குவார்களேயானுல் அவர்களுடைய செல்வாக் குக் குறைந்துவிடும்; இதற்குத் தக்க வுபாயஞ் செய்வீராக," என்று கூறினர். அதைக் கேட்டுத் தேவர்கள் களிப்புற்று விஷ்ணுமூர்த்தி யிடம் சென்று அதனைத் தெரிவித்தனர். அதன்மேல் விஷ்ணு மூர்த்தி சிவபெருமான் கட்டளைப்படியே செய்யக் கருதி, தாம் புத்தரா யவதரித்து, நாரதரைத் தமக்குச் சிஷராக்கிக்கொண்டு, திரிபுரவாசிகளிடஞ் சென்று அவர்களுக்கு பௌத்தமதோப தேசஞ் செய்து அவர்களிடமிருந்த சிவப்பற்றை யொழித்தனர். அதனுல் அவர்கள் சிவவிரோதிக ளாயினர். அங்ஙனமாகவே சிவ பெருமான், அவருடைய அகங்காரத்தை யொழிக்கக் கருதி, தேவர்களை நோக்கித் தேர் கொண்டுவரும்படி கட்டளையிட்டனர். அதைக் கேட்டு விஷ்ணுமூர்த்தி, பூமியைத் தேராகவும், வேதங் களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மேருவை வில்லாகவும்,வாசுகியை நாணுகவும் சமைத்துச் சிவபெருமானிடம், 'தேர் சித்தமாய்விட்டது,' என்று கூறினர். உடனே சிவபெரு மான் அந்தத் தேர்மீதேறி, வில்லை வளைத்து நாணேறிட்டு, விஷ்ணுவையே பாணமாகக் கொண்டு திரிபுரவாசிகளிடம் சென்று அவர்களை நோக்கி எய்யத் தொடங்கினர். அப்போது விஷ்ணு மூர்த்தி, தாம் பாணமாய்ச் சமைந்த பெருமையை யெண்ணி இறு மாப்படைந்தனர். அதனுல், சிவபெருமான் அந்த விஷ்ணுமூர்த்தி யின் எண்ணத்தைக் கருதியும், திரிபுரங்களை நோக்கியும் சிரித்த னர். இச் சிரிப்பிலிருந்து நெருப்பு வெளிப்பட்டுத் திரிபுரங்களையு மெரித்தது. அங்ஙனம் முப்புரங்க ளொழிந்தும் அவற்றில் வாசஞ்

செய்த மூவரும் முன்னே சிவபூஜை செய்தவராதலின் அப் பூஜா பலத்தால் எரியாமல் நீங்கித் தங்கள் நிலைமையும் அகங்காரமுங் குன்றினர்.

---

## "தேசத்தோ டொத்துவாழ்."

என்பதற் கேற்ப, தேசத்தி லுள்ளவரோடு பொருந்தி நேயமாக வாழவேண்டுமெனல்.

61. எல்லா மதத்திற்கு மெவ்வுயிர்க்கு நீர்நிழல்போல்
நல்லா தரவே நயந்தருளி—வல்லாண்மை
சூழ்தேக புன்னைவனத் தோன்றலே! நீயுமென்றும்
வாழ்தேசத் தோடொத்து வாழ்.

(ப - ரை) வல் - வல்லமையுள்ள, ஆண்மை - ஆண்தன்மை யானது, சூழ் - நிறைந்த, தேகம் - உடம்பையுடைய, புன்னை வனத் தோன்றலே-புன்னைவனத்திலுள்ள பெருமையிற் சிறந்தவனே!, ('தேசத்தோ டொத்துவாழ்,' என்று ஔவை கூறிய நீதிப்படி மனிதராயினோர், தேசத்திலுள்ள எல்லார்மீதும் சமத்துவமான அன்பைச் செலுத்தி, அவர்களுடைய நேயத்தைப் பெற்று, அத் தேசத்தாருடனே பொருந்தி வாழவேண்டும்; அங்ஙனம் வாழின் உலகத்திற் கேடென்பது வருவதின்றிப் பலவிதத்திலும் பலராலும் நன்மையே உண்டாகும்; இதுபற்றியே நீரும் நிழலும் தம்மிடம் சாரும் எல்லோருக்கும் வித்தியாசம் பாராட்டாமல் குளிர்ச்சியை உதவிப் பயன்படுகின்றன; அதனாலேயே எல்லோரும் அவ் விரண்டையும் புகழ்கின்றனர்; ஆதலின்,) நீயும்—, நீர் நிழல் போல் - அந்த நீரையும் நிழலையும் போல, எல்லா மதத்திற்கும் - எல்லாமதத்தி லுள்ளவர்களுக்கும், எவ்வுயிர்க்கும்-எவ்வகைப்பட்ட பிராணிகளுக்கும், நயந்து - விரும்பி, நல் ஆதரவே - நல்ல உதவியையே, அருளி - செய்தருளி, என்றும் - எப்பொழுதும், வாழ்-

வாழ்கின்ற, தேசத்தோடு-தேசத்தி லுள்ளவர்களுடனே, ஒத்து - பொருந்தி, வாழ் - வாழக்கடவாய்.

(வி - ரை) மதம் என்பது ஆகுபெயராய்ச் சமயங்களிலுள்ள மனிதரின் பேதத்தை யுணர்த்திற்று. உயிர் என்பதும் ஆகுபெய ராய் அதனையுடைய பிராணிகளின் வகுப்பை யுணர்த்திற்று. வல்- இது வன்மையென்னும் பண்புச்சொற்றிரிபு; மையீறு கெட்டது. தேசமென்பதும் ஆகுபெயராய் அதனிடத்துள்ள மனிதரின் வகுப்பை யுணர்த்திற்று. நீரும், நிழலும் தம்மிடத்து வருவோ ரெல்லோருக்குமே வித்தியாச மின்றிப் பயன்படுவ தியற்கை; நீர், தன்னிடத்தே எவர் வரினும் அவருடைய தாகத்தைத் தீர்க்கக் கூடியதா யிருக்கின்றது. நிழல், தன்பா லெவர் சாரினும் அவ ருடைய இளைப்பை மாற்றி அவர்களுக்குக் குளிர்ச்சியைத் தரக் கூடியதா யிருக்கின்றது. அதனுல் இவ் விரண்டிடத்தும் எல்லோ ரும் விருப்பத்தைச் செலுத்துகின்றுர்கள். இவைபோல், மனித ரும் எல்லோருக்கும் பயன்படக்கூடியவர்களா யிருப்பின் அங்ஙன மிருப்போரிடத்தில் எல்லோரும் நேயமுடையவரா யிருப்பார்; அதனுல் அவர்க்குப் பல நன்மைகளு முண்டாம்; அவர்களுடனே ஒத்து வாழும் நிலைமையு மேற்படும்; இதுபற்றியே, 'நீர் நிழல் போல் எல்லா மதத்திற்கு மெவ்வுயிர்க்கும் நல்லாதரவே நயந் தருளி, 'தேசத்தோ டொத்துவாழ்,' என்றுர் ஆசிரியர்.

---

## "தையல்சொற் கேளேல்."

என்பதற் கேற்ப, பெண்களின் வார்த்தையைக் கேட்க லாகா தென்பதை விளக்கும்

### சித்திராங்கி கதை.

62. மாதுசித்தி ராங்கிசொல்லால் மைந்தனைக்கை கால்களைந்து
ஏதுபெற்று ஞேர்மன்ன னிப்புவியில்—நீதிநெறி

மாதவனே! புன்னை வனநாதா! பாகைமன்ன!
எதெனினுந் தையல்சொற்கே ளேல்.

(ப - ரை) நீதி நெறி - நீதிமார்க்கத்தையுடைய, மாதவனே - இலக்குமி நாயகனான மகாவிஷ்ணு போன்றவனே!, புன்னைவன நாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, பாகை மன்ன - பாகை பொருந்திய அரசனே!, (உலகத்தில் பெண்கள் மிகவும் வஞ்சக சித்த முடையவர்க ளாதலால், அவர்களின் கபடமான வார்த்தைகளை எப்பொழுதும் எவரும் நம்பலாகாது; அங்ஙனம் நம்பினால் உலக நிந்தனையும் பலவிதமான கேடுகளும் சம்பவிக்கும்; இது பற்றியே ஔவையாரும், 'தையல்சொற் கேளேல்,' என்று கூறினர். இந் நீதியை அனுசரியாமல்) ஓர் மன்னன் - சாரங்கதரன் தந்தையாகிய ஓரரசன், மாது - கெட்ட பெண்ணாகிய, சித்திராங்கி சொல்லால் - சித்திராங்கியின் மித்திரபேத வார்த்தையைக் கேட்டபடியால், மைந்தனை - தன்னுடைய குற்றமில்லாத புத்திரனை, கை கால் - ஒற்றைக் கையையுங் காலையும், களைந்து - அறுத்து நீக்கி, இப் புவியில் - இவ் வுலகத்தில், எது பெற்றான் - அச் செய்கையால் என்ன நன்மையை யடைந்தான்? (ஒரு பயனையு மடையவில்லை; உலக நிந்தையையும் கேட்டையுமே யடைந்தான். இதனால் தையல்சொற் கேட்பதா லுண்டாகும் தீங்கு நன்கு விளங்கும்; ஆதலால் நீ) எதெனினும் - எதுவாயிருந்தாலும், தையல் சொல் கேளேல் - பெண்களுடைய வார்த்தையைக் கேளாதே.

(வி - ரை) 'எது பெற்றான்' என்பது எதிர்மறை யெச்சம்; 'ஒரு பயனையும் பெற்றிலன்' எனத் தன் எச்சத்தைக் கொண்டது. 'மறப்பினும் ஓதிக்கொளலாகும்' என்பது, 'மறக்கலாகாது' என்றும், 'யானோ செய்தேன்' என்பது, 'யான் செய்திலன்' என்றும் தம் மெச்சங்களைக் கொள்வதுபோல இதுவுங் கொண்டது.

"பெயர்வினை யும்மைசொற் பிரிப்பென வொழியிசை
எதிர்மறை யிசையெனுஞ் சொல்லொழி பொன்பதுங்
குறிப்புந் தத்த மெச்சங் கொள்ளும்." என்பது சூத்திரம்.

பெண்கள் சோற் கேட்போர் கேடடைவ ரென்பதை விளக்கும் சித்திராங்கி கதையாவது:—சாரங்கதரன் என்னும் புத்திமானின் தந்தையாகிய மன்னன், சித்திராங்கியை இளையதாரமாகக் கலியாணஞ் செய்திருந்தனன். அவள் மிகவுங் காமியாதலின் சாரங்கதரன் புத்திரனென்பதையும் சிந்தியாமல் அவன்மீது மோகங் கொண்டிருந்தனள். இப்படி யிருக்கும்போது ஒருதினம் சாரங்கதரன், தன்னுடைய தந்தை வேட்டைக்குப் போயிருக்குங் காலத்தில், தன் நண்பனோடு புறுவிட்டு விளையாடிக்கொண்டிருந்தனன். அப்பொழுது அவனால் விடப்பட்ட புறுவொன்று தன் சிற்றன்னையின் மாளிகையி லிறங்கிற்று; சாரங்கதரன் உடனே அதைப் பிடித்துவரச் சென்றான். அவ்வாறு செல்லும்போது அவனுடைய நண்பன், சித்திராங்கியின் எண்ணத்தை யுணர்ந்திருந்தான் ஆதலின், அங்குச் சென்றால் தீங்குவருமென்று கருதி, 'அங்கே போகலாகாது' என்று அவனைத் தடுத்தான். சாரங்கதரன், அவ்வாறு தன் நண்பன் தடுத்துங் கேளாமல் அவள் மாளிகைக்குச் சென்றான். அங்ஙனம் அவன்போய்ச் சேரவே, சித்திராங்கி அவன் எப்பொழுது வருவானென்று எதிர்பார்த்திருந்தவள் ஆதலின், அவனைக் கண்டமாத்திரத்தில் ஆசை வெறிகொண்டு அருவருப்பான பல வார்த்தைகளைக் கூறி அவனைக் கெட்ட வழிக்குட்படுத்த பலாத்காரஞ் செய்தாள். அவன் உடன்படாது தப்பியோடிவிட்டான். அதன்மேல் சித்திராங்கி அவன்மீது கோபங்கொண்டு அவனுக்குத் தீங்குசெய்யவேண்டும் என்று முடிவுசெய்து தன் கணவன் வந்தவுடன் அவ்விடத்தில், சாரங்கதரன் வந்து தன்னைக் கெடுக்கப் பலவந்தப்படுத்தினதாகவும், தான் அதற்குடன்

படாமல் தப்பியதாகவும் பழியான வார்த்தை கூறினள். அதை அம் மன்னன் கேட்டவுடன் சிறிதேனும் விசாரணை செய்யாமலே சாரங்கதரனைக் காட்டிற் கொண்டுபோய் அவனுடைய ஒற்றைக் காலையும் ஒரு கையையும் வெட்டி மாறுகால் மாறுகை வாங்கும்படி கொலையாளிகளுக்குக் கட்டளையிட்டனன். அவர்கள் அவ்வாறே செய்தனர். பின்னர் சாரங்கதரன் சிவ கடாக்ஷத்தால் அறுபட்ட கையும் காலும் வளரப்பெற்று மச்சமுனிவரிடம் உபதேசம் பெற்றுத் தவஞ்செய்து முத்தி யடைந்தனன். அவன் தந்தை பெண் சொற் கேட்டு விசாரியாமல் இக் கொடுஞ்செய்கை செய்தபடியால் தீராப்பழிப்பையும் பாவத்தையு மடைந்தனன்.

---

## "தொன்மை மறவேல்."

என்பதற் கேற்ப, பழமையான சிநேகத்தை மறக்கலாகா தென்பதை விளக்கும்

### பாஞ்சாலன் கதை.

63. பண்டு துரோணன் பழமையெண்ணாப் பாஞ்சாலன்
மிண்டமரி லர்ச்சுனனால் வீறழிந்தான்-கண்டதன்றோ
பொன்னாளும் புன்னைவன பூபாலா! தன்னையறிந்
தெந்நாளுந் தொன்மைமற வேல்.

(ப-ரை) பொன் ஆளும்-பொன்னை ஆளுகின்ற, புன்னைவன பூபாலா - புன்னைவனத் திலுள்ள அரசனே!, (உலகத்தில் எவரும் எச்சமயத்தும் பழமையான சிநேகிதரை மறந்து, செல்வச் செருக்கால் அவரை அவமதிக்கலர்காது; அங்ஙனம் மறந்தால் உலக நிந்தையும் அவமானமும் அவர்க்கு உண்டாகும்; அன்றியுந் தெய்வமுந் துணை செய்யாது; அபஜெயமும் எற்படும்; இதை யுத்தேசித்தே ஔவையும், 'தொன்மை மறவேல்,' என்று கூறினள்; இந் நீதியை

யுணராமையினாலே) பண்டு - பண்டைக்காலத்தில், துரோணன் - துரோணாசாரியினுடைய, பழமை - பழமையான சிநேகத்தை, எண்ணு - நினையாத, பாஞ்சாலன் - பாஞ்சாலதேசத்தரசனாகிய யாகசேனன், (பின்னர் அத் துரோணாசாரியின் பொருட்டு) மிண்டு - நெருங்கிய, அமரில்-போரில், அர்ச்சுனனால் - காண்டிபனாலே, (கட்டுப்பட்டு) வீறு அழிந்தான் - பெருமை கெட்டு அபஜெய முற்றான்; கண்டது அன்றோ - இஃதெல்லோருமறிந்த செய்கையல்லவா?, (ஆதலால், இதனாலேயே நீ பழைய சிநேகரை மறத்தலினா லுண்டாகுந் தீங்கை ஆராய்ந்துணர்ந்து தன்னை அறிந்து - உலகத்தில் நிலையற்றதாகிய தன்னுடைய நிலைமையையுமறிந்து, (செல்வச்செருக்கா லுண்டாகும் வீண்கர்வத்தை யொழித்து) எந்நாளும்-எத்தினத்திலும், தொன்மை-பழமையான சிநேகத்தை, மறவேல் - மறவாதிருப்பாயாக.

(வி - ரை) 'பழமை' என்பது ஆகுபெயராய்ப் பண்டைய சிநேகத்தை விளக்கிற்று. மிண்டுதல்-நெருங்குதல் எனப் பொருள்படுந் தொழிற்பெயர்; இது தல்லீறு கெட்டு, 'மிண்டு' என நின்றது. மிகுந்த பொன்னைவைத் தாளுவோ னென்பது தோன்ற, 'பொன்னாளும் புன்னைவன பூபாலா' என்றார் ஆசிரியர். 'தொன்மை' என்பதும் ஆகுபெயர்; இது பழைய சிநேகத்தை யுணர்த்தும்.

பழைய சிநேகத்தை மறந்து அவமானமடைந்த பாஞ்சாலதேசத் தரசனாகிய யாகசேனன் கதை:—இந்த யாகசேனனென்பவன், பாஞ்சால தேசத்துப் பிரஷதன் குமரன்; இவனுக்குத் துருபதன் என்றும் பெயர். இவன் இளமையில் துரோணாசாரியருடன் ஒரு சாலை மாணாக்கனாய்ச் சிநேகங்கொண்டு அங்கிவேச முனிவரிடம் வில்வித்தை கற்றுவந்தனன். அக்காலத்தில் இவன், தனக்கு இராஜ்ஜியம் வந்தால் துரோணருக்குப் பாதிநாடு கொடுப்பதாக ஒரு சமயம் சொன்னான். அதன்மேல் இவன் வில்

வித்தை கற்று முடிந்தபின், தன் தேசத்திற்குப் போனன். இவனுக்கு அரசை யேற்றற்குரிய பருவம் வந்தவுடன் இவனுடைய தந்தை, இராஜ்ஜிய பட்டாபிஷேகம் செய்துவிட்டு வான் புகுந்தனன். துருபதன் அரசாண்டு வந்தனன். துருபதன் இவ்வாறிருக்க, துரோணர், தனத்திலாசையின்றித் தவத்தையே தனமாகக் கருதி வனத்தில் ஒரு பக்கத்திலிருந்து தவஞ்செய்து, இல்லறந் தவறாது நடத்தும்பொருட்டுக் கிருபாசாரிக் கிளையவளும் சதாநந்தர் புத்திரியுமாகிய கிருபியென்பவளை மணந்து, இல்லறம் நடத்திவந்தனர். அப்போது இவருக்கு அசுவத்தாமா பிறந்தனர். இந்த அசுவத்தாமா குழந்தையா யிருக்கும்போது துரோணருக்கு வறுமை யதிகரித்தபடியால், குழந்தைக்குப் பாலின்றிக் கிருபி மிக வருத்தமுற்றுத் தளர்ந்தனள். அதனல், துரோணர், 'துருபதன் நமக்கு முன்னே பாதி நாடு கொடுப்பதாக வாக்களித்திருக்கின்ருன்; அவன் இப்போது அரசாட்சிசெய்து வருகின்ருன்; அவனிடம் சென்ருல் நம்முடைய வறுமை நீங்கும்,' என்றெண்ணி ஒருசமயம் அவன்பாலேகினர். அப்போது துருபதன், 'பாதி ராஜ்ஜியம் கொடுப்பதாக முன் கூறியதை முன்னிட்டுத் துரோணர் அவ்வாறே பெற்றுக் கொள்ளக் கருதி வந்திருக்கின்ருர்; மனமிசைந்து பாதி நாடு எவ்வாறு கொடுப்பது? இவரை நாம் அறியாதவன்போலப் பேசித் துரத்திவிடவேண்டும்,' என்று தீர்மானித்து, துரோணரை நோக்கி, 'நீர் யார்?' என்ன, அவர், 'நான் உன்னுடைய நண்பன்' என்று முன் நடந்த விஷயங்களைக் கூற, அவன் 'நானே அரசன்; நீயோ முனிவன்; அப்படியிருக்க உனக்கு மெனக்கும் என்ன நண்புண்டு?' என்று வைது நகை செய்து அவரை அவமானப்படுத்தினன். அப்போது துரோணர், குழந்தைக்குப் பாலூட்டுவதற்கு மாத்திரம் ஏதாவது கிடைத்தாற் போதுமென்று சென்றவராதலின், அதற்கும் இடங்கொடாமல் துருபதன் பேசினதைப்பற்றி மனங்கொதித்து, அவனை நோக்கி, "துருபதனே! நீ சொன்ன வாக்குத் தவறி

என்னை அறியாதவனைப் போன்று பேசி அவமானப்படுத்தினாய்; நானோ அங்ஙனம் சொன்ன வாக்குத் தவறேன்; என் மாணாக்கனால் இரதத்துடன் சேர்த்து உன்னைக் கட்டிக்கொண்டு வரும்படி செய்து முன்னே நீ சொன்னபடி உன் நாட்டிற் பாதியும் நான் கொள்வேன்," என்று சபதங் கூறிப்போய் அத்தினபுரத்தை யடைந்து வீஷ்டுமரைக் கண்டு அவ்விடம் தம் மெண்ணத்தைத் தெரிவித்துத் துரியோதனாதியர்க்கும் பாண்டவர்க்கும் வில் வித்தை கற்றுக்கொடுத்து அர்ச்சுனனால் துருபதனைக் கட்டிக் கொண்டு வரும்படி செய்து அவமானப்படுத்தினர்.

---

## "தோற்பன தொடங்கேல்."

என்பதற் கேற்ப, தோற்றுப்போகத்தக்க காரியங்களைச் செய்யத் தொடங்கலாகா தென்பதை விளக்கும்

### மகிடாசூரன் கதை.

64. சண்டனொடு மிண்டன் றனைவென்ற சங்கரிபால்
மிண்டுமகி டன்பொருது வெட்டுண்டான்—புண்டரிக
மாதாரும் புன்னை வனநாதா! நீணிலத்தி
லேதோற் பனதொடங் கேல்.

(ப - ரை) புண்டரிகம்-தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற, மாது-மகாலட்சுமி, ஆரும் - தன்னிடத்தே எப்பொழுதும் பொருந்தியிருக்கின்ற, புன்னைவன நாதா - புன்னை வனத்திற்குத் தலைவனே!, (உலகத்தில் ஜெயம் பெற விரும்புவோர் தன் பலம் எதிரி பலம் முதலியவற்றை ஆராய்ந்து வெற்றி யடையத்தக்கதையே செய்யத் தொடங்கவேண்டும்; தோல்வி யடையத்தக்க காரியத்தைச் செய்யலாகாது; அங்ஙனம் புரியின் தம்முயிர்க்கே நாசம் வரும்; இதுபற்றியே ஔவையும், 'தோற்பன தொடங்

கேல்,' என்று கூறினள். இந் நீதியை யுணராமையால்,) மிண்டு - மதத்தாற் பொருதுகின்ற, மகிடன் - மகிடாசுரன், (தோற்பன தொடங்கி) சண்டனொடு - சண்டாசுரனுடனே, மின்டன்தனை - மிண்டாசுரனையும், வென்ற - கொன்று ஜெயித்த, சங்கரிபால் - சங்கரியினிடத்தே, பொருது - எதிர்த்துப் போர்ச்செய்து, வெட்டுண்டான் - வெட்டுப்பட்டிறந்தான்; (ஆதலால், இதனை யுணர்ந்து நீ) நீள் - நீண்ட, நிலத்தில் - பூமியில், தோற்பன - தோற்றுப் போகத்தக்க காரியங்களை, தொடங்கேல் - செய்யத் தொடங்காதே.

(வி - ரை) சண்டனொடு - இதில் 'ஒடு' எண்ணொடு. சங்கரிபால்-இதில் 'பால்' ஏழனுருபு. புண்டரிகமாது - இலக்குமி. இலக்குமி ஆரும் என்றதனாலே மிக்க செல்வமுடையவனென்பது பெறப்படும். சண்டன் - சண்டாசுரன்; இவன், மிண்டாசுரனுடைய சகோதரன். இவன், ஒரு காலத்தில் உமாதேவியைக் கண்டு மோகங்கொண்டு அவளால் ஏவப்பெற்ற சண்டிகையாற் கொல்லப்பட்டான். மிண்டன் - மிண்டாசுரன்; இவன் மேற்கூறிய சண்டாசுரனுடைய சகோதரன்; இவனும் உமாதேவி தவத்திலிருக்குங் காலத்தில் அவளைக் கண்டு மோகமுற்று, அவளிடம் பணிவிடை செய்துகொண்டிருந்த மேற்கூறிய சண்டிகையினாலேயே கொல்லப்பட்டான்.

**சங்கரியோ டெதிர்த்து மாண்ட மகிடாசுரன் கதையா**வது:— தேவருடனே யுத்தஞ் செய்து, தைத்தியர் தோல்வியடைந்த காலத்தில், அதனைப் பொறுத திதி, தேவர்களை வெல்லத்தக்க ஒரு புத்திரனைப் பெறவேண்டுமென்று கருதித் தவஞ் செய்து, சுபார்சுவ முனிவரால் மகிடரூபமாகிய ஒரு புத்திரனைப் பெற்றுத் தவத்திற்கனுப்பி வரங்களைப் பெற்றுக்கொள்ளச் செய்து தேவர்களோடு யுத்தஞ் செய்யும்படி ஏவினள் இவனே

மகிடாசுரனென்பவன்; இவன் மகா வல்லமை பொருந்தியவன். இவன் தேவர்களை வருத்திய காலத்தில் தேவர்கள் சத்தியால் முறையிட அவள் இவனை வெல்லும்படி காளியை ஏவினள். காளி அவ்வாறே சென்று யுத்தஞ் செய்த காலத்தில், இவன் காளிக்குப் பயந்து தடாகத்தில் ஒளித்தான். அப்போது காளி, தான் ஏறியிருந்த சிங்கத்தைத் தடாகத்தில் ஏவச் சிங்கம் நீரைப்பருகி இவனை வெளிப்படுத்திற்று. அதன்மேல் காளி இவனைக் கொன்றனள். இவனை 'எருமை வயிற்றிற் பிறந்தவன்' என்றும் சிலபுராணங்கள் கூறும். இவன் சரிதை, ஒவ்வொரு புராணத்திலும் ஒவ்வொரு விதமாக வரும்.

---

## "நன்மை கடைப்பிடி."

என்பதற் கேற்ப, நன்மையான காரியத்தையே செய்யத் தொடங்கவேண்டு மென்பதை விளக்கும்

### அரசின் கதை.

65. அரசமரந் தொல்கடனீந் தந்தணனைக் கால
புரவழியிற் காத்த புகழின்—பெருமையைப்பார்
மன்றலந்தார் புன்னைவன வள்ளலே! யாவர்க்கும்
என்றும்நன் மைகடைப் பிடி.

(ப - ரை) மன்றல் - வாசனை பொருந்திய, அம் - அழகிய, தார் - மாலையை அணிந்த, புன்னைவனம் - புன்னைவனத்தி லிருக்கின்ற, வள்ளலே - ஈகைத்தன்மை யுடையவனே!, ('நன்மை கடைப்பிடி,' என்று ஔவையார் கூறிய நீதிப்படி எவரும் நன்மையான காரியத்தையே செய்யத் துணிவு கொள்ளவேண்டும்; அங்ஙனஞ் செய்தால் உலகத்தில் என்றும் அழியாப் புகழுண்டாம்;

இந் நீதிப்படி ஓர் அரச மரமும் நன்மையான காரியத்தைச் செய்து கீர்த்தியை யடைந்தது; அங்ஙனம்) அரசமரம் - அரசமரமும், தொல் கடல் - பழமையான கடலில், நீந்து - வீழ்ந்து நீந்திய, அந்தணனை - வேதியனை, காலபுர வழியில் - எமபுர வழியிற் செல்வதினின்றும் நீக்கி, காத்த - காப்பாற்றிய, புகழின் பெருமையை - கீர்த்தியின் பெருமையை, பார் - ஆராய்ந்துபார்; (இதனாலேயே நன்மை செய்தலின் உயர்வு நன்கு விளங்கும்; ஆதலின்,) என்றும் - எப்பொழுதும், யாவர்க்கும் - எவர்களுக்கும், நன்மை கடைப்பிடி - நன்மை செய்யத் துணிவு கொள்வாயாக.

(வி - ரை) தொல் - தொன்மை யென்னும் பண்புச்சொற் றிரிபு; மையீறு கெட்டு நின்றது. காலபுரவழியிற் காத்தலாவது, சாவுக்குத் தப்புவித்தல். இச் செய்யுளால், ஓர் அரசமரம் கடலில் வீழ்ந்து நீந்திய அந்தணனைக் காப்பாற்றியது புலப்படுகின்றது; எனினும், இக் கதை இன்ன நூலில் வருகிறதென்பது விளங்கவில்லை; ஆதலின், இக் கதை வருமிடத்துக் கண்டுகொள்க.

---

## "நாடொப் பனசெய்."

என்பதற் கேற்ப, நாட்டி லுள்ளார்க்குப் பொருந்துவனவாகிய காரியங்களையே செய்யவேண்டு மென்பதை விளக்கும்

### தருமர் கதை.

66. நாடோர்டும் போது நடுவோட வேண்டுமென்று
தேடுந் தருமர்சொன்ன சீரதனால்—நீடு
பொருந்துபுகழ் புன்னைவன பூபாலா! நன்றுத்
தெரிந்துநா டொப்பன செய்.

(ப - ரை) நீடு - நீடிய, பொருந்து - பொருந்துகின்ற, புகழ்-கீர்த்தியையுடைய, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, பூபா

லா - பூமியைப் பாலிக்கத்தக்கவனே!, (உலகத்தில் எவரும் கல்வியறி வொழுக்கங்களிற் சிறந்தவராயினும், உலகவியல்பு தெரிந்தவரா யிருப்பினும், ஊரார் செய்யுங் காரியங்களையே பொருந்திச் செய்துகொண்டு அவருடன் ஒத்து நடக்கவேண்டும்; அங்ஙனம் செய்யின் ஊரார் நட்பு அதிகமா யேற்பட்டுப் பலவித நன்மைகளுண்டாகும்; இதுபற்றியே ஔவையும், 'நாடொப்பனசெய்,' என்று கூறினள். இந் நீதியை அனுசரித்துத் தருமரும் ஒரு காலத்தில் தமக்கு எல்லாம் தெரிந்திருந்தும் தாமும், ஊரார் பேதைமையால் நடந்த நடக்கைக்குப் பொருந்தி நடக்க விசைந்து 'நாடோடும் போது நடுவோட வேண்டும்' என்று கூறினர். அங்ஙனம்) தேடும் - அறத்தையே தேடுகின்ற, தருமர் - தருமபுத்திரர், (ஊராரோடு ஒத்து நடக்க விசைந்து) நாடு - நாட்டிலுள்ளவர்கள், ஓடும் போது - பேதைமையால் பயந்தோடுங் காலத்தில், நடு - அவர்களுக்கு நடுவே கூடி, ஓடவேண்டும் என்று - ஓடிப்போக வேண்டுமென்று, சொன்ன - கூறிய, சீரதனால் - சிறந்த குணத்தினாலே, (நீயும்) நன்று - நன்றாக, தெரிந்து - இந் நீதியை ஆராய்ந்துணர்ந்து, நாடு ஒப்பன செய் - நாட்டிலுள்ளவர்கள் ஒப்புக்கொள்ளும்படியான செய்கைகளையே செய்யக்கடவாய்.

(வி - ரை) நாடு - ஆகுபெயர்; இது நாட்டி லுள்ளவர்களையுணர்த்திற்று. 'தேடும்' என்பதற்கு முன், 'அறத்தையே' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவிக்கப்பட்டது. ஒருவர் மிக்க அறிவுடையரா யிருப்பினும் ஊரார் ஒரு சமயத்தில் எதைச் செய்கின்றார்களோ அதையே தாமும் பொருந்திச் செய்யவேண்டுமென்பதும், அவர்கள் பேதைமையான செயல்களைச் செய்யினும் தாமும் அவற்றிற் கிசைந்து பேதையைப்போல நடிக்கவேண்டுமென்பதும் இச் செய்யுட் கருத்து. ஊரா ரெல்லோரும் ஏகோபித்து ஒரு காரியத்தைச் செய்யும்போது ஒருவன் மாத்திரம்

அதற்கு மாறுபடின் அவன் அறிவுடையவனுயினும் அச் சமயத்தில் அவரால்தானே பேதையென் றிகழப்படுவான்.

தருமர், 'நாடோடும்போது நடுவோடவேண்டும்,' என்று சொன்ன கதையாவது:—பாண்டவர்கள் அரக்கு மாளிகையிலிருந்து வெளியேறி இடும்பனைக் கொன்று வேத்திரகீயத்தையடைந்திருக்கும்போது, வேதியர் பொருட்டுப் பகாசுரனிடம் சென்று அவனைக் கொன்று அவனுக்குக் கொண்டு சென்ற ஆகாரத்தை யெல்லா முண்டு பெருத்த தேகத்தோடு திரும்பி வந்த வீமனைக் கண்டு வேத்திரகீயத்திலுள்ள வேதியர்கள் "பகாசூரனே வருகிறான்' என்று பயந்தோட, அப்போது தருமரும் ஓடத் தலைப்பட்டனர்; அக்காலத்தில் அருச்சுனன் முதலிய தம்பியர், 'நாமும் எதற்காக ஓடவேண்டும்?' என்று வினவ, "நமக்கு வீமனே வருகிறானென்று தெரிந்திருப்பினும், 'நாடோடும்போது நடுவோடவேண்டும்,'' என்று கூறி எல்லோருடனும் ஓடினர். இக் கதை பாரதத்தில் விரிவாகக் காணப்படும்.

---

## "நிலையிற் பிரியேல்."

என்பதற் கேற்ப, மனிதராயினும் தம் நிலையினின்று பெயர்ந்தால் தீங்கு வருமென்பதை விளக்கும் மலைகளின் கதை.

67. சஞ்சரித்து நின்ற சயிலங் களெல்லாம் [சாணல்
வெஞ்சினத்தா விந்திரன்முன் வெட்டினதால்—செஞ்
மண்ணளந்த புன்னை வனநாதா! வென்றுநன்மை
யெண்ணிநிலை யிற்பிரி யேல்.

(ப - ரை) செம் சரணல் - சிவந்த பாதங்களாலே, மண் அளந்த- பூமியை அளந்த (வாமனரூபமான விஷ்ணுவே யென்னப்

படும்), புன்னைவனநாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, (உலகத்தில் எவரும் தம்முடைய நிலையை விட்டுப் பல வழிகளிற் பிரவேசித்த லாகாது; அங்ஙனம் நிலை பெயரின் தீங்குண்டாகும்; இந் நீதியை அனுசரிக்காமையினால், முற்காலத்தில் மலைகளெல்லாம் தம் நிலை விட்டுப் பெயர்ந்து பறந்து சஞ்சரித்து இந்திரனால் தீங்குற்றன; அங்ஙனம்) சஞ்சரித்து நின்ற - தம் நிலைவிட்டுப் பெயர்ந்து பல விடங்களிற் சஞ்சரித்து உலகிற் பல கேடுகளை விளைவித்துநின்ற, சயிலங்களை எல்லாம் - மலைகளை யெல்லாம், இந்திரன் - தேவர்க்கதிபன், வெஞ்சினத்தால் - வெவ்விய கோபத்தாலே, முன் - முற்காலத்தில், வெட்டினதால்-சிறகுகளை யறுத்தலாலே, (நிலைவிட்டுப் பெயர்தல் எப்பொழுதும் தீங்காமென்பதை யுணர்ந்து நீ) என்றும்-எந்நாளிலும், நன்மை எண்ணி - உனக்கு நலமுண்டாவதை நினைத்து, நிலையில் பிரியேல் - உன்னுடைய மேலான நிலையினின்றும் நீங்கி வேறு வழியிற் செல்லாதே.

(வி - ரை) 'மண்ணளந்த' என்பதற்கேற்ப, 'வாமனரூபமான விஷ்ணுவே யென்னப்படும்,' என்னுஞ் சொற்கள் இசையெச்சமாக வருவிக்கப்பட்டன. விஷ்ணுவைப்போன்ற சிறந்த செய்கையுடையவனா யிருத்தல்பற்றிப் புன்னைவனநாதனை, அந்த விஷ்ணுவேயெனக் கொண்டு, 'செஞ்சரணால் மண்ணளந்த புன்னைவனநாதா,' என்றார் ஆசிரியர்.

பர்வதங்கள் நிலைபெயர்ந்து சஞ்சரித்துத் தீங்குற்ற கதை யாவது:—மலைகள் முன்னே சிறகுகளை யுடையனவாய் ஓரிடத்திலிராமல் பறந்து சஞ்சரித்துப் பல விடங்களிற் சென்று தங்கி ஆங்காங்குள்ள பிராணிகள் முதலியவற்றை நசுக்கி யழித்துத் திரிந்தன. அப்போது இவற்றின் செய்கையை யுணர்ந்த இந்திரன் கடுஞ்சின மடைந்து இவைகளுக் குண்டாகியிருந்த சிறகுகளை யறுத்தனன். அதன்மேல் இம் மலைகள் தங்கள் வலி குன்றி ஒவ்வோரிடத்

தில் நிலையா யமர்ந்தன. இவைகள் அங்ஙனம் சிறகறுப்புண்ட காலத்தில் மைநாக பர்வதம் பயந்து இந்திரனுக் ககப்படாமல் கடலிற்போ யொளித்தது. இந்த மலைகளை இந்திரன் சிறகறுக் குங் காலத்தில் இவற்றின் உதிரம் சிந்திய விடங்களி லெல்லாம் பவளங்கள் உண்டாயின.

---

## "நீர்விளையாடேல்."

என்பதற் கேற்ப, நீரில் நீந்தி விளையாடுவதா லுண்டாம் தீங்கை விளக்கும்

### கண்ணன் மக்கள் கதை.

68. கண்ணனருண் மைந்தர் கருங்கடலி னீராடி [யத்தின்
எண்ணரும்வாட் கோரையினு லிற்றனரால்—புண்ணி
கண்ணுன புன்னைவனக் காராளா! மேல்வருங்கே
டெண்ணுநீ நீர்விளையா டேல்.

(ப - ரை) புண்ணியத்தின் - தருமத்தின், கண்ணுன - நேத்திரமான, புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, காராளா - மேகத்தைக் காத்த வேளாளர்குல திலகனே!, (உலகத்தில் எவரும் நீரில் நீந்தி விளையாடுவதால் தீங்கே யுண்டாகும்; இது குறித்தே ஔவையாரும், 'நீர்விளையாடேல்' என்று கூறினர். இந் நீதியைக் கடைப் பிடியாமையால்) கண்ணன் அருள் - கிருஷ்ணன் பெற்ற, மைந்தர் - புத்திரர், கருங்கடலில் - கரிய கடலிலே, நீராடி - குளித்து நீந்தி விளையாடி, எண்ணரும் - எண்ணுதற்கரிய தீங்கையுடைய, வாட் கோரையினுல் - வாட்கோரையினுலே, இற்றனர் - சேதமடைந்தனர்; (இதனுலும் நீர்விளையாடுவதா லுண்டாந் தீங்கு நன்கு விளங்கும்; ஆதலால்,) மேல் வரும்-பின்னு லுண்டாகும், கேடு-தீங்கை, எண்ணு - நினைத்து, நீ - நீயும், நீர் விளையாடேல் - நீரில் நீந்தி விளையாடாதே.

(வி - ரை) புன்னைவனம், புண்ணியமானது தன் கண்ணைப் போலத் தனக்குச் சிறந்ததாகக் கருதிச் சாரப்படும் இடமென்பது தோன்ற, 'புண்ணியத்தின் கண்ணான புன்னைவனம்' என்றார் ஆசிரியர்; இதனால் புண்ணிய மிக்க விடமென்பது பெறப்படும். 'புண்ணியத்தின் கண்ணான' என்பதைப் புன்னைவன நாதனுக் கேற்றினு மமையும். அங்ஙனங் கொள்ளின், இவனாலேயே புண்ணியம் கண் தெரிந்ததுபோல நடைபெற்று விளங்கு மென்பதும், இவனில்லாவிடின், அது, கண்ணில்லாக் குருடனைப் போன்று மழுங்கி விளக்கமின்றி யொடுங்கு மென்பதும் பெறப்படும். 'காரா ளர்' என்பதற்கு 'மேகத்தைக் காத்தவர்' என்பது பொருள். இவர் கார்காத்த கதை திருவிளையாடற் புராணத்தா லுணரப்படும். கண்ணன் மைந்தர் கடலில் நீந்திக் கேடுற்ற கதையை வருமிடத்துக் கண்டுணர்க.

---

## "நுண்மை நுகரேல்."

என்பதற் கேற்ப, அற்பமான உணவை உட்கொள்ளலாகா தென்பதை விளக்கும்

### கௌசிகன் மாணாக்கர் கதை.

69. கோசிகன்மா ணாக்கர் கூறரிய நாய்நிணத்தைப் [ழ்த்
போசனஞ்செய் தேபுலையாய்ப் போயினரால்—வீசுபுக
தென்பாகை புன்னைவன தீரனே! எள்ளளவும்
இன்பாக நுண்மைநுக ரேல்.

(ப - ரை) வீசு-பரவிய, புகழ் - கீர்த்தியையுடைய, தென் - அழகிய, பாகை - பாகையையுடைய, புன்னைவன தீரனே - புன்னை வனத்திலுள்ள வீரனே!, (மனிதராயினோர், என்ன பஞ்சம் வரினும் உண்ணத்தகாத அற்பமான ஆகாரத்தை உண்ணலாகாது;

அங்ஙனமின்றி உண்ணின் தாழ்ந்த கதி கிடைக்கும்; இது குறித்தே ஔவையும், 'நுண்மை நுகரேல்,' என்று கூறினள்; இந் நீதியை யுணராமையால்,) கோசிகன் - கௌசிகனுடைய, மாணக்கர் - சிஷர்கள், கூறு அரிய - சொல்லுதற்கரிய, நாய் நிணத்தை - நாயின் கொழுப்பை, போசனஞ் செய்து-உணவாக வுண்டு, புலையாய் - புலைத்தன்மையாய், போயினர் - தாழ்ந்த கதியிற் சென்றனர். (இதனாலும் அற்பமான உணவை யுண்ணலா லுண்டாகுந் தாழ்வு நன்கு விளங்கும்; ஆதலின், நீ இதனை யுணர்ந்து) இன்பாக - இன்பமாக, எள்ளளவும் - எள்மாத்திரையும், நுண்மை - அற்பமான உணவை, நுகரேல் - உண்ணாதே.

(வி - ரை) என்ன பஞ்சம் வந்தபோதிலும் தாழ்ந்த வுணவைப் புசிக்கலாகா தென்பது இதன் கருத்து. வாயினாலும் சொல்லலாகாத இழிவையுடைய தென்பதை விளக்கற் பொருட்டுக், 'கூறரிய' என்றார் ஆசிரியர். புலை - ஈனம். 'நுண்மை' என்பது இங்கே அற்பத்தை விளக்கிற்று. கௌசிகன் மாணக்கர், நாய் நிணத்தை யுண்டு புலைத்தன்மை யடைந்த கதையை வந்துழிக் காண்க.

---

### "நூல் பலகல்."

என்பதற் கேற்ப, பல நூல்களைக் கற்பதனா லுண்டாம் உயர்வை விளக்கும்

### கவிவீரராகவ முதலியார் கதை.

70. கற்றதனா லுங்கள் கவிவீர ராகவமால்
வெற்றிபர ராசசிங்க மேன்மைசெயப்—பெற்றதனால்
ஞாலமதிற் புன்னைவன நாதனே! நற்பருவ
காலமதி னூல்பல கல்.

(ப-ரை) புன்னைவன நாதனே - புன்னைவனத்தி்ற் கிறைவனே!, (மனிதராயினோர், கல்வி கற்றற்குரிய பருவத்திலேயே பல நூல்களையுங் கற்றுத் தேறவேண்டும்; அங்ஙனங் கற்றுத் தேறி மிக்க கல்வியுடையவரா யிருப்பின் அரசர்கள், பிரபுக்கள் முதலிய எல்லோராலும் கொண்டாடப்பட்டு மிக்க மேன்மை யடைவர்; இதனாலேயே ஔவையும், 'நூல்பலகல்' என்று கூறினள்; இந் நீதியைக் கடைப்பிடித்துக் கவிவீரராகவ முதலியாரும் பரராஜ சிங்கனென்னும் அரசனால் கொண்டாடப்பட்டார்; அங்ஙனம்) கற்றதனால் - பல நூற்கல்விகளைக் கற்றதனாலே, உங்கள் - உங்களுடைய, கவிவீரராகவ மால் - மாலைப்போன்ற சிறப்பினையுடைய கவிவீரராகவ முதலியாரும், வெற்றி-ஜெயம் பொருந்திய, பரராச சிங்கம் - பரராஜசிங்க மென்னும் அரசன், மேன்மை செய்ய - உயர்வு செய்ய, பெற்றதனால் - அடைந்ததனாலே, (நீயும் கல்வி கற்பதின் உயர்வை யுணர்ந்து) ஞாலமதில் - இப் பூமியில், நல் - நல்ல, பருவகாலமதில் - இளம்பருவ காலத்திலேயே, நூல் பல - பல நூல்களை, கல் - கற்றுக்கொள்வாயாக.

(வி-ரை) மால் - கவிவீரராகவ முதலியாருக்கு உவமையாகு பெயர்; முதலியார் விஷ்ணுவைப்போன்ற எல்லாச் சிறப்புமுடையவ ராதலின் இங்ஙனம், 'மால்' என்று கூறப்பட்டார். சிங்கம் - இதுவும் அரசனுக் குவமையாகுபெயர்; 'பரராஜ சிங்கம்' என்பதற்கு, 'வேற்றரசர்களாகிய யானைகளுக்குச் சிங்கம் போன்றவன்' என்பது பொருள்.

கல்வியாற் சிறப்புற்ற அந்தகக்கவி வீராாக்வ முதலியார் கதையாவது:—இந்த அந்தகக்கவி வீரராகவ முதலியா ரென்பவர், செங்கற்பட்டைச் சார்ந்த பொன்விளைந்தகளத் தூரில் சைவ வேளாளர் குலத்திற் பிறந்தவர்; இவர், இயற்கையிலேயே கவிவல்லுநராய்ப் பன்னூல்களையுங் கற்றுக் கற்பு மிகுந்த மனைவியை

மணஞ் செய்துகொண்டு வாழ்ந்துவந்தார். இப்படி யிருக்குங் காலத்தில் ஒரு சமயம் இவர் அயலூருக்குச் சென்று திரும்பி வந்தார்; அங்ஙனம் வரும்போது, இவருடைய வருகையை ஏவலாளிகள் இவர் மனைவியாருக்குத் தெரிவித்தனர்; அப்போ திவர் மனைவியார், விளையாட்டாக, "முதலியார் யானைக்கன்றும், வளநாடும், பொற்பந்தமும் பெற்று வருகின்றனரோ," என்று கூறினர். அதனை முதலியார் பிறரா லறிந்து, பின்பு வீட்டிற்குச் சென்று சிலநாட்கள் தங்கி, மனைவி சொன்ன வார்த்தையை நினைந்து, 'அதன்படியே யானைக்கன்று, வளநாடு முதலியன பெற்றுவரவேண்டும்' என் றுறுதிகொண்டு ஒருசமயம் வெளியேறிச் சோணாடு சென்று ஆங்குச் சிலநாள் வதிந்து, பின்னர் ஈழநாடடைந்து பராராஜ சிங்கமென்னும் அரசனைக் கண்டு அவனைப் புகழ்ந்து பாடித் தம் கவித்திறத்தைக் காட்டி மகிழ்வித்து அவனிடம் தம் மனைவி கூறியவாறேபொற்பந்தம், யானை முதலியன பெற்று வந்தனர். இவருடைய புகழ்ச் செயல்களும், சரித்திரங்களும் பலவுள. அவற்றை விரிவஞ்சி விடுத்தனம். இவருடைய சரித்திரங்களை விசேஷமாக அறிய விரும்புவோர் அபிதான சிந்தாமணி, அபிதான கோசம், சிறப்புப் பெயகராதி, தமிழ் நாவலர் சரிதை, முதலிய நூல்களிற் கண்டுணர்க. இவர் செய்த நூல்கள் திருக்கழுக்குன்ற புராணம், திருவாரூருலா, சந்திரவாணன் கோவை, கயத்தாற்றரசனுலா, சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், சேயூர்க் கலம்பகம், திருக்கழுக்குன்றமாலை முதலியனவாம்.

---

## "நெற்பயிர் விளை."

என்பதற் கேற்ப, பயிர்த்தொழிலின் உயர்வை விளக்குதல்.

71. அண்டர் முதலோர்க் கமிர்தமய மாவடிவு [ணுல்
கொண்டறமே முத்திக்குங் கொள்கருவாக்—கண்டத

தக்கபுகழ்ப் புன்னைவனத் தாடாளா வெப்பயிர்க்கும்
மிக்ககுண நெற்பயிர் விளை.

(ப - ரை) தக்க - தகுதியாகிய, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, தாடாளா - நன்முயிற்சியை யுடையவனே!, (உலகத்தில் நெற்பயிரிட்டு வேளாண்மை செய்யுந் தொழிலானது பலர்க்கு முபகாரமானதும், அறத்தை விருத்தி செய்யத் தக்கதும், முத்திக்கு வித்தானது மாகையினாலே அது எல்லாத் தொழில்களினுஞ் சிறந்ததாம்; பிறருக்குத் தாழாமல் வாழவும், அறத்தைத் தேடவும், முத்தியிற் சேரவும் விருப்பமுடையார் இத் தொழிலையே செய்யவேண்டும்; இதுபற்றியே ஔவையும், 'நெற்பயிர் விளை,' என்று கூறினள். இந் நீதிப் படியே நெல்லானது) அண்டர் முதலோர்க்கு - தேவர்கள் முதலியவர்களுக்கு, அமிர்தமயமா-அமுதம் போன்ற அழகுடையதாய், வடிவு கொண்டு-உருவெடுத்து, முத்திக்கும்-மோக்ஷவீட்டைச் சார்தற்கும், (எதுவாகிய) அறமே கொள் - தருமத்தையே கொள்ளத் தக்க, கருவா - வித்தாக, கண்டதனால் - எல்லோரும் பார்த்தறிந்த படியினாலே, எப்பயிர்க்கும் - எந்தப் பயிர்களுக்கும், மிக்க குணம்- மிகுந்த குணத்தையுடைய, நெற்பயிர் - நெல்லின் பயிரை, விளை - நீ உண்டாக்கு.

(வி - ரை) நெல்லுணவானது, மனிதர் பிழைத்திருப்பதற் கேதுவா யிருப்பதோடு தேவர்களுக்கும் இவ் வுலகத்தார் செய்யும் பூசனை காலங்களில் உணவாதலினாலே, 'அண்டர் முதலோர்க் கமிர்தமய மாவடிவு கொண்டு,' என்றார் ஆசிரியர். 'அறமே முத்திக்கு' என்பதை, 'முத்திக்கு அறம்' என மாற்றித் தகுதியுடைப் பொருள் பற்றி வந்த நான்காம் வேற்றுமையாகக் கொள்ளவேண்டும்; இந் நெற்பயிர் விளைவானது எல்லா அறங்களையும் வளர்த்து மனிதரை

முடிவில் முத்திவீட்டிலும் கொண்டுபோய்ச்சேர்க்கத்தக்கதாயிருப் பதனாலே இதனை, 'முத்திக்குங் கரு' என்றுங் கூறினர்.

---

"நேர்கோனெறி நில்."

என்பதற் கேற்ப, நேராக நடந்து புகழைத் தேடவேண்டு மென்பதை விளக்கும்

வேளாள ரியல்பு.

72. வேத நெறிநின்ற வேதியர்போ னின்மரபோர்
ஆதிமுத லாப்புகழை யாண்டதுபார்—ஆதுலர்க்குத்
தாயான புன்னைவனத் தாடாளா! பாகைமன்னா!
நீயுநேர் கோனெறி நில்.

(ப - ரை) ஆதுலர்க்கு - யாசகர்க்கு, தாயான - அன்னை போல் ஆதரிக்கத்தக்கவனான, புன்னை வனம் - புன்னைவனத்தி லுள்ள, தாடாளா-நன்முயற்சியை யுடையவனே!, பாகை மன்னா- பாகையையுடைய அரசனே!, (உலகத்தில் மிக்க புகழை யடைய விரும்புவோர், நேரான இராஜநீதி நெறியில் நின்று ஒழுங்கு தவ றாமல் நடக்கவேண்டும்; அங்ஙன நடப்பின் மிக்க புகழும் மேன் மையு முண்டாம்; இதுபற்றியே ஒளவையும், 'நேர்கோ னெறி நில்,' என்று கூறினள்; இந் நீதியை அனுசரித்து நின் குலத்தின ரும் புகழை யாண்டனர். அங்ஙனம்) வேத நெறி - வேதத்தின் ஒழுங்கான மார்க்கத்தில், நின்ற - நிலைபெற்ற, வேதியர்போல் - அந்தணரைப்போல, நின் மரபோர் - உன்னுடைய குலத்தைச் சார்ந்தவர்கள், ஆதிமுதலா - பண்டைநாட் டொடங்கி, (கோ னெறியில் நின்று)புகழை-கீர்த்தியை, ஆண்டது பார்-ஆண்டுவந்த தன்மையை நீ ஆராய்ந்துபார்; (இதனாலேயே கோனெறியில் நின்று புகழைத் தேடவேண்டு மென்பது நன்கு விளங்கும். ஆத

லால்) நீயும்—, நேர் - ஒழுங்காகிய, கோன் நெறி - அரசனுடைய நீதிமார்க்கத்தில், நில் - நின்று புகழைத் தேடுவாயாக.

(வி-ரை) யாசகர்க்கு விரும்புவனவற்றைக் கொடுத்து அவர்களைத் தாயைப்போன்று புன்னைவனநாதன் ஆதரிக்கக்கூடியவனாதலின், 'ஆதுலர்க்குத் தாயான'என்றார் ஆசிரியர். நெறிநின்ற-ஏழாம் வேற்றுமைத் தொகை. "நேர்பட வொழுகு," என்பது ஆத்திசூடி சூத்திரம். இந் நூலாசிரியர், 'நேர்கோனெறிநில்,' எனப் பேதமாகக் கூறியிருக்கின்றனர்.

---

## "நைவினை நணுகேல்."

என்பதற்கேற்ப, பிறர் வருந்தத்தக்க செய்கைகளைச் செய்யலாகாதென்பதை விளக்கும்

### இராமர் கதை.

73. செய்தவமும் பாராமற் சீராமன் சம்புகனை
நைதலின்றிச் சென்னிகொண்ட ஞாயம்பார்-உய்தருமவானே!நற் புன்னை வனநாதா! மிக்கதுஷ்ட
ரேனுநைவி னைநணு கேல்.

(ப - ரை) உய்-பிழைத்தற்கேதுவான, தருமவானே - அறத்தை யுடையவனே!, நல்-நல்ல, புன்னைவனநாதா-புன்னைவனத்திற்குத் தலைவனே!, (உலகத்தில் நன்மையடைய விரும்புவோர், பிறர் வருந்தும்படியான காரியங்களை நெருங்கிச் செய்யலாகாது; இதுபற்றியே ஔவையும், 'நைவினைநணுகேல்,' என்று கூறினள். இந் நீதியை யனுசரித்தே இராமர், வழக்கத்துக்கு விரோதமாகத் தேகத்தோடு சுவர்க்க மடையவேண்டுமென்று தவமியற்றித் தகாச் செய்கை செய்த சம்புகனுக்கும் நைவினை புரியாமல், அவன் வருந்தாம லிருக்கும்படியான காரியத்தையே செய்து அவனை

நற்பதவியிற் சேர்த்தனர். அங்ஙனம், அத் தகாச் செய்கையை நீக்கி அவன் வருந்தாதபடி அவனை நற்பதவியிற் சேர்க்கவேண்டி) சிராமன் - ஸ்ரீ ராமபிரான், செய் தவமும் - அங்ஙனம் அவன் செய்த தவத்தையும், பாராமல் - கருதாமல், சம்புகனை-அந்தச் சம்புகனை, நைதலின்றி - வருந்துதலின்றி, சென்னி கொண்ட - சிரத்தை யறுத்துக்கொண்ட, ஞாயம் - ஒழுங்கை, பார்-நீ ஆராய்ந்து பார்; (இதனாலும் எவரிடத்தும் நைவினை புரியாதிருக்க வேண்டுமென்பது நன்கு விளங்கும்; ஆதலின், இந் நீதியை யுணர்ந்து நீயும்) மிக்க துஷ்டரேனும் - மிகுந்த துஷ்டர்களா யிருந்தாலும், (அவர்களிடத்தும்) நைவினை - வருந்தும்படியான செய்கைகளைச் செய்ய, நணுகேல் - நெருங்காதே.

(வி - ரை) சம்புகன் தேகத்தோடு சுவர்க்க மடையவேண்டித் தவஞ் செய்தும் அது மரபுக்கு விரோதமா யிருந்தபடியால் அதனை நீக்கவேண்டியது இராமருக்கு அவசியமா யிருந்தது. அப்படி யிருந்தபோதிலும் அவன் நையாமல் அதனை நீக்கவேண்டுமென்று கருதி அங்ஙனமே புரிந்தா ரென்பது தோன்ற, 'நைதலின்றிச் சென்னிகொண்ட ஞாயம் பார்,' என்றார் ஆசிரியர். தவம் சிறந்ததாயினும் தகாச் செய்கையில் அதனையும் பெரிதாகப் பார்க்கலாகாதென்பது தோன்ற, 'செய்தவமும் பாராமல்,' என்றார். இங்கே பார்த்தலாவது கருதுதல்; இது நோக்கல் நோக்கம் எனப்படும்.

இராமர், சம்புகனை நையாமற் சென்னி யறுத்த கதையாவது: இந்தச் சம்புகன் என்பவன் இராமர் அரசாட்சி செய்யுங் காலத்தில் அவருடைய ஆளுகையி லிருந்த ஒரு சூத்திரன்; இவன் தேகத்தோடு சுவர்க்க மடையக் கருதி, சைவலகிரியிலிருந்த ஒரு மரத்தில் தலைகீழாகத் தூங்கித் தவம் புரிந்தனன். இது மரபு வழுவா யிருந்ததை முன்னிட்டு இராமர் இவன் வருந்தாதபடி இவ

னுடைய தலையை யறுத்து இவனைக் கொன்றனர். அதனல் இவன் சுவர்க்க மடைந்தனன்.

---

## "நொய்ய வுரையேல்."

என்பதற் கேற்ப, எவரும் எப்பொழுதும், எத்தகையரிடத்தும் காரியக்கேடு உண்டாகும்படி அற்பமான வார்த்தை பேசலாகாதென்பதை விளக்கும்

அருச்சுனன் கதை.

74. கந்தருவன் றஞ்சமென்ற காலையின்மா யோன்பகை
யைச், சிந்தையில்வைத் தெண்ணினனே தேர்விச
யன்—பைந்தமிழோர், போற்றுபுகழ்ப் புன்னைவன
பூபாலா யாரெனினும், ஏற்றதற்பி னெய்யவுரை யேல்.

(ப - ரை) பைந்தமிழோர் - அழகிய தமிழையுடைய வித்வான்கள், போற்று - துதிக்கின்ற, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவன பூபாலா - புன்னைவனத்திலுள்ள தலைவனே!, (எவரும் உலகத்தில், எச்சமயத்திலும் காரியச்சோர்வு உண்டாகும்படி அற்பமான வார்த்தைகளைப் பேசலாகாது; கௌரவமான வார்த்தைகளையே பேசவேண்டும்; இதுபற்றியே ஔவையாரும், 'நொய்ய வுரையேல்,' என்று கூறினர்; இந்நீதியை யுணர்ந்திருந்தபடியால் அருச்சுனன் ஒரு காலத்தில் மாயோனிடத்திலும் தாழ்ந்த வார்த்தை கூறவில்லை; அங்ஙனம் இந்நீதிபற்றிப் பேசத்தொடங்கி) தேர் விசயன் - தேரையுடைய அந்த அருச்சுனன், கந்தருவன் - கிருஷ்ணனுக்குப் பயந்தோடிவந்த கந்தருவன், தஞ்சம் என்ற காலையில் - தன்னை அடைக்கலமென் றடைந்த காலத்தில், மாயோன் - அந்தக் கிருஷ்ணனுடைய, பகையை - விரோதத்தை, சிந்தையில் வைத்து - மனதில் வைத்து, எண்ணினனே -

கருதினனோ?, (இல்லை; ஆதலால், இவன் மூலம் இந் நீதியை யுணர்ந்து) யாரெனினும் - எவராயிருந்தபோதிலும், ஏற்றதற்பின் - ஒரு காரியத்திற் கிணங்கிய பிறகு, (அக் காரியச் சோர்வுண்டாகும்படி) நொய்ய - அற்பமான வார்த்தைகளை, உரையேல்-சொல்லாதே, (வீரமான வார்த்தைகளையே கூறுவாயாக.)

(வி - ரை) 'எண்ணினனோ' என்பதில் ஓகாரம் எதிர்மறைப் பொருளது. ஒரு கந்தருவன் கிருஷ்ணனுக் கொருசமயம் அபசாரஞ் செய்து அருச்சுனனிடம் ஓடிவந்து அடைக்கலம் புக, அவன் அந்தக் கந்தருவனைக் காப்பாற்றும் பொருட்டு அந்தக் கிருஷ்ணனுடைய பகையையுங் கருதாமல் அவருட னெதிர்த்துத் தாழ்ந்த வார்த்தை கூறாமல் வீரமான வார்த்தை கூறினனென்பது புராணகதை. இக் கதையை வருமிடத்துக் கண்டுணர்க.

---

## "நோய்க்கிடங் கொடேல்."

என்பதற் கேற்ப, பிணிக் கிடங்கொடுக்க லாகா தென்பதை விளக்கும்

### இலக்குமணன் கதை.

75. பசிநோ யிலக்குமணன் பார்வனத்தில் முன்னே
நசியாம னீக்கி நலமா—இசைபெற்றான்
பொன்னாளும் புன்னைவன பூபாலா வப்படிப்போல்
எந்நாளு நோய்க்கிடங்கொ டேல்.

(ப - ரை) பொன் - இலக்குமியை, ஆளும் - தன்னிடத்தே வைத் தாதரிக்கின்ற, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, பூபாலா-பூமியைப் பாலிக்கத்தக்கவனே!, (நோய்க் கிடங்கொடேல்,' என்று ஔவை கூறியபடி பிணி வரும்படியான காரியங்களைச்

செய்து அந்நோய் வந்து தன்னிடத்தே குடியிருக்கும்படி இடங் கொடுக்க லாகாது; அங்ஙன மிடங் கொடுப்பின் சுக வாழ்வு கெட்டுப் பலவித துன்பத்தை யடைவதற் கேதுவாகும்; இந் நீதியை யனுசரித்தே, பசியையும் நித்திரையையும் நீக்குவதால் பலவித நோய்கள் உண்டாவது இயற்கையா யிருந்தும், பதினான்கு வருஷ காலம்வரை அப் பசியையும் நித்திரையு மகற்றி) இலக்குமணன் - இராமர் தம்பியாகிய இலக்குமண னென்பான், பசி நோய்-பசியை அடக்குவதா லுண்டாகும் நோயை, முன்னே - முற்காலத்தில், பார் வனத்தில் - இப் பூமியிலுள்ள வனத்திலே, நசியாமல் - தான் கெடாமல், நீக்கி-விலக்கி, நலமா-நன்மையாக, இசை பெற்றான்-என்று மழியாப் புகழடைந்தான்; (ஆதலால்,) அப்படிப்போல் - அவன் செய்த அவ்விதத்தைப்போல, (நீயும்) எந்நாளும் - எந்த நாளிலும், நோய்க்கு - வியாதிக்கு, இடம் கொடேல்-உன்னுடைய தேகத்தில் இடங் கொடாதே.

(வி - ரை) பசிநோய் - மூன்றும் வேற்றுமைத்தொகை; இது, கருத்தாப்பொருளது; பசியா லுண்டாக்கப்பட்ட நோய் என விரியும். 'பசியையும் நித்திரையையும் அடக்குவதால் பல நோய்கள் வருவது இயற்கையா யிருந்தும் இலக்குமணன் அவ் விரண்டையு மடக்கி, அவற்றால் வரும் நோய்கள் வந்து குடியேறா திருத்தற் கேதுவான காரியங்களைச் செய்து அவற்றையும் நசியா மல் பதினான்கு வருடங்கள்வரை நீக்கி இசைபெற்றா னாதலால், நீயும் அங்ஙனமே நோய்க் கிடங்கொடாதிருந்து கீர்த்தியையும் சீர்த்தியையும் அடையக்கடவாய்,' என்பது இதன் கருத்து. 'பொன்னையாளும்' எனவே, 'அதிகரித்த செல்வத்தை யுடையவன்' என்பதாயிற்று.

பசிநோயை நீக்கி இசைபெற்ற இலக்குமணன் கதையாவது: இந்த இலக்குமணன், தசரதருக்குச் சுமித்திரையிடம் பிறந்

தவன்; எப்பொழுதும் இராமரை விட்டு நீங்காதவன்; அவருடன் மிதிலைக்குச் சென்று ஜனகருடைய புத்திரியாகிய ஊர்மிளையை மணந்தவன்; இராமர் காட்டிற்குச் செல்லுங் காலத்தில் இவன், தன் தாய் சொற்படி அந்த இராமருடன் காட்டிற்குச் சென்று, அவருக் குதவியான காரியங்களை யெல்லாம் செய்து பதினான்கு வருடங்கள்வரை பசியையும் நித்திரையையும் நீக்கி, அவற்றால் வந்தணுகும் நோய்களுக்கு மிடங் கொடாமல், அவை வாராதிருத் தற் கேதுவான காரியங்களைப் புரிந்து வருந்தாமல் அவற்றையும் விலக்கிச் சுகவாழ் வடைந்து என்று மழியாப் புகழ் பெற்றனன். இவன் இங்ஙனம் மனவுறுதி யுடையவனா யிருந்ததனாலேயே இரா வண சம்மாரகாலத்தில் அரும்பெருஞ் செயல்களை யெல்லாம் புரிந்தனன். இவனுடைய கதை விரிவாக இராமாயணத்தா லுண ரப்படும்.

---

## "பழிப்பன பகரேல்."

என்பதற் கேற்ப, உலகம் பழிக்கும்படியான வார்த்தைகளைக் கூறலாகா தென்பதை விளக்கும்

## கைகேயி கதை.

76. சூடுமுடி ராகவனார் சூடாமற் கைகேயி
கேடுசொல்ல நிந்தை கிடைத்ததுபார்—நீடுபுகழ்க்
காராளா! புன்னைவனக் கற்பகமே! யாரிடத்தும்
ஏராப் பழிப்பனசொல் லேல்.

(ப - ரை) நீடு புகழ் - நீண்ட கீர்த்தியையுடைய, காராளா - காரை ஆண்ட வேளாளர் குலத்தினனே!, புன்னைவனம் - புன்னை வனத்திலுள்ள, கற்பகமே - கேட்டவற்றை யெல்லாம் கொடுக்கும் கற்பகவிருக்ஷமே!, (உலகத்தார் பழிக்கும்படியான

காரியங்களை எவரும் எப்பொழுதும் செய்யலாகாது; அவ்வா றின்றி அவற்றைச் செய்யத் துணியின் உலக முள்ளளவும் அழி யாப்பழி நிலையாக நிற்கும்; இதுபற்றியே ஔவையும், 'பழிப்பன பகரேல்,' என்று கூறினள். இந் நீதியை யுணராமல்,) கைகேயி - பரதன் தாயாகிய கைகேயி என்பவள், சூடும் முடி - தரிக்கின்ற கிரீடத்தை, ராகவனுர் - இராமபிரான், சூடாமல் - சூடாதிருக் கும்படி, கேடு - கெடுதியான வார்த்தையை, சொல்ல - தசரதரிட முரைத்து முடிசூட்டுங் காரியத்தைத் தடுக்க, (அதனாலே) நிந் தை - பழிப்பானது, கிடைத்தது - அவளுக்குச் சேர்ந்ததை, பார் - நீ ஆராய்ந்து பார், (இதனாலும் பழிப்பன பகரக்கூடாதென் பது நன்கு விளங்கும்; ஆதலின், யாரிடத்தும் - எவரிடத்தும், ஏரா - அழகாக நின்று, பழிப்பன - உலகம் பழிக்கும்படியான வார்த்தைகளை, சொல்லேல் - நீ கூருதே.

(வி - ரை) கற்பகம் - உவமையாகுபெயர்; கற்பகத்தரு கேட்டவற்றை யெல்லாம் கொடுப்பதுபோல, புன்னைவனநாத னும் ஈகையிற் சிறந்தவ னென்பது தோன்ற இங்ஙனம், 'கற்ப கம்' என்ருர்.

**பழிப்பன சொல்லி நிந்தைக்காளாகிய கைகேசியின்கதை** யாவது:—இந்தக் கைகேசி யென்பவள், தசரதன் தேவியருள் ஒருத்தி; கேகயராஜகுமாரி; இவளிடத்தில் தசரதன் மிக்க அன் புடையவனு யிருந்தான். இவள் ஒரு காலத்தில், சம்பரன் யுத்தத் தில் தசரதனுக்குச் சாரதியா யிருந்து வெற்றியை யுண்டாக்கி அவனிடம் தான் வேண்டும்போது கொடுக்கும்படி இரண்டு வரம் பெற்றிருந்தாள். அப்படி யிருந்த இவள், இராமருக்கு மகுடாபி ஷேகஞ் செய்ய எல்லாம் சித்தமாயிருந்த சமயத்தில் கூனியாகிய மந்தரை யென்னும் தோழியின் போதனையால், தான் முன்னே இரண்டு வரம் கேட்டிருந்தபடி அவற்றைக் கொடுக்க தசரதனை

இசையச் செய்து இராமரை வனத்திற் கனுப்பவும், தன் மகன் பரதனுக்குப் பட்டங் கட்டவுங் கேட்டனள். தசரதன் வாக்குக் கொடுத்து விட்டபடியால் அவற்றை மறுத்தற்கும் முடியாமல், இராமரைக் காட்டிற் கனுப்பவும் சம்மதியாமல் வருந்தி, இராமர் கைகேசியால் நடந்ததை யுணர்ந்து காட்டிற் செல்ல, அப் புத்திர சோபத்தால் உயிர் விட்டனன். பின்னர், இராமர் பதினன்கு வருடங்கள் சென்று மீண்டு வருமளவும் அவ் விராஜ்ஜியம் திருப்தி கரமான நிலைமையி வில்லாமல் குழப்ப முற்றிருந்தது. பரத னும் நாடாளாமல், இராமர் பாதுகையை வைத்துப் பூஜித்துக் கொண்டு துக்கசாகரத்தில் மூழ்கியிருந்தனன். கைகேசியை எல் லோரும் நிந்தனை செய்தார்கள். அவளுக்கு என்று மழியாப் பழி நிலைபெற்றது.

---

## "பாம்பொடு பழகேல்."

என்பதற் கேற்ப, பாம்போடு பழகுவதால் தீங்குண்டா மென்பதை விளக்கும்

### வாசுகி கதை.

77. **வா**சுகிமுன் னுட்பழகும் வானேர்க் கமுதெழுமுன்
மோசமுற நஞ்சுமிழ்ந்த மூர்க்கம்பார்—காசினியில்
நன்றறியும் புன்னைவன நாதா! இதையறிந்தே
என்றும்பாம் போடுபழ கேல்.

(ப - ரை) காசினியில் - இப் பூமியில், நன்று அறியும் - நன் மையை அறிகின்ற, புன்னைவன நாதா - புன்னைவனத்திற்குத் தலைவனே!, (உலகத்தில் எவரும் பாம்பொடு பழக்கஞ் செய்ய லாகாது; அங்ஙன மின்றிச் செய்யின் எப்பொழுதும் தீங்கே யுண் டாகும்; இதுபற்றியே ஔவையும், 'பாம்பொடு பழகேல்," என்று

கூறினுள். இந் நீதியைக் கடைப்பிடியாமல் தேவர்கள் முன்னே வாசுகி யென்னும் பாம்போடு பழகி ஒரு காரியத்தைத் செய்தபடியால் தீங்குற்றனர். அவ்வாறு) வாசுகி - வாசுகி யென்னும் பாம்பும், முன் நாள் - ஆதி காலத்திலே, பழகும் - பழகித் தன்னைத் தாம்பாக்கி அமுதங் கடைந்த, வானோர்க்கு - தேவர்களுக்கு, அமுது எழுமுன் - அமுதம் உண்டாவதற்கு முன்னே, மோசம் உற - மோசம் பொருந்த, நஞ்சு உமிழ்ந்த-விஷத்தைக் கக்கி அத் தேவர்க்குத் தீங்கு செய்த, மூர்க்கம் - உக்கிரத்தை, பார் - நீ ஆராய்ந்துபார்; இதனுலும் பாம்பொடு பழகுதலின் தீங்கு நன்கு விளங்கும்; ஆதலால்,) இதை அறிந்து - இச் செய்கையை உணர்ந்து, என்றும் - எப்பொழுதும், பாம்பொடு பழகேல் - பாம்போடு பழக்கஞ் செய்யாதே.

(வி - ரை) பாம்பு விஷத்தை யுடையதாதலின் அதனோடு எவ்வளவு பழக்கஞ்செய்தாலும் ஒரு சமயத்தில் தீங்கையே உண்டாக்குமாதலின், இதனோடு எப்பொழுதும் எக்காரணத்தை முன்னிட்டும் பழகலாகாதென்பது இதன் கருத்து. வாசுகி என்பதில் உயர்வுசிறப்பும்மை தொக்கது. வாசுகியே இவ்வாறு செய்ததென்றால், மற்றைய பாம்புகள் தீங்குசெய்யு மென்பதைக் கூறவும் வேண்டுமோ என்பது இதனுற் பெறப்படும்.

அமுதங் கடைந்த காலத்தில் விஷத்தைக் கக்கிய வாசுகியின் கதையாவது:—வாசுகி யென்பவன் கத்துரு புத்திரன்; ஆதி சேஷனுடைய சகோதரன்; அஷ்டமா நாகங்களில் ஒருவன்; இவனுடைய பெண் உலூபியைத்தான் அருச்சுனன் மணந்தான். ஒரு காலத்தில் இந்திரன் தேவர்களுடனே சென்று மகாவிஷ்ணுவைக் கண்டு வணங்கி, "நரை திரை மூப்பு பிணி ஆகியவை அடையாதிருக்கக் கிருபை செய்யவேண்டும்," என்று விண்ணப்பஞ் செய்ய, அவர், "திருப்பாற்கடலைக் கடைந்தால் அதிலிருந்து அமுத முண்

டாகும்; அந்த அமுதத்தைப் பருகினல் உன் எண்ணம் நிறைவேறும்; மந்தரகிரியைக் கொண்டுவந்தால் திருப்பாற்கடல் கடையலாம்,'' என்று கூறினர். அப்போது தேவர்கள், "அந்த மந்தாகிரியை எவர் கொண்டுவருபவர்?'' என்று திகைத்து நிற்க, வாசுகிக்கு மூத்தவனுகிய ஆதிசேஷன், "நான் கொண்டுவருகிறேன்,'' என்று சொல்லிப்போய் உடனே அந்த மந்தரகிரியை எடுத்துக் கொண்டுவந்தான். பின்னர், திருமாலானவர், அந்த மந்தரகிரியை மத்தாக்கி, சந்திரனைத் தறியாக்கி, இந்த வாசுகியைத் தாம்பாக்கிப் பாற்கடலிலே அந்த மந்திரகிரியையிட்டு ஒரு பக்கத்தில் தேவரும் ஒரு பக்கத்தில் அசுரரும் இருந்து இழுத்துக் கடையும்படி செய்தனர். இவ்வாறே தேவரும் அசுரரும் இழுத்துக் கடைந்தார்கள். இவ்வாறு சிலதினங்கள்வரை கடையும்போது வாசுகிக்கு மிகுந்த வருத்த முண்டானபடியால் அவன் விஷத்தைக் கக்கிவிட்டான். அந்த விஷமானது வடவைக் கனல்போல் உக்கிரங்கொண்டு பாவி எல்லோரையும் தகிக்கத் தொடங்கிற்று. அதனுல் தேவர்கள் பயந்தோடி ஈசுரனிடத்தில் முறையிட, அவர் வந்து அவ் விஷத்தை உண்டு தேவர்களுடைய துன்பத்தை நீக்கி மீண்டும் அவர்கள் பாற்கடலைக் கடைந்து அமுதங் கொள்ளும்படி செய்தனர். இக் கதை புராணங்களால் இன்னும் விரிவாக உணரப்படும்.

---

## "பிழைபடச் சொல்லேல்."

என்பதற்கேற்ப, பிழை யுண்டாகும்படியான வார்த்தைகளைப் பேசலாகா தென்பதை விளக்கும்

### சாபாலி கதை.

78. சாபாலி ராமன் சபையிலோர் சொற்பிழைத்துக்
கோபால னஞ்சுடர்மெய் குன்றியே—சோபமுற்றுன்

ஆதலினாற் புன்னைவன வையனே யெவ்விடத்தும்
ஏதும் பிழைபடச்சொல் லேல்.

(ப-ரை) புன்னைவன ஐயனே - புன்னைவனத்தி லிருக்கின்ற தலைவனே!,(உலகத்தில் எவ்விடத்திலும் பிழை யுண்டாகும்படி வார்த்தைகளைப் பேசலாகாது; அங்ஙனம் பேசினால் தீங்குண்டாகும்; இதுபற்றியே ஔவையும், 'பிழைபடச் சொல்லேல்,' என்று கூறினள். இந் நீதியை யுணராமையால்,) சாபாலி-சாபாலி யென்னும் நாஸ்திகன், ராமன் சபையில் - இராமனுடைய சபையிலே (பேசுங்காலத்தில்) ஓர் சொல் பிழைத்து - ஒரு சொற்றவறி, அம் சுடர்-அழகிய பிரகாசம் பொருந்திய, கோபாலன் - அரசனைப் போன்ற, மெய் - தேகவழகு, குன்றி - குறைந்து, சோபம் உற்றான் - வருத்த மடைந்தான்; ஆதலினால் - ஆகையினாலே, எவ்விடத்தும்-எந்த விடத்திலும், ஏதும்-எந்த வார்த்தையையும், பிழைபட-குற்ற முண்டாகும்படி, சொல்லேல்-பேசாதே.

(வி-ரை) 'சாபாலி' என்பவன், இராமர் அரசாட்சி காலத்திலிருந்த ஒரு நாஸ்திகன். இவன் நாஸ்திகனா யிருந்ததினாலே இராமர் சபையிலிருந்து பிழையான வார்த்தை கூறித் தேக வடிவு குன்றி வருந்தி யிருப்பானென்பது இச் செய்யுளால் விளங்குகின்றது. இச் செய்யுளின் இரண்டாமடியில், 'கோபாலன் மெய் குன்றிச் சோபமுற்றான்,' என வருதலால் கோபாலன் என்னும் ஒருவன் இத்தகைய நிலைமையை அடைந்தானோ என ஓர் ஐயமும் நிகழ்கின்றது. இப் பாட்டின் சம்பந்தமான சரித்திரம் இன்ன நூலில் வருகிறதென்பது விளங்கவில்லை யாதலால், இவ் விரண்டு பெயர்களுள்ளும் சரித்திரத்துக்குள்ள பெயர் இன்னதுதானென்று துணிந்து கூறுதற் கேதுவில்லை. ஆயினும், சாபாலி யென்பவன் நாஸ்திகனா யிருந்ததால் அவன் சம்பந்தமாகத்தான் இக் கதை நடந்திருக்கக்கூடுமென்று துணிந்து ஒருவாறு இங்ஙனம்

பொருள் கூறினோம். இப்பொருட் கேற்ப, 'கோபாலன் மெய்,' என்பதை உவமத்தொகை யென்று கொண்டு, 'கோபாலனைப் போன்ற தேகம்,' எனக் கோபாலன் என்றதைத் தேகத்திற்கு அடைமொழியாக்கிப் பொருள் கூறினோம். கோபாலன் - அரசன். இதற்குரிய கதை வேறு விதமாக இருந்து, அறிந்தோர் அதனை விளக்கமாகத் தெரிவிப்பின் வந்தனத்துடனே ஏற்று மறு பதிப்பில் இதனைத் திருத்திக்கொள்வோம்.

---

## "பீடுபெற நில்."

என்பதற் கேற்ப, பெருமை யடையும்படி நல்ல வழியிலே நிற்கவேண்டு மென்பதை விளக்கும்

### வேளாள ரியல்பு.

79. *நீலிபழி யைக்களைந்து நின்மரபில் வேளாளர்*
*சூலிமுது கிற்சுடவே சோறிட்ட—மேலான*
*ஞாயம்பார் புன்னைவன நாதனே! அப்படிப்போல்*
*நீயுமிகப் பீடுபெற நில்.*

(ப. - ரை) புன்னைவன நாதனே - புன்னைவனத்திலுள்ள தலைவனே!, ('பீடுபெற நில்,' என்று ஔவை கூறிய நீதியை அனுசரித்து, மனிதராயினோர் உலகத்திற் பெருமை யடையும்படி அதற்குரிய நன்மார்க்கத்திலே நிற்கவேண்டும்; அங்ஙனம் நிற்பின் இம்மை மறுமை யென்னு மிரண்டிடங்களினும் கீர்த்தியுஞ் சீர்த்தியு முண்டாகும்; இந்நீதியை அனுசரித்து) நின் மரபில் - உன்னுடைய மரபிலுள்ள, வேளாளர் - வேளாளர்கள், (நெருப்பிற் பாய்ந்து) நீலி பழியை - நீலியென்பவளாலே தங்களுக்கு நேரிட்ட பாவத்தை, களைந்து - நீக்கி, சூலி - கருப்பிணியின், முதுகில் - முதுகிலே, சுட-சுடும்படி, சோறு இட்ட-அன்னமிட்ட, மேலான-

உயர்வாகிய, ஞாயம் - ஒழுங்கை, பார் - நீ ஆராய்ந்து பார்; (இதனுலும் பீடுபெற நிற்பதின் உயர்வு நன்கு விளங்கும் ஆதலின்,) அப்படிப்போல்-அவர்கள் செய்த அவ்விதத்தைப் போல, நீயும்—,) மிக - மிகுதியாக பீடு பெற - பெருமை யுண்டாகும்படி, நில் - அதற்குரிய நன்மார்க்கத்திலே நிற்கக்கடவாய்.

(வி-ரை) நீலிபழி-கருத்தாப்பொருள்பற்றிய மூன்ரும் வேற்றுமைத் தொகை. சூலி முதுகு-உறுப்புத் தற்கிழமைப்பொருள் குறித்த ஆரும்வேற்றுமைத் தொகை.

வேளாளர் நீலியால் வந்த பழியை நீக்கிய கதையாவது:—பழையனூர் வணிகன் மனைவியாகிய நீலி யென்பவள், மணஞ்செய்த சிறிது காலத்திலேயே இறந்து திருவாலங்காட்டிலே பேயாகத் திரிந்து, தன் கணவன் அங்கே ஒருநாள் வரக் கண்டு கள்ளிக்கட்டையைக் குழந்தையாகச் செய்து இடுப்பி லெடுத்துக் கொண்டு அவனிடம் செல்ல, அவன் பேயென் றறிந்து பயந்து விரைந்தோட, அப் பேயானது, 'என்னைத் தனியாகக் காட்டில் விட்டுச் செல்வது நீதியோ?' என்று பின் தொடர்ந்து சென்றது. அப்போது அவ் வணிகன் ஊருக்குட் போய் அம்பலத்திற் கூடியிருந்த வேளாளர்களிடம் சேர, அப் பேயும் அங்குப் போய்ச் சேர்ந்து அவர்களிடம், 'நான் இவருடைய மனைவி; இவர் என்னை வெறுத்துத் தள்ளிச் செல்கின்ருர்; ஆதலால், இவரிடம் சொல்லி என்னைச் சேர்த்துக்கொள்ளும்படி செய்யவேண்டும்,' என்று சொல்லிற்று. அதைக் கேட்டு அவ் வேளாளர்கள், 'நீ இவன் மனைவி யென்பதற்கு சாக்ஷி யாது?' என்று வினவ, அப் பேய், 'இக் குழந்தையைக் கீழே விட்டால், இது போய் இவரை யணைக்கும்; இதனுலேயே தெரிந்துகொள்ளுங்கள்,' என்று தன் இடுப்பிலிருந்த தன் குழந்தையைக் கீழே விட்டனள். அது போய், வணிகனை 'அப்பா!' என்று கட்டிக்கொண்டது. அப்போதும் வணிகன், 'இது

பேய்ச் செயல்' என்றான். அதைக் கேட்டு அவ் வேளாளர் எழுபது பேரும், "அப்படியாயின், நாங்கள் உனக்குப் பிணையாகின்றோம்; இவள் உன் எண்ணப்படியே பேயாயிருந்து உனக்குத் தீங்கு செய்வாளாயின், உனக்காக நாங்கள் உயிர் கொடுப்போம்; நீ சிறிது நேரம் இவ் வறைக்குட் சென்று, இவள் மனம் திருப்தியாகும்படி இவளுடன் பேசி வருவாயாக," என்று ஓர் அறையைக் காட்டினர். வணிகன் அவர்களுடைய வார்த்தையை மறுக்க முடியாமல் அவ் வறைக்குட் செல்ல, பேயும் அவனுக்குப் பின்னே சென்று கதவை மூடிக்கொண்டு அவனைக் கொன்று மறைந்துபோய்விட்டது. நெடுநேரம் வரை காத்திருந்து வணிகன் வராமையால், கதவைத் திறந்து பார்த்து அவ் வணிகன் இறந்துகிடக்கக் கண்டு, அவனுக்குப் பிணைப்பட்டதற்காகச் சத்தியந் தவறாமல் அந்த எழுபதுபேர்களும் நெருப்பிற் பாய்ந்து உயிர்விட்டு நற்கதி யடைந்தனர். இதனை,

"மாறுகொடு பழையனூர் நீலிசெய்த வஞ்சனையால்
வணிகனுயி ரிழப்பத் தாங்கள்
கூறியசொற் பிழையாது துணிந்துசெந்தீக் குழியிலெழு
பதுபேரு முருகிக் கங்கை
யாறணிசெஞ் சடைத்திருவா லங்காட்டப் பரண்டமுற
நிமிர்ந்தாடு மடியின் கீழ்மெய்ப்
பேறுபெறும் வேளாளர் பெருமையெம்மாற் பிரிந்தளவிட்
டிவளவெனப் பேச லாமோ."

என்னும் **சேக்கிழார் புராணச்** செய்யுளானும்,

"இன்னும் புகழ்நிற்க வோர்பழிக் காமற் றெழுபதின்மர்
துன்னுந் தழல்புக் கொளித்ததெல் லாஞ்சுரு திப்பொருளா
யுன்னும் புரிசைத் திருவாலங் காட்டி னுரைபதிக
மன்னுந் தமிழில் வகுத்தன்றே தொண்டை மண்டலமே."

என்னுந் தொண்டைமண்டல சதகச் செய்யுளானு முணர்க.

வேளாளர் சூலிமுதுகிற் சோறிட்ட கதையாவது:—ஒரு வேளாளர், கவி பாடும் புலவர்க்குக் கேட்டதெல்லாம் கொடுக்கும் நியமம் பூண்டிருந்தார். இதனைக் கேள்வியுற்ற ஒரு வித்வான், அவரைச் சோதிக்க விரும்பி ஒரு சமயம் அவரிடஞ் சென்று கவிப் பிரசங்கஞ் செய்தனர். அதனைக் கேட்டவுடன் அவர் அந்த வித்வானைத் தம் வீட்டில் விருந்துண்டு போம்படி வேண்டினர். அப்போது அந்தப் புலவர், 'உம்முடைய மனைவியார் முதுகின்மேல் அன்னம் படைத்தால் உண்பேன்,' என்று கூற, அவர், 'இஃதெனக் கரிய காரியமோ?' என்று கருப்பவதியாயிருந்த தம் மனைவியாரின் முதுகில் அப் புலவர்க் கமுது படைத்து அவரை உபசரித்தனர். இதனை,

"நன்கண்மை யாக வயாவுற்ற நோய்கண்டு நாடரிய
புன்கண்மை நோக்கியுஞ் சற்றுமெண் ணுதொர் புலவனுக்காத்
தன்கண்மை சூலி முதுகினிற் சோறிட்ட தன்மையினல்
வன்கண்மை செய்யவும் வல்லதன் றேதொண்டை மண்டலமே."

என்னும் தொண்டைமண்டல சதகச் செய்யுளா லுணர்க.

---

"புகழ்பட வாழ்."

என்பதற் கேற்ப, கீர்த்தியுண்டாக வாழவேண்டு மென்பதை விளக்கும்

இந்திரத்துய்ம்மன் கதை.

80. விழுமிந் திரத்துய்ம்மன் மிக்கபுகழ் சொல்லிக்
கழறுமுன்மால் நற்கழல்சேர் காதை-பழமையன்றே
செய்யபுகழ்ப் புன்னைவன நீரனே! நீயுமிந்த
வையம் புகழ்பட வாழ்.

(ப - ரை) செய்ய - செம்மையாகிய, புகழ் - கீர்த்தியை யுடைய, புன்னைவன தீரனே - புன்னைவனத்திலுள்ள ஜெயம் பொருந்தியவனே!, (உலகத்தில் மனிதராயினோர் புகழுண்டாகத் தக்க காரியங்களையே செய்து வாழவேண்டும்; அங்ஙனம் செய்யின் அவர்களுடைய பெயர் உலக முள்ளளவும் நிலைநிற்கும்; இது குறித்தே ஔவையும், 'புகழ்பட வாழ்,' என்று கூறினள். இந் நீதியைக் கடைப்பிடித்து இந்திரத்துய்ம்ம னென்பவனும் புகழ் படத்தக்க காரியத்தைச் செய்து மேன்மையுற்றான்; அங்ஙனம்) விழும் - யானையாயிருந்தும் முதலையினிட மகப்பட்டுத் தளர்ந்து விழுந்த, இந்திரத்துய்ம்மன் - இந்திரத்துய்ம்ம னென்பவன், மிக்க - மிகுந்த, புகழ் - திருமாலின் நாமமாகிய புகழை, சொல்லி - உரைத்து, கழறுமுன் - அவ்வாறு சொல்வதற்கு முன்னே, (என்றும் அழியாப்புகழ் நிலைநிற்கும்படி) மால் - மகாவிஷ்ணுவினுடைய, நல் - நல்ல, கழல் - பாதங்களை, சேர் - அடைந்த, காதை - சரித்திரமானது, பழமை அன்றோ - பழமையான தல்லவா? (ஆதலால், இக் கதையை யுணர்ந்து புகழ்பட வாழ வேண்டுமென்பதை மனதிற் கொண்டு) நீயும்-, இந்த வையம் - இந்தப் பூமியிலே, புகழ் பட - கீர்த்தி யுண்டாகும்படி, (அதற்குத் தக்க உத்தமமான காரியங்களைச் செய்து) வாழ் - வாழக்கடவாய்.

(வி - ரை) 'விழுந்த' எனற்பாலது, 'விழும்' என வந்தது காலவழுவமைதி; இறந்தகாலம் எதிர்காலமாக மாறி வந்தது.

இந்திரத்துய்ம்மன் கதையாவது:—இருஷபன் பௌத்திரனும், பரதனுக்குச் சுமதியிடம் பிறந்த புத்திரனுமாகிய இந்திரத்துய்ம்மன், மிகுந்த விஷ்ணுபக்தி யுடையவனாய், அரசாண்டு வருங் காலத்தில் ஒரு சமயம் கொலுக்கூடத்தில் யோகத் திருந்தனன். அப்போது இவன் கொலுவிற்கு அகஸ்தியர் சென்றனர். அச் சமயத்தில் இவன் மேற்கூறியபடி யோகத் திருந்தமை

யால் அவர் வந்ததை யுணராமலும், அவரை உபசரியாமலு மிருக்க, அகஸ்தியமுனிவர் கோபித்து, இவனை, "நீ யானைபோல் என்னை மதியா திருந்தமையால் யானை யாகுக," என்று சபித்தனர். அவ்வாறே இந்த அரசன் கஜேந்திர னென்னும் பெயரையுடைய யானையாயினன்; இந்த யானையானது நெடுநாள்வரை காட்டில் உலாவித் திரிந்து, ஒருநாள் நீர் பருகும் பொருட்டு ஒரு தடாகத்தி லிறங்கியது; அத் தருணத்தில் நாரதருடைய சாபத்தால் அங்கே முதலையா யிருந்த ஹூஹூ வென்னும் கந்தருவன் இந்த யானையின் காலைப் பற்றிக்கொண்டனன். அப்போது யானை, தன் வல்லமை முழுவதையும் செலுத்தி வெளியில் வரும்பொருட்டுத் தன் காலை யிழுத்தும் வெளியேற முடியவில்லை; அதனால், யானை ஒன்றும் இயலாமல் தளர்ந்து முடிவில் தான் பக்தி பூண்டிருந்த மகா விஷ்ணுவே தன்னை ஆளத்தக்கவரென்று நினைத்து, "ஆதிமூலமே!" என்று கூவிற்று. உடனே ஸ்ரீவிஷ்ணுமூர்த்தி தம்முடைய சக்கரத்தை யேவி அந்த முதலையைக் கொன்று யானையாயிருந்த இந்திரத்யும்மனுக்குத் தரிசனந் தந்தனர். இவன் அவரைத் தரிசிக்கப்பெற்று அவரருளாற் பரமபத மடைந்து என்று மழியாப் புகழ் பெற்று வாழ்ந்தனன். இவன், இங்ஙனம் அகஸ்தியர் சாபத்தை அடைந்திருந்தும் விஷ்ணுமூர்த்தியின்மீது பக்தி செலுத்தித் தன் சாபம் நீங்கப்பெற்றுப் பரமபத மடைந்து அப் பதத்தில் வாழ்ந்ததே புகழ்பட வாழ்ந்த கதையாம்.

---

## "பூமி விரும்பு."

என்பதற் கேற்ப, பூமி உயர்வா மென்பதை விளக்குதல்.

81. தலந்தீர்த்தந் தானந் தவஞ்சேர்சந் தானம்
நலம்பெறலாற் றேவரெலா நாடி—நிலந்துதிப்பார்
மந்திரியே! புன்னை வனநாதா! ஆதலினால்
புந்தியினீ பூமிவிரும் பு.

(ப - ரை) மந்திரியே - புத்தியில் அமைச்சன் போன்றவனே!, புன்னைவன நாதா - புன்னைவனத்திலுள்ள தலைவனே!, (இவ்வுலகத்தில் பூமியானது, மனிதர்க்கு எல்லா நலங்களையு மடைதற்கேதுவா யிருத்தலினாலே அதனையே விரும்பிக் காப்பாற்றிப் பயிர்த்தொழிலைச் செய்யவேண்டும்; இது குறித்தே ஔவையாரும், 'பூமி விரும்பு,' என்று கூறினர். இங்ஙனம் இந்தப் பூமியால் எல்லோரும்) தலம் - உயர்ந்த புண்ணிய ஸ்தலங்களையும், தீர்த்தம் - தீர்த்த ஸ்நானங்களையும், தானம் - ஈகையையும், தவம் - தபசையும், சேர் - பொருந்திய, சந்தானம் - சந்ததிகளையும், நலம் - இன்னும் மற்ற நன்மைகளையும், பெறலால் - அடைதலினாலே, தேவர் எல்லாம் - தேவர்க ளெல்லோரும், நாடி - எண்ணி, நிலம் - பூமியை, துதிப்பார் - உயர்வாகக்கொண்டு போற்றி வணங்குவார்கள், (பூமாதேவியைப் பூஜிப்பார்கள்.) ஆதலினால் - ஆகையினாலே, நீ - நீயும், புந்தியில் - உன்னுடைய புத்தியில், பூமி - நிலத்தை, விரும்பு - விரும்பிப் பூஜித்துப் பயிர்த் தொழில் செய்து சிறப்படைவாயாக.

(வி - ரை) பூமியானது, தன்னை விரும்பிப் போற்றித் தன்னிடம் பயிர்த்தொழில்முதலியன செய்வார்க்கு, நல்ல விளைவைக் கொடுத்து, உயர்ந்த தலங்களில் வாசஞ் செய்வதற்கும், தீர்த்தயாத்திரை செய்து பலனடைவதற்கும், தான தருமங்களைச் செய்வதற்கும், நல்ல சந்ததிகளைப் பெற்று மகிழ்வதற்கும், இன்னும் பலவித நன்மைகளை யடைவதற்கும் ஏதுவாயிருக்கின்றது; தேவர்களுக்கும் சிறப்பை யுண்டாக்குகின்றது. அதனாலேயே இதனைத் தேவர்களும் பூஜிக்கின்றனர். ஆதலால், இதனை உயர்வாகக்கொண்டு நீயும் பூஜித்து நற்பயனை யடைவாயென்பது இதன் கருத்து.

---

"பெரியாரைத் துணைக்கொள்."

என்பதற் கேற்ப, பெரியோரைத் துணைக்கொள்வதனு லுண்டா முயர்வை விளக்கும்

பிரகலாதன் கதை.

82. தந்தை யிரணியனைத் தள்ளியவன் மைந்தன்முன்னே
சிந்தையின்மா யோன்றுணையே தேடியுய்ந்தான்-சந்த
நட்பறியும் புன்னைவன நாதமகி பாவுலகிற் [தமும்
குட்பெரியா ரைத்துணைக் கொள்.

(ப - ரை) சந்ததமும் - தினந்தோறும், நட்பு - சிநேகத்தின் உயர்வை, அறியும் - தெரிந்து நற்சிநேகமே கொள்கின்ற, புன்னை வனம் - புன்னை வனத்திலுள்ள, நாதமகிபா-தலைவனுகிய அரச னே!, (உலகத்தில் மனிதராயினுர் எக்காலத்திலும் அற்பர் உறவை நீக்கிப் பெரியோரையே துணைக்கொள்ளவேண்டும்; அங்ஙனங் கொள்ளின் எத்தகைய ஆபத்தும் நீங்கி நன்மை யுண்டாகும்; இதுபற்றியே ஔவையும், 'பெரியாரைத் துணைக்கொள்,' என்று கூறினள்; இந் நீதியை உணர்ந்தமையால்,) தந்தை-தன்னுடைய தகப்பனுகிய, இரணியனை-இரணியகசிபையும், தள்ளி-கொடியவ னென்று நீக்கி, அவன் மைந்தன்-அவனுடைய புத்திரனுகிய பிரக லாதனும், முன்னே - முற்காலத்தில், சிந்தையில் - மனதில், மாயோன் துணையே - விஷ்ணுவின் சகாயத்தையே, தேடி - ஆராய்ந்துகொண்டு, உய்ந்தான் - (அவருடைய உதவியினுலேயே தன் தகப்பனுற் செய்யப்பட்ட தீங்குகளெல்லாம் நீங்கி நலமடைந்து) பிழைத்தான்; (ஆதலினுலே, நீயும்) உலகிற்குள் - இந்தப் பூமியினிடத்தில், (பெரியாரைத் துணைக்கொள்வதனு லுண்டா முயர்வை யுணர்ந்து) பெரியாரை - உயர்ந்தவர்களையே, துணைக்கொள் - துணையாகக் கொள்ளக்கடவாய்.

(வி-ரை) இரணியனை, மைந்தன் என்பவற்றில் உயர்வு சிறப் பும்மைகள் தொக்கன. இரணியன் தந்தையாயிருந்தும் பிரகலாதன் மைந்தனு யிருந்தும், இரணியன் கொடியவனு யிருந்தபடியால் அந்தத் தந்தையாகிய இரணியனையும், அந்தப் புத்திரனுகிய பிரக லாதனும்தள்ளினுன் என அவ்விருவருக்கு முள்ள உரிமை யுயர்வை விளக்குதலால் இவ் வும்மைகள் இங்ஙனம் உயர்வுசிறப்புப் பொரு ளனவாம். இதனுல், கொடியோர் தந்தை தாயா யிருப்பினும் அவரைத் தள்ளவேண்டு மென்பதும், நல்லோர் எவராயிருப்பினும் அவர் துணையைக் கொள்ளவேண்டு மென்பதும் பெறப்படும்.

மாயோன் துணைகோண்டுய்ந்த பிரகலாதன் கதையாவது:—இந்தப் பிரகலாதன் இரணியகசிபுக்கு லீலாவதியிடம் பிறந்தவன்; இவன் அசுரகுலத்திற் பிறந்தவனு யிருந்தும் இளமையிலேயே தன் தந்தையாகிய இரணியகசிபு கொடிய னென்பதை யுணர்ந்து, அந்த இரணியன் எல்லாத் தேவர்களினும் தானே உயர்ந்தவ னென்றெண்ணிப் பள்ளிப் பிள்ளைகள் முதலில் அக்ஷராப்பியாசஞ் செய்யுங் காலத்தில், 'ஹரி ஓம் நம' என்று சொல்லும் வழக்கத்தை நிறுத்தி, 'இரணியநம' என்று சொல்லும் படி கட்டளையிட்டிருந்ததைத் தள்ளித் தன் ஆசாரிய புத்திரனுகிய சண்டனிடத்தில் கல்வி கற்கப்புகுந்த காலத்தில் அவன் இரணிய நாமத்தை ஒதும்படி சொல்ல, அதனைச் சொல்லாமல் ஹரிநாம மோதினன். இதனைச் சண்டன், இரணியனிடத்தில் தெரிவித்தான். உடனே அவன் பிரகலாதனைத் தன்னிடம் வரவழைத்து, தன்னுடைய நாம மோதும்படி சொன்னுன். அப்போதும் பிரகலாதன் இரணியநாம மோதாமல் ஹரிநாமமே யோதினன். அதைக் கேட்டவுடன், இரணியகசிபு கோபித்து, பல ஆயுதங்களால் இவனை வருத்தியும், அக்கினியில் தள்ளியும், நாகங்களை விட்டுக் கடிப்பித்தும், யானையை யேவிக் காலால் இடறுவித்தும், கோபுரத்தின்மே லேற்றித் தள்ளுவித்தும்,

கடலிற் றள்ளுவித்தும், விஷம் பருகுவித்தும், சம்மட்டியால் அடிப்பித்தும் பலவாறு ஹிம்சை செய்தனன். இப்படியெல்லாம் ஹிம்சித்துங்கூட, பிரகலாதன் சிறிதும் அஞ்சாமல் அரிநாமத்தையே உச்சரித்துக்கொண்டிருந்தான். அதனால் இரணிகசிபு, முன்னிலும் அதிகமாகக் கோபித்து, பிரகலாதனை நோக்கி, "நீ கூறும் நாமமுடைய உன்னுடைய தேவன் எங்கே யிருக்கிறான்?" றன்று வினவ, பிரகலாதன், "அவன் எவ்விடத்திலு மிருப்பான்," என்றனன். அதைக் கேட்டு இரணியகசிபு, எதிரிலிருந்த தூணைச் சுட்டிக் காட்டி, "இந்தத் தூணிலிருக்கின்றானோ?"என்று கேட்க, "இந்தத் தூணிலு மிருப்பன், துரும்பிலு மிருப்பன்," என்று இவன் கூறினன். உடனே இரணியகசிபு பெருங் கோபத்துடனே அந்தத் தூணைக் காலா லுதைத்தனன். அவ்வா றுதைக்கவே, அத் தூணிலிருந்து ஸ்ரீ விஷ்ணுமூர்த்தி நரசிம்ம வடிவமாக வெளியேறி அந்த இரணியகசிபைக் கொன்றனர். அதன்மேல் பிரகலாதன், ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியிடம் வேண்டிய வரங்களைப் பெற்று மேன்மை யடைந்தனன்.

---

## "பேதைமை யகற்று."

என்பதற் கேற்ப, மனிதர் அஞ்ஞானத்தை யொழித்து
உண்மை யுணர்வடைந்து பரோபகாரிகளாய்
வாழுதலின் உயர்வை விளக்கும்

## திலீபன் கதை.

83. கோவதைசெய் யப்பிடித்த கோளரிக்குத் தன்னுடலை
ஈவனென்று னேதிலிப னென்னுமன்னன் - ஆவதனால்
நட்பாளும் புன்னைவன நாதமன்னா! எப்போதும்
உட்பேதை மையகற் று.

(ப - ரை) நட்பு-நல்லோர்பாற் செய்யும் சிநேகத்தன்மையை, ஆளும்-தன்னிடத்தே வைத்தாளுகின்ற, புன்னைவன நாதமன்னு-புன்னைவனத்திற்குத் தலைவனாகிய அரசனே!, (மனிதராகப் பிறந்தவர், அஞ்ஞானத்தை யொழித்து, மெய்யுணர்ச்சியை யடைந்து எல்லாச் சீவராசிகளிடத்தும் தயையுடையவராயும், பரோபகாரிகளாயும் வாழவேண்டும்; அங்ஙனம் வாழின் அவர்க்கு மேலான பதவி கிடைக்கும். இதுபற்றியே ஒளவையும், 'பேதமை யகற்று,' என்று கூறினள். இந் நீதியை உணர்ந்தமையாலே,) திலிபன் என்னும் மன்னன்-திலீபனென்னு மரசன், (பேதைமையை அகற்றி, உலகத்தில் அறமே சிறந்ததா மென்றுணரும் மெய்ஞ்ஞானத்தை யடைந்து) கோ - பசுவை, வதை செய்யப் பிடித்த - கொல்லப் பிடித்த, கோள் அரிக்கு - கொல்லுதலையுடைய சிங்கத்திற்கு, தன் உடலை - தன் தேகத்தை, ஈவன் என்றான் - கொடுப்பேன் என்று கூறி மேன்மை யடைந்தான்; ஆவதனால் - இவ்வாறு இத்தகைய மனிதர்களால் இத்தகைய அறச்செயல்கள் நிகழ்வதனாலே, (நீயும் பேதைமை யகற்றி ஞானத்தை யடைதலின் உயர்வை யுணர்ந்து) எப்போதும் - எக்காலத்தும், உள் - மனத்தின்கண்ணுள்ள, பேதைமை - அஞ்ஞானத்தை, அகற்று - நீக்கி மெய்ஞ்ஞானத்தை யடைந்து பரோபகாரச் செயல்களைச் செய்வாயாக.

(வி - ரை) கோவதை - இரண்டாம் வேற்றுமைத் தொகை. கோள் - கொலை. 'கோளரி' என்பதும் இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்றொக்க தொகை. திலீபன் என்பது 'திலிபன்' எனக் குறுக்கல் விகாரமாயது. 'நாதமன்னு' என்பது இரு பெயரொட்டுப் பண்புத்தொகை.

பேதைமை யகற்றி நற்காரியஞ் செய்து மேன்மை யடைந்த திலீபன் கதையாவது:—இந்தத் திலீபன் என்பவன், அம்சுமானுடைய புத்திரன்; இவன்மனைவி சுதக்ஷிணை; இவன் இவ

ளோடு கூடி அரசியற்றுங் காலத்தில், ஒரு சமயம் தெய்வலோகஞ் சென்று மனைவிமேல் விருப்பம் வைத்துத் திரும்பிவந்தான்; அப்போது இவன், வழியிலிருந்த கபிலையைப் பூசியாமல் திரும்பிவந்தானதலால், அப்போது அக்கபிலை இவனை நோக்கி, "நீ என்னைப் பூசிக்காதபடியால் உனக்குப் புத்திரப்பேறு இல்லாமற் போகக் கடவது; என்னுடைய வமிசத்தவரைப் பூசித்தாலன்றி இச் சாபந் தீராது," என்று சபித்தது; அவ்வாறு சபித்தது ஆகாய கங்கையின் அரவத்தால் இவனுக்குக் கேட்கவில்லை; அதனால் இவன் பேசாமல் வந்துவிட்டான். அந்தச் சாபத்தால் இவனுக்குப் புத்திரப்பேறில்லாமற் போயிற்று. அங்ஙனம் பிள்ளைப்பேறில்லாமற் போகவே, இந்தத் திலீபன், வசிஷ்டரைக் கண்டு, "எனக்குப் புத்திரப்பேறில்லாமற்போனதற்குக் காரணமென்ன?" என்று வினவினன். அதற்கு அவர், கபிலையின் சாபம் இவனுக் கேற்பட்டிருப்பதைக் கூறி, 'கபிலையைப் பூசித்தாற்றான் புத்திரப்பேறுண்டாகும்,' என்று சொன்னார். அப்போது இவனிடத்தில் வசிஷ்டதேனு சமீபித்தது. அதைக் கண்டவுடனே இவன், 'இதுவே நற்சகுனமாம்,' என்று அதனை அன்றுமுதல் பூஜித்துவந்தான். அங்ஙனம் பூஜித்துவருங் காலத்தில் ஒருநாள் அந்தப் பசு இமயமலைச்சாரலில் மேய்ந்துகொண்டிருக்கையில், கும்போதரன் என்னும் சிவகிங்கரன், திலீபனுடைய பக்தியைச் சோதிக்கும்பொருட்டுச் சிங்கத்தின் உருக்கொண்டு அந்தக் தேனுவைப் பிடித்துக் கொண்டான். அப்போது அப்பசு திலீபனை நோக்கி அபயமிட்டது. அதைக் கேட்டுத் திலீபமன்னன், அங்கே சென்று சிங்கத்தை வதைக்க எண்ணி அம்பிற் கைபோட்டனன். அந்தக் கையானது அம்பை யெடுக்க முடியாமல் நின்றுவிட்டது. அவ்வாறாகவே திலீபன், சிங்கத்தினிடம் சென்று, "பசுவை விட்டு என்னைக் கொன்று தின்பாயாக," என்று கூறினன். அப்போது சிங்கவடிவு கொண்டிருந்த கிங்கரன், தன்னுடைய யதார்த்த வடிவுகொண்டு, திலீபனை

நோக்கி, "அரசனே! உன்னுடைய மனதைச் சோதிக்கும் பொருட்டு நான் இவ்வாறு செய்தனன்," என்று பசுவை விட்டுச் சென்ருன். அதன்மேல் திலீபன், தேனுவை வசிஷ்டாச்சிரமத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தனன். இவன் இவ்வாறு சிங்கத்தினிடமகப்பட்ட பசுவுக்காகத் தன்னுயிர் கொடுக்கத் துணிந்ததே, பேதைமை யகற்றி உண்மை ஞானத்தோடு செய்த சிறந்த செய்கையாம். இவனுடைய புத்திரனே ஆகாயகங்கையைப் பூமிக்குக் கொண்டுவந்த பகீரதன்.

---

## "பைதலோ டிணங்கேல்."

என்பதற் கேற்ப, சிறுபிள்ளைத்தன்மையுடைய அற்பரோடு கூடினல் தீங்கு வருமென்பதை விளக்கும்

### கட்டியங்காரன் கதை.

84. சச்சந் தனைமுன் சதிகட்டி யங்காரன்
நிச்சயமாச் செய்த நிறைபிழைபார்—பொற்சிகர
தீபமெனும் புன்னைவன தீரனே யானதுகண்
டேபைத லோடிணங் கேல்.

(ப - ரை) பொன் சிகரம் - பொன்மலையின்மேலே இட்ட தீபம் எனும் - விளக்கென்று சொல்லத்தக்க புகழ்ப் பிரகாசத்தையுடைய, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, தீரனே - தைரியமிக்க புருஷனே!, (உலகத்தில் எவரும் சிறுபிள்ளைத்தன்மையுடைய அற்பரோடு கூட்டுறவு செய்யலாகாது; அங்ஙனம் செய்யின் பெருந் தீங்குண்டாம்; இதுபற்றியே ஔவையாரும், 'பைதலோ டிணங்கேல்,' என்று கூறினர்; இந் நீதியைக் கடைப்பிடியாமையால் சச்சந்தன் முன்னே அற்பனுகிய கட்டியங்காரனேடு சேர்ந்து உயிர் துறந்தான்; அங்ஙனம் கொலையுண்ட) சச்சந்தனை - அந்தச்

சச்சந்தனென்னும் மன்னனை, முன் - முற்காலத்திலே, கட்டியங் காரன் - அவனுடைய மந்திரியாகிய அற்பகுணமுள்ள அந்தக் கட்டியங்காரனென்பவன், நிச்சயமா - உறுதியாக, சதி செய்த - கொலை புரிந்த, நிறை பிழை பார் - நிறைந்த குற்றத்தை நீ ஆராய்ந்து பார்; (இதனாலேயே சிறியாரோ டிணங்கல் தீங்கா மென்பது நன்கு விளங்கும்; ஆதலின்,) ஆனது கண்டு - இவ்வாறு சச்சந்தனுக்கு நேர்ந்ததை நூல்கள் மூலம் பார்த்துணர்ந்து, (நீயும்) பைதலோடு-சிறுபிள்ளைத்தன்மையுடைய அற்பனுடனே, இணங்கேல்- நேசங் கொள்ளாதே.

(வி - ரை) 'சதிகட்டியங்காரன் நிச்சயமாச் செய்த' என்பதனை 'கட்டியங்காரன் நிச்சயமாச் சதிசெய்த' என மாற்றுக, மேருவிலிட்ட தீபம் எங்கும் பிரகாசமாகத் தெரிவதுபோல புன்னைவனநாதனுடைய புகழ் எவ்விடத்தும் பரவி விளங்குமாதலின், 'பொற்சிகரதீபமெனும் புன்னைவன தீரனே!' என்றார். பைதல் - சிறுபிள்ளை; இஃதாகுபெயராய்ச் சிறுபிள்ளைத்தன்மையுடைய மனிதனை யுணர்த்திற்று; சிறுபிள்ளைத்தன்மை - அறிவின்மை.

அற்பனாகிய கட்டியங்கார னென்னும் மந்திரியோ டிணங்கிக் கெட்ட சச்சந்தன் கதையாவது:—இந்தச் சச்சந்தன், ஏமாங்கதநாட்டிற்குத் தலைநகராகிய இராசமாபுரத்திலிருந் தரசு செலுத்திய மன்னன்; சீவகனுடைய தந்தை இவனே. இவன் தன் மனைவியாகிய விஜயை யென்பவளை மணந்தவுடன், அவள்மீது மிக்க மோகமுடையவனாய், அவளை விட்டு எப்பொழுதும் பிரியாதிருக்க விரும்பித் தன் மந்திரிகளுள் ஒருவனாகிய கட்டியங்காரனை யழைத்து, "நான் கொஞ்சகாலம் வரை என் மனைவியைப் பிரியாதிருக்கவேண்டும்; நீ இராஜகாரியங்களைப் பார்த்துக்கொள்," என்று சொல்லி, மற்ற மந்திரிகள் தடுத்துங் கேளாமல், அவனிடம்

இராஜாதிகாரத்தை ஒப்புவித்துத் தன் மனைவியுடன் அந்தப்புரத்தி லிருந்தான். அப்போது கட்டியங்காரன் இராஜ்ஜியத்தை, தான் அபகரித்துக்கொள்ள வேண்டுமென் றெண்ணிச் சேனைகளைச் சேகரித்துத் திடீரென்று ஒரு சமயம் சச்சந்தனோடு படையெடுத் தான். அச் சமயத்தில் சச்சந்தன், கருப்பமா யிருந்த தன் மனைவி யை மயில்யந்திரத்தி லேற்றி வெளியி லனுப்பிவிட்டுக் கட்டி யங்காரனோ டெதிர்த்து யுத்தம் புரிந்து முடிவில் தனிப்பட்டுக் கட்டியங்காரனா லிறந்தான். அதன்மேல், வெளியேறிச் சென்ற விஜயை வயிற்றில் சீவகன் பிறந்து கந்துகனிடம் இரகசியமாக வளர்ந்து, கட்டியங்காரன், தன் தந்தையைக் கொன்று இராஜ்ஜி யத்தை யபகரித்ததை யுணர்ந்து, அவனை வெல்லுஞ் சமயத்தை எதிர்பார்த்திருந்து பலவிதமான வீரச் செயல்களை நடத்திவர அத னால் கட்டியங்காரன் பொறாமையும் பகையு முடையவனாய் ஜீவக னைக் கொல்ல யத்தனிக்க, அவன் வேற்றுநாடு சென்று பல ஸ்திரீகளை மணந்து ஆங்காங்கே ஆச்சரியமான செய்கைகளை யெல் லாம் நடத்திவந்து முடிவில் தன் நண்பருடனே கூடிக் கட்டியங் காரனோ டெதிர்க்குஞ் சமய முணர்ந் தெதிர்த்து அவனைக் கொ ன்று தன் தந்தை இராஜ்ஜியத்தைப் பெற்றுச் சுகமாக வாழ்ந்தான்.

---

"பொருள்தனைப் போற்றிவாழ்."

என்பதற் கேற்ப, பொருளை வீண் செலவு செய்யாமல் காப்பாற்றி விருத்தி செய்யவேண்டு மென்பதை விளக்கும்

நவநிதி பெற்ற ஒருவன் கதை.

85. நவநிதிபெற் றுந்தன் னம்பாரு ளில்லார்க்
கவிழுநல்கான் காப்பா னவன்போற்—புவிதனையத்

தேன்பொழிசொற் புன்னைவன தீரனே! நீயென்றும்
வான்பொரு டனைப்போற்றி வாழ்.

(ப - ரை) புவி தழைய - பூமியானது செழித் தோங்கும் படி, சொல் தேன் பொழி - சொல்லாகிய தேனைச் சொரிகின்ற, புன்னைவன தீரனே-புன்னைவனத்திலுள்ள வீரனே!, ('பொருள் தனைப் போற்றிவாழ்,' என்று ஔவை கூறியபடி உலகத்திற் சுகத்தை யடைய விரும்புவோர், பொருளை வீண் செலவு செய் யாமல் காப்பாற்றி விருத்திசெய்து அதன்மூலம் தான தருமங் களைச் செய்து தாமும் போகங்களை யனுபவித்து வாழவேண்டும்; அங்ஙனம் வாழின் இகம் பரம் என்னும் இரண்டிடத்தும் இன்ப முண்டாகும்; இந் நீதியை அனுசரியாமல், 'நாளை வருவது யார் கண்டவர்? இருப்பதை நன்முகச் செலவு செய்து அனுபவிப்பதே கண்ட பலன்; நாம் இன்றைக் கிறந்தால் இப் பொருளை யனுபவிக் கப் போகின்றோமா?' என்று மூடஞானம் பேசிக் கையிலுள்ள பொருள்களை யெல்லாம் வரம்பின்றிச் செலவு செய்வோர் விரை வில் தரித்திரராகி ஒன்றுஞ் செய்ய வியலாமல் இம்மை மறுமைப் பயன்களை யிழந்து வருந்துவார்கள்; இந் நீதியைக் கடைப்பிடித்து, (நவநிதி பெற்றுெருவன்) நவநிதி பெற்றும் - அங்ஙனம் ஒன் பதுவகை நிதிகளை யடைந்தும், தன் நம்பர் - தன்னுடைய சிவ பெருமானது, அருள் இல்லார்க்கு - அன்பில்லாத கொடியர்க்கு, அவிழும் நல்கான் - சோறும் கொடாதவனாய், காப்பான் - தான் பெற்றிருந்த நவநிதிகளையும் காப்பவனாய் விருத்திசெய்து, அவற் றின் மூலம் தானதருமங்களைச் செய்து தானும் இன்பத்தை அனு பவித்து இம்மை மறுமைப் பயன்களை அடைபவனாயினான்; (ஆத லால்), அவன்போல் - அவனைப்போல, நீ - நீயும், என்றும் - எப் பொழுதும், வான் - சிறந்த, பொருள்தனை - பொருளை, போற்றி- வீண் செலவிடாமல் காப்பாற்றி, வாழ் - வாழ்ந்து இம்மை மறு மைப் பயன்களை யடைவாயாக.

(வி - ரை) பெற்றும் என்பதிலுள்ள உம்மை உயர்வு சிறப்புப் பொருளது. அவன் நவநிதிகளை யடைந்திருந்துங்கூட, நம்பாரு ளில்லா வீணருக்குச் சோறுமிடாமல் அவைகளைக் காப்பாற்றி நல் வழியில் வரம்போடு செலவு செய்து சுகமுற்று வாழ்ந்தானென் பது இதனுல் பெறப்படும். புவி - இடவாகுபெயர்; இது புவியி லுள்ள மனிதரை யுணர்த்தும். 'புவி தழைய' என்பதற் கேற்ப, 'சொற்றேன் பொழி, புன்னைவன தீரனே!' என்றூர்; இவ னுடைய அருள்மொழியால் உலகத்திலுள்ளவர்கள் செழிப்படை வார்கள் என்பது இதனுற் பெறப்படும். நவநிதி பெற்ருெருவன், சிவனரு ளில்லார்க்குச் சோறுங் கொடாமல் அப் பொருளைக் காப்பாற்றி விருத்திசெய்து தான தரும மியற்றி நன்மை யடைந்தா னென்பது இச் செய்யுளால் விளங்குகின்றது. எனினும், இக் கதை இன்ன நூலில் வருகிற தென்பது விளங்கவில்லை. ஆதலின் இக் கதையை வருமிடத்துக் கண்டுணர்க.

---

## "போற்றடிப் பிரியேல்."

என்பதற் கேற்ப, போற்றத்தக்க தெய்வத்தின் அடியை விலக்கலாகா தென்பதை விளக்கும்

## பிருங்கிமகாரிஷி கதை.

86. சங்கரனை யன்றியுமை தன்னைவலஞ் செய்யாமல்
பிருங்கிரிஷி மூன்றுகால் பெற்றதனுல்—துங்க
மனந்தளராப் புன்னை வனநாதா! தொண்ட
ரினம்போற் றடிப்பிரி யேல்.

(ப - ரை) துங்கம் - உயர்ச்சி பொருந்திய, மனம் - மனமா னது, தளரா - எதிலும் தளர்ச்சி யடையாத, புன்னைவனநாதா - புன்னைவனத்திற் கிறைவனே!, ('போற்றடிப் பிரியேல்,' என்று ஔவை கூறிய நீதிப்படி, போற்றத்தக்க தெய்வத்தின் அடியைப்

போற்றுமல், அதனைவிட்டுப் பிரியலாகாது; அங்ஙனம் பிரியின் தீங்குண்டாகும்; இங்ஙனம் இந் நீதியைக் கடைப்பிடியாமையால் பிருங்கிமகாரிஷி பார்வதியின் அடியைப் போற்றுமல் தேகசத்தி யிழந்து கவலை யுற்றனர். அங்ஙனம்) பிருங்கிரிஷி-அந்தப் பிருங்கி மகாமுனிவர், சங்கரனை அன்றி - சங்கரனையே வணங்கியதன்றி, உமைதன்னை உமாதேவியை, வலஞ் செய்யாமல் - வலஞ் சுற்றி அவளுடைய பாதங்களைப் பணியாமல், (தேக சத்துக் குறைந்து நடக்கமுடியாமல் சிவனருளால்) மூன்று கால் பெற்றதனுல் - மூன்று பாதங்களை யடைந்ததனுலே (நீயும், 'போற்றடிப் பிரிதல் தீங்காம்,' என்பதை யுணர்ந்து) தொண்டர் இனம் - அடியார் கூட்டமானது, போற்று - துதிக்கின்ற, அடி - தெய்வத்தின் பாதத்தை, பிரியேல் - போற்றுவதை விட்டும் நீங்காதே.

(வி - ரை) 'சங்கரனையன்றி,' என்பதற் கிடையில், வணங்கியது, என்னுஞ்சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது; முதலடியில், ('சங்கரன்' என்பதற்கு நேராக இரண்டாமடியில், 'பிருங்கி' என வந்தது ஆசிடையிட்ட வெதுகை.

**போற்றடிப் பிரிந்து கலங்கிய பிருங்கிமகாரிஷி கதையாவது**:—இந்தப் பிருங்கி மகாரிஷி மிகுந்த சிவபத்தி யுடையவர்; சிவன் சந்நிதியில் தினந்தோறும் ஆனந்தத்துடன் நடிப்பவர்; இவர் தினந்தோறும் கைலையங்கிரிக்குச் சென்று சிவபெருமானைத் தரிசனஞ் செய்து வருங்காலத்தில், ஒருதினம், சிவபெருமானை மாத்திரம் வணங்கி உமாதேவியைக் கண்டு பிரதக்ஷணஞ் செய்து வணங்காமல், வந்தனர். அதனுல், உமாதேவி கோபங்கொண்டு, இவருடைய தேகத்தில் தன்கூறுயுள்ள, உதிரமாமிசங்களைக் குறைத்துவிட்டனள். அதனுல் இவர், தேகத்தில் எலும்பு மாத்திர முடையவராய், நடக்க முடியாமல் அங்கே வருந்தி நின்றனர். அதனை யுணர்ந்து சிவபெருமான் இவர்மீ திரக்கமுற்று,

இவருக்கிருந்த இரண்டு பாதங்களோடு மற்றொரு பாதத்தையு முண்டாக்கி இவரை வருந்தாது நடக்கும்படி செய்தனர். அதன்மேல் இவர் மகா வைராக்கிய புருஷராய்ச் சிவகணங்களுள் ஒருவராயினர். இதில் ஆசிரியர், ஆத்திசூடிச் சூத்திரத்தைப் 'போற்றடிப்பிரியேல்,' என்று பிரயோகித் திருத்தலின், இதற்கேற்பப் பொருள் கூறப்பட்டது. இது, 'போற்றடிப் பரியேல்,' என்றும், 'போர்த்தொழில் புரியேல்,' என்றும் வேறிருவகையாகவும் வழங்கும். இவற்றுள், 'போற்றடிப்பரியேல்,' என்பதற்கு, 'உன்னைப் பாதுகாக்கும் பொருட்டு ஆசிரியன் அடிக்கும் அடிக்கு வருந்தாதை,' என்றும், 'போர்த்தொழில் புரியேல்,' என்பதற்கு, 'சண்டைத் தொழிலைச் செய்யாதே,' என்றும் பொருளுரைக்க வேண்டும். ஆத்திசூடி கொன்றைவேந்தன் முதலிய நூல்கள் பள்ளிப் பிள்ளைகளுக்கு உபயோகமாகும்பொருட்டே பெரும்பாலும் செய்யப்பட்டன வாதலின், இவற்றுள், பள்ளிச் சிறுவரைப் பற்றிய, 'போற்றடிப்பரியேல்,' என்பதே சிறந்ததாம். ஒளவை இங்ஙனம் சிறுவர்க்கறிவு விருத்தியாகும் பொருட்டுச் செய்த இந்நூல்களின் உட்கருத் துணராதார், சிறுவர்க்கேற்ற பொருள் கூறுதலை விடுத்து, உயர்ந்தபொருள் கூறுவதாக அபிப்பிராயப்பட்டு, ஆத்திசூடி கொன்றைவேந்தன் முதலிய நூல்களின் செய்யுட்களுக்கு, வழக்கத்துக்கு விரோதமான வெவ்வேறு பொருள்கூறித் தற்பெருமை பேசித்திரிவர்.

---

"மனந்தடுமாறேல்."

என்பதற் கேற்ப, மனந் தடுமாறுமல் எந்தக் காரியத்தையுஞ் செய்வார் மேன்மையடைவா ரென்பதை விளக்கும்

கஞ்சனூராழ்வார் கதை.

87. கஞ்சனூ ராழ்வார் கலங்கா தறஞ்செய்தே
எஞ்சாப் பரமபத மெய்தினர்பார்—தஞ்சமென்பார்

புண்ணியமா மெய்த்துணையாம் புன்னைவன பூபதியே!
எண்ணி மனந்தடுமா றேல்.

(ப - ரை) தஞ்சம் என்பார் - அடைக்கலமென் றடைந்தவர்களுடைய, புண்ணியமா - புண்ணிய வடிவமாக, (அவர்களுக்கு) மெய்த்துணையாம் - உண்மைத் துணையாகின்ற, புன்னைவன பூபதியே-புன்னைவனத்திற் கிறைவனே!, (உலகத்தில் மனிதர் நன் முயற்சிகளைச் செய்யுங்காலத்தில், பல இடையூறுகள் வரினும் அவற்றிற்கு மனந்தளராமல் அம் முயற்சிகளை நிறைவேற்றவேண்டும்; அங்ஙனம் மனந்தடுமாறுமற் செய்யின் இகத்திற் சுகவாழ்வும் பரத்தில் நற்பதவியும் கிடைக்கும்; இதுபற்றியே ஔவையும், 'மனந்தடுமாறேல்,' என்று கூறினள்; இந் நீதியைக் கடைப்பிடித்தே) கஞ்சனூர் ஆழ்வார் - கஞ்சனூராழ்வாரும், கலங்காது - மனந்தடுமாறுமல், அறம் செய்து - இல்லறம் நடத்தி, எஞ்சா - எப்பொழுதும் குறையாத, பரமபதம் - பரமபதத்தை, எய்தினர் - அடைந்தனர், பார் - இச் செய்கையை நீ ஆராய்ந்து பார், (இதனுலேயே மனந்தடுமாறு தறமியற்றுதலின் உயர்வு நன்கு விளங்கும்; ஆதலின்,) எண்ணி - இந் நீதியை நினைத்து, மனம் தடுமாறேல் - (நற்காரியங்களைச் செய்யும்போது பல இடையூறுகள் வரினும் அவற்றின் பொருட்டு) மனத்தளர்ச்சி யடையாதே, (மனவூக்கத்தோடு அவற்றைச் செய்து முடித்து நற்பயனை யடைவாயாக.)

(வி - ரை) 'தருமந் தலைகாக்கும்' என்றபடி ஒருவர் ஆபத்துக் குள்ளான காலத்தில் அவர்களுடைய புண்ணியமானது அவர்களைக் காப்பதுபோலப் புன்னைவனநாதனும் தன்னைத் தஞ்சமென்றடைந்தவரைக் காப்பாற்றுவானுதலின், 'தஞ்சமென்பார் புண்ணியமா மெய்த்துணையாம் புன்னைவன பூபதியே,' என்றார் ஆசிரியர்.

கஞ்சனூராழ்வார் மனந்தடுமாற தறஞ்செய்து பரமபதம் பெற்ற கதையாவது:—இந்தக் கஞ்சனூராழ்வா ரென்பவர் ஒரு சிறந்த பாகவதராவர்; இவர் எந்த இடையூற்றிற்கும் மனந்தடுமோ ருமல் இல்லறத்தை ஒழுங்காக நடத்திவந்தனர். அங்ஙனம் வழு வாது இல்லறம் நடத்திவந்த புண்ணிய விசேஷத்தாலே தமக்கு இருபக்கத்திலுமிருந்த இரண்டு வீட்டுடனே பரமபதம் பெற்றனர். இவர் சரித்திரம், இச் செய்யுளின் இரண்டாமடி, 'அஞ்சாமற் சைவநிலையாக்கினர் பார்,' என்றமைக்கப்பட்டிருந்ததால், இதில் ஆசிரியரால்வேறொருவிதமாகக் கூறப்பட்டிருக்குமென்பது விளங் குகின்றது. ஆயினும், முதலடி பிழையாக மாறுபட்டுப் பொருள் விளங்காம லிருந்தபடியால், அச் சரித்திரம் இன்னதென்று துணி யப்படவில்லை; ஆதலின், அபிதான சிந்தாமணியிலிருந்த இச் சரி த்திர விவரத்தை யனுசரித்து, வழுவாயிருந்த இச் செய்யுளைத் திருத்தி இங்ஙனம் பொருள் கூறினும். இதில் ஆசிரியர் கருத்தின் படி அமைக்கப்பட்டிருந்த சரித்திரத்தை விளக்கமாக அறிந்தோர், இப் பாட்டின் வழுக்களைந்து அச்சரித்திரத்துடன் தெரிவிப்பின், அவ்வாறே மறு பதிப்பில் திருத்திக்கொள்வோம்.

---

"மாற்ருனுக் கிடங்கொடேல்."

என்பதற் கேற்ப, பகைவனுக் கிடங்கொடுத்தால்
தீங்குவரு மென்பதை விளக்கும்

காகத்தின் கதை.

88. காகம் வருந்திவாக் காரிருளி னன்மைசெய்த
கூகைபகற் பட்ட கொடுமையினுல்—வாகு
புனைதாமா! புன்னைவன பூபாலா! மோச
மெனமாற்ரு னுக்கிடங்கொ டேல்.

(ப - ரை) வாகு - தோளில், புனை - அலங்கரித்துச் சூடுகின்ற, தாமா - மாலையை யுடையவனே!, புன்னைவனம் - புன்னை வனத்திலுள்ள, பூபாலா - பூமியைப் பாலிக்கத்தக்கவனே!, (பகைவன் எவ்வளவு தளர்ச்சி யடைந்துவந்தாலும் அவனுக்கிரங்கி இடங் கொடுக்கலாகாது; அங்ஙன மிடங் கொடுத்தால் ஒரு சமயத்திற் பெருந் தீங்கு நேரும்; இது குறித்தே ஒளவையும், 'மாற்றானுக் கிடங்கொடேல்,' என்று கூறினள். இந் நீதியை உணராமையால், ஒரு கூகை தன்னுடைய பகையாகிய காகத்திற் கிடங்கொடுத்து, அதனால் தன் குலத்துடனே நாசமடைந்தது. அங்ஙனம்) காகம் - தன்னுடைய பகையாகிய காகமானது, வருந்தி வர - நடிப்பாக வருத்த மடைந்து தன்னிடத்திலே வந்து சேர, கார் இருளில் - கரிய இருட்டிலே, நன்மை செய்த-அதனைத் தன்னோடு சேர்த்து அதற்கு நலம் புரிந்த, கூகை - கோட்டானனது, பகல் - பகற் காலத்திலே, பட்ட - அக்காகத்தால் அடைந்த, கொடுமையினால்- தீங்கினாலே, (நீயும்) மோசம் என - மாற்றானுக் கிடங்கொடுத்தல் மோசமா மென்றுணர்ந்து, மாற்றானுக்கு - பகைவனுக்கு, இடங் கொடேல் - எப்பொழுதும் எக்காரணத்தை முன்னிட்டும் இரங்கி இடங்கொடாதே.

(வி - ரை) கார்-கருமை என்னும் பண்புச்சொற்றிரிபு; இதில் மையீறும், நடுநின்ற உகரமும் கெட்டு ஆதி நீண்டது.

கூகையை அடுத்துக் கெடுத்த காகத்தின் கதை யாவது:—தென் தேசத்தில் மயிலை நகரத்தின் சமீபத்திலே ஒரு பெரிய ஆலமரத்தில் மேகவர்ணனென்னும் காகராஜன், தன் கூட்டங்களோடு வசித்துக்கொண்டிருந்தது. இப்படி வசித்திருக்குங் காலத்தில் பக்கத்திலுள்ள மலைக்குகையி லிருந்த உருமர்த்தனனென்னும் இராஜகோட்டான் தன் கூட்டத்துடனே இராக்காலங்களில் வந்து அந்தக் காகக் கூட்டங்களிற் புகுந்து தினந்தோறும்

பல காகங்களைக் கொன்றுவிட்டுப் போய்க்கொண்டிருந்தது. அதனால் மேகவர்ணனென்னும் காகராஜன் வருந்தி அத் துன்பத்தை நீக்கு முபாயந் தேடத் தன் மந்திரிகளுடனே யோசித்து முடிவில் தன் பிதாவின் மந்திரியாகிய சிரஞ்சீவி யென்னுங் காகத்தை வினவ, அது, 'நான் கோட்டான்களை அடுத்துக் கெடுக்கிறேன்,' என்று சொல்விக் காகக்கூட்டங்களை யெல்லாம் வேறிடஞ் செல்லும்படி அனுப்பிவிட்டுத் தான் மாத்திரம் அடிபட்டு வருந்தி மயங்கிக் கிடப்பதுபோல ஒரு பக்கத்திற் கிடக்க, கோட்டான்கள் வழக்கம்போல் வந்து பார்த்துக் காகங்களைக் காணுமையால் அங்கு மிங்குந் தேடின. அப்போது சிரஞ்சீவி கத்திற்று. அதைக் கேட்டவுடனே கோட்டான்கள் அக் காகத்தைக் கொல்லச் சென்றன. அப்போது அச் சிரஞ்சீவி தான் தன்னுடைய இனங்களால் வருத்தப்பட்ட தாகவும், கோட்டான்களோடு சேர்ந்து கொள்ள விரும்புவதாகவும் சொல்ல, உடனே கோட்டான்கள் தங்கள் அரசனுகிய உருமர்த்தனனுக்குத் தெரிவித்தன. அப்போது உருமர்த்தனன் அந்தக் காகத்தைச் சேர்த்துக்கொள்ளும் விஷயத்தைப்பற்றித் தன் மந்திரிகளிடம் யோசனை கேட்க, அதன் மந்திரிகளில் குருதிக் கண்ணன், கொடுங் கண்ணன், கொள்ளிக் கண்ணன், பிரகார நாசன் என்னும் நான்கு மந்திரிகளும், "சாம பேத தான மென்னும் மூன்றுபாயங்களைப்பற்றிக் காகத்தைக் கொல்லாமல் சேர்த்துக்கொள்ளலாம்" என்று கூறின. குரூரநாசன் என்னும் மந்திரி மாத்திரம் "தண்டோபாயம்பற்றி அதனைக் கொல்லவேண்டும்" என்று கூறிற்று. அங்ஙனங் கூறியும் உருமர்த்தனன் கேளாமல், மற்ற மந்திரிகளுடைய வார்த்தைப்படி காகத்தைத் தன்னிடத்திற் சேர்த்துக்கொண்டது. அவ்வாறு சேர்ந்தவுடன் சிரஞ்சீவி யென்னும் காகம், பலநாள் கோட்டான்களுக்கு நம்பிக்கை காட்டி அவற்றின் குகைவாயிலிலே யிருந்து தினம் ஒவ்வொரு விறகு அவ்விடத்திற் கொண்டுவந்து சேர்த்து

அவை போராகக் குவிந்தவுடனே தன்னுடைய இனங்களாகிய காகங்களிடம் சொல்லி, ஒவ்வொன்றும் ஒவ்வொரு எரிகொள்ளி கொண்டுவந்து அவ் விறகிற் போடும்படி செய்து நெருப்பை மூட்டிப் புகையைக் குகைக்குள் எழுப்பிவிட்டுக் கூகைகளை யெல்லாம் ஒரே சமயத்தில் கொன்று தன் அரசனுகிய மேகவர்ணனுக்குச் சந்தோஷத்தை யுண்டாக்கித் தன் இனங்களுடனே சுகமாக வாழ்ந்தது. இக் கதை பஞ்சதந்திரம் சந்திவிக்கிரகத்தி லுள்ளது.

---

## "மிகைபடச் சொல்லேல்."

என்பதற் கேற்ப, வரம்புகடந்து அதிகமாகப் பேசினுல் கேடுண்டா மென்பதை விளக்கும்

### சங்கராசாரியர் கதை.

89. சங்கரா சாரியனுர் தாயை யிகழ்குலத்தார்
தங்கண்மனை யேசுடலை தானுகப்—பங்கமுற்ருர்
ஆதலினுற் புன்னைவன வையனே! யாரிடத்தும்
ஏது மிகைபடச்சொல் லேலல்.

(ப - ரை) புன்னைவன ஐயனே - புன்னைவனத்திற் கிறைவனே!, (உலகத்தில் எவரும் எவரிடத்தும் அகங்காரமான வார்த்தைகளை அதிகமாகப் பேசலாகாது; அங்ஙனம் பேசின் ஒரு சமயமில்லாவிடினும் ஒருசமயம் தீங்குண்டாகும்; இதுபற்றியே ஒளவையாரும், 'மிகைபடச் சொல்லேல்,' என்று நீதி கூறினர். இந்நீதியை உணராமையால்) சங்கராசாரியனுர் - சங்கராசாரியருடைய, தாயை - அன்னையை, இகழ் - இகழ்ந்த, குலத்தார் - குலத்தினவர், தங்கள் மனையே - தங்களுடைய வீடே, சுடலைதானுக - சுடுகாடாக, பங்கம் உற்ருர் - இழிவை யடைந்தனர்; ஆதலினுல் - ஆகையால், (மிகைபடப்பேசுதல் தீங்கா மென்பதை

நீயு முணர்ந்து) யாரிடத்தும் - எவரிடத்திலும், ஏதும் - எதையும், மிகைபட - வரம்புக்கு மேற்படும்படி, சொல்லேல் - அகங்கரித்துப் பேசாதே.

(வி - ரை) சங்கராசாரியனார்-இதில் 'அன்' என்னும் ஆண்பாற் படர்க்கை விகுதிமேல் உயர்வுபற்றி 'ஆர்' என்னும் பலர்பாற் படர்க்கை விகுதி வந்தது. இங்ஙனம் ஆர் விகுதிவந்தது பால்வழுவமைதி; "உவப்பினு முயர்வினுஞ் சிறப்பினுஞ் செறலினும், இழிப்பினும் பால்திணை யிழுக்கினு மியல்பே," என்பது சூத்திரம். சுடலை தானக - இதில் 'தான்' என்பது அசை யிடைச்சொல்; ஆதலால் - இது, முன்னொன்றைச் சொல்லி அதனை மறுத்தாயினும் தழுவியாயினும் வேறொரு வினையைக் கொண்டு முடித்தற்கு இடையில் வரும் ஒருவகை யிடைச்சொல்; நஞ்சுதின்றோர் படுவர்; ஆதலால், அதனைத் தின்னலாகாது; அமுதம் பருகினோர் வாழ்வர்; ஆதலால், அதனைப் பருகலாம் என்பவை இதற்கு உதாரணமாம். இங்கே, 'இகழ் குலத்தார் பங்கமுற்றோர்; ஆதலால், மிகைபடச்சொல்லாதே' என மறுத்தற் பொருளில் வந்தது. சங்கராசாரியனார் தாயை இகழ் குலத்தார் தங்கண்மனையே சுடலையாகப் பங்கமுற்ற கதை, அபிதான சிந்தாமணி, சிறப்புப் பெயரகராதி முதலிய நூல்களிற் காணப்படவில்லை; சங்கராசாரியர் சரித்திரங்களை விரிவாகக் கூறும் வேறு நூல்களில் வரின் அங்ஙனம் வருமிடத்துக் கண்டுணர்க.

---

## "மீதூண் விரும்பேல்."

என்பதற் கேற்ப, அளவுக்கு மிஞ்சிய வுணவை விரும்பலாகா தென்பதை விளக்குதல்.

90. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ லிற்குங்
கழிபே ரிரையின்க ணோயென்—றுளமுது நூல்

வாக்கியத்தாற் புன்னை வனநாதா! முன்னயிறல்
போக்கிமீ தூண் விரும்பு.

(ப - ரை) புன்னைவனநாதா-புன்னைவனத்திற் கிறைவனே!, (உலகத்தில் மானிடர், முன்னே உண்டது சீரணமாகாதிருக்கையில் மேலும் உணவை யுண்ண விரும்பலாகாது; அங்ஙன முண்ணின் பலவித நோய்களுந் தேகத்திற் றோன்றி வருத்தும்; இது பற்றியே ஔவையும், 'மீதூண் விரும்பேல்,' என்று கூறினள். இவள் இங்ஙனங் கூறியதுமன்றி, நாயனாரும், 'முன்னே உண்ட ஆகாரம் சீரணமாகிக் குறைந்ததை யுணர்ந்து அதன்மேல் உண்பவனிடத்தில் தங்கி நிற்கும் இன்பத்தைப்போல, அளவுக்கு மிஞ்சிய வுணவுண்பவனிடத்தில் நோய் தங்கி நிற்கும்,' என்று திருக்குறளிற் கூறினர். ஆதலால், அங்ஙனம் அவராற் கூறப்பட்டு,) இழிவு அறிந்து-ஆகாரம் சீரணமாகி வயிற்றிலுண்டாம் ஆகாரக் குறைவை யுணர்ந்து, உண்பான்கண் - ஆகார முண்பவனிடத்தில் (நிலைபெற்றிருக்கும்) இன்பம்போல் - இன்பத்தைப்போல, கழி - மிகுந்த, பேர் - பெரிய, இரையின்கண் - உணவை உண்பவனிடத்தில், நோய் - பிணியானது, நிற்கும் - நிலைபெற்றிருக்கும், என்று - என்று சொல்லி, உள - என்றும் நிலைபெற்றுள்ள, முதுநூல் - பழமையான நூலாகிய திருக்குறளின், வாக்கியத்தால் - உயர்ந்த நீதி வாக்கியத்தினாலே, (மீதூண் விரும்புதல் தீங்காமென்பதை நீயு முணர்ந்து) முன் அயிறல் - முன்னே உண்ணும் ஆகாரத்தை, போக்கி - சீரணமாக்கிக் கழித்துவிட்டு, மீது - அதன்மேலே, ஊண் - உணவை உண்ண, விரும்பு - விரும்புவாயாக, (அங்ஙனம் புரியின் என்றும் உன்னிடத்தே இன்பம் நிலைத்திருக்கும்.)

(வி - ரை) 'உண்டது சீரணமாகா திருக்கையில் மேலும் உணவை யுண்டால், பலவித நோய்களு முண்டாகித் தேக சுகங் கெடும்; முன்னுண்டது சீரணமானபின் அளவறிந்துணவுண்டால்

நோயற்ற இனிமையான வாழ்வுண்டாகும்; இதுபற்றி ஔவையாரும் நாயனாரும் மீதூண்விரும்புதல் கூடாதென்று நீதி கூறியிருக்கின்றனர்; ஆதலின், நீ இந் நீதியைக் கடைப்பிடித்து முன்னுண்டதைச் சீரணமாக்கிப் போக்கிவிட்டு அதன்மேல் உணவுண்பாயாக,' என்பது இதன் கருத்து. 'உண்பான்கண் இன்பம்' என்பதற்கிடையில் 'நிலைபெற்றிருக்கும்' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டது. 'என்று' என்பதற்குப் பின் 'சொல்லி' என்னுஞ் சொல்லெச்சம் வருவித்துரைக்கப்பட்டது. கழிபேர் - ஒருபொருட் பன்மொழி; இது மீமிசைச்சொல்லென்றுங் கூறப்படும்; சிறப்புப்பற்றி இங்ஙனம் ஒரு பொருளுக்கிரு சொற்க ளடுக்கி வந்தன; 'ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழா,' என்பது சூத்திரம். இவ் வெண்பாவின் முதலடியிரண்டிலும் குறள் வெண்பாவையே ஆசிரியர் எடுத்துக் கூறியிருக்கின்றனர். "இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்குங், கழிபே ரிரையின்க ணோய்," என்பது திருக்குறள். இங்ஙனங் குறளை யெடுத்துக் கூறியதும், ஆத்திசூடி சூத்திரங்களை ஒவ்வொரு செய்யுளிலும் எடுத்துக் கூறிவருவதும், "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர்மொழியும், பொன்னேபோற் போற்றுவ மென்பதற்கும் - முன்னோரின், வேறுநூல் செய்துமெனு மேற்கோளில் லென்பதற்குங், கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்," என்னும் விதிபற்றி யென்க.

---

## முனைமுகத்து நில்லேல்."

என்பதற் கேற்ப, போர்முகத்தில் நின்றால்
தீங்குவரு மென்பதை விளக்கும்
நரியின் கதை.

91. ஆட்டுக் கடாப்போரி லன்றுதிரம் வேட்டுநரி [மலர்
மாட்டிக்கொண் டேயுயிர்போய் மாண்டதுபார்—தோட்டு

மாமருவும் புன்னை வனநாதா! வீணாக
வேமுனைமு கத்துநில் லேல்.

(ப - ரை) தோட்டு மலர் - அகவிதழ்களையுடைய தாமரை மலரி லிருக்கின்ற, மா - இலக்குமியானவள், மருவும் - சேரப் பெற்ற, புன்னைவனநாதா - புன்னைவனத்திற்குத் தலைவனே!, (உலகத்தில் எவரேனும் வேடிக்கையின் பொருட்டாவது, ஏதேனு மொன்றைப் பெற விரும்பியாவது யுத்தம் நடக்கு மிடத்தில் நெருங்கி நிற்கலாகாது; அங்ஙன நிற்பின் நிச்சயமாகக் கேடு சம்பவிக்கும்; இது குறித்தே ஔவையாரும், 'முனைமுகத்து நில்லேல்,' என்று கூறினர்; இந் நீதியை யுணராமையால் ஒரு நரி ஆட்டுக்கடாப் போரினிடையே போய் மாண்டது; அங்ஙனம்) அன்று - அன்றொருதினம், நரி-ஒரு நரியானது, உதிரம் வேட்டு- வடியும் இரத்தத்தை விரும்பி, ஆட்டுக்கடாப் போரில் - இரண்டு ஆட்டுக்கடாக்களின் சண்டையில், மாட்டிக்கொண்டு - சிக்கிக்கொண்டு, உயிர் போய் - உயிர் நீங்கி, மாய்ந்தது - இறந்த செய்கையை. பார் - நீ ஆராய்ந்து பார்; (இதனாலும் போர்முகத்து நிற்றல் தீங்கா மென்பது நன்கு விளங்கும்; ஆதலின், நீ) வீணாக - யாதொரு பயனு மில்லாமல், முனை முகத்து - போர் முகத்திலே, நில்லேல்- போய் நிற்காதே.

(வி - ரை) 'தோடுமலர்' என்பது 'தோட்டுமலர்' என ஒற்றிரட்டி வந்தது; "நெடிலோ டுயிர்த்தொடர்க் குற்றுக ரங்களுட், டறவொற் றிரட்டும் வேற்றுமை மிகவே," என்பது சூத்திரம்.

ஆட்டுக்கடாப் போரில் நரி மாட்டிக்கொண் டிறந்த கதை யாவது:—ஒரு குளக்கரையில் இரண்டு ஆட்டுக்கடாக்கள் சண்டை செய்யத் தொடங்கிப் பின் வாங்குவதும் முன்னேறிப் பாய்வதுமா யிருந்தன; அவைகள் அங்ஙனம் மாறி மாறிப் பாய்வதனாலே அக்

கடாக்களின் நெற்றியில் காய முண்டாகி உதிர மொழுகிக்கொண் டிருந்தது. அப்போது அங்கே வந்த நரியொன்று, அவைகள் சண்டை செய்வதையும், அவற்றி னெற்றியிலிருந்து உதிர மொழுகுவதையும் பார்த்து, "இக் கடாக்களோ சண்டை செய் கின்றன; இவற்றின் நெற்றியில் புதிய இரத்த மொழுகிக்கொண் டிருக்கின்றது; இவ் விரத்தம் மிகவும் உருசியாயிருக்கும்; இவை சண்டை மும்முரத்தால் இப்போது எதையும் கவனிக்கமாட்டா; ஆதலால், மெல்லச் சென்று இவற்றின் நெற்றியில் வடியும் இரத் தத்தை நக்கலாம்," என்று, அக் கடாக்கள் பாய்ச்சலுக்குப் பின் வாங்கிய சமயத்தில் அவற்றி னடுவிற் போய் ஒரு கடாவின் நெற்றியை நோக்கி வாயூற நின்றது. அஃதவ்வாறு போய் நின்று பார்ப்பதற்குள்ளாகவே கடாக்க ளிரண்டும் விசைகொண்டு பாய்ந் தன. அங்ஙனம் பாயவே நரியானது அவ் விரண்டின் நெற்றிக்கு மிடையி லகப்பட்டு நசுங்குண் டிறந்தது. இக் கதை, பஞ்சதந் திரம் மித்திரபேதத்தி லுள்ளது.

---

"மூர்க்கரோ டிணங்கேல்."

என்பதற் கேற்ப, கொடியவரோடு பழக்கஞ் செய்தால், தீங்குவரு மென்பதை விளக்கும்

விடதாரி கதை.

92. வேங்கை வரிப்புலிக்குத் தீர்த்தவிடதாரியென[டைய
ஓங்குமௌவை சொன் மூதுரைப்பொருள் பார்-பாங்கு
காமாற்றும் புன்னைவனக் காராளா! வையகத்தி
லேமூர்க்க ரோடிணங் கேல்.

(ப - ரை) காமாற்றும் - விருப்பத்தைச் செய்கின்ற, பாங் குடைய - அழகையுடைய, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள,

காராளா - வேளாளர்குல தலைவனே!, (உலகத்தில், ஔவை, 'மூர்க்கரோ டிணங்கேல்,' என்று கூறிய நீதியைக் கடைப்பிடித்து எவரும் கொடியவரோடு இணக்கஞ் செய்ய லாகாது; அங்ஙன மின்றி அவரோடு பழக்கஞ் செய்யின் அவரின் உயிர்க்கு இறுதியுண் டாம்; இங்ஙனம் செய்த விடதாரி யொருவன் முற்காலத்தில் உடனே உயிர் துறந்தான்; இக் கதையை அடக்கி) ஓங்கும்-அறிவா லுயர்ந்த, ஔவை - மேற்கூறிய ஔவையாரே, "வரி - கீற்றுக் களையுடைய, வேங்கைப் புலிக்கு - வேங்கையாகிய புலிக்கு, தீர்த்த-விஷத்தை நீக்கிய, விடதாரி என-விஷவைத்தியன்" என்று, (முதலிற் ருெடங்கி) சொல் - சொல்லிய, மூதுரை - மூதுரைச் செய்யுளின், பொருள் - அருத்தத்தை, பார் - நீ ஆராய்ந்துபார்; (இதனுல், இக் கதை நன்கு விளங்கும்; ஆதலால், இக்கதையினுலும் மேற்கூறிய ஆத்திசூடிச் செய்யுளாலும் மூர்க்கரோ டிணங்குதல் தீங்கா மென்பதை நன்குணர்ந்து) வையகத்தில் - இப் பூவுலகில், மூர்க்கரோடு - ஆங்காரமுடைய கீழ்மக்களோடு, இணங்கேல் - நீ இசைந்து சிநேகங் கொள்ளாதே.

(வி - ரை) வேங்கைப்புலி - இருபெயரொட்டுப் பண்புத் தொகை. 'புலிக்குத் தீர்த்த' என்பத னிடையில் 'விஷத்தை' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவித் துரைக்கப்பட்டது. 'வேங்கை வரிப்புலி' என்பதை, 'வரி வேங்கைப்புலி' என மாற்றுக. 'மூதுரை' என்பதற்குப் 'பழமையான சொல்' என்பது பொருள்; இங்கே இச் சொல்லின் பெயர், வாக்குண்டாம் என்னும் செய்யு ளுக் காயினமையின் இஃது இருமடியாகுபெயர். 'காம் ஆற்றும்' - 'காமாற்றும்' என வந்தது. காம் - காமம் என்னும் உரிச்சொற் றிரிபு; அம்மீறு கெட்டு நின்றது. 'மூதுரைப் பொருள்பார்' என்ப தற்குப் பின், 'இதனுல் இக் கதை நன்கு விளங்கும்' என்பது முதலிய வாக்கியத் தொடர்கள் இசை யெச்சமாக வருவித்துரைக்

15

கப்பட்டன. 'வேங்கை வரிப்புலிக்கு' என்னும் மூதுரைச் செய்யுளில் மூர்க்கரோ டிணங்கலாகா தென்பதை வற்புறுத்தும் விடதாரி கதை அடங்கியிருப்பதால், 'வேங்கை வரிப்புலிக்குத் தீர்த்த விட தாரியென, ஒங்குமெளவை சொன்மூ துரைப்பொருள் பார்,' என்றதனுலேயே, மூர்க்கரோ டிணங்கல் ஆகாது என்னும் விஷயத்தைக் கூருமற் கூறி விளக்கிக் காட்டினர் ஆசிரியர்; இதனுலேயே இப்பொருட் கேற்ற வாக்கியத் தொடர்க ளெல்லாம் மேற்கூறியபடி வருவித் துரைக்கப்பட்டன. விடதாரி கதை அடங்கின வேங்கை வரிப்புலி' என்னும் மூதுரைச் செய்யுளாவது:—

"வேங்கை வரிப்புலிக்குத் தீர்த்த விடதாரி
ஆங்கதனுக் காகார மானற்போல்—பாங்கறியாப்
புல்லறி வாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மே விட்ட கலம்." என்பதாம்.

இக் கதையிற் கூறியபடி வேங்கைப் புலிக்கு விடந் தீர்த்து மாண்டொழிந்த விடதாரியின் கதையாவது:—"ஒரு காட்டில் ஒரு வேங்கையானது விஷத்தால் மயங்கிக் கிடக்க, அதனை ஒரு விஷவைத்தியன் பார்த்து, மனதிரங்கி அவ் விஷத்தைத் தீர்த்து, அதனை யெழுப்பிவிட்டான். உடனே அது, தன் குலவியற்கைப் படி அவனை அடித்துக் கொன்றது," என்பதாம். இக் கதை இன்ன நூலில் வருகிற தென்பது விளங்கவில்லை. ஆயினும், இதே போன்ற வேருெரு கதை இதிற் சிறிது மாறுபட்டு, பஞ்ச தந்திரம் அசம்பிரேக்ஷியகாரித்துவத்தில் வருகின்றது. அக் கதையாவது:—

"துளசாபுரி யென்னும் நகரத்தில் நான்கு மாணக்கர்கள் ஒரு பள்ளிக்கூடத்திற் கல்விபயின்று வந்தார்கள்; அவர்களுள் மூவர்

மந்திர வித்தையிற் றேர்ச்சி யடைந்தார்கள்; அங்போது அவர்களுள் ஒருவன், 'நாம் வெளியேறி நம் மந்திர வித்தையைக் காட்டிப் பொருளீட்டுதலே நாம் வித்தை கற்றுக்கொண்டதற்குப் பிரயோசனமாம்,' என்று கூற, அப்படியே எல்லோரும் புறப்படத் தொடங்கினார்கள். அச் சமயத்தில், மற்றொருவன், 'மந்திர வித்தையிற் றேரா திருந்தவனை விலக்கிவிட்டுச் செல்லவேண்டும்,' என்றான். அதைக் கேட்டு, மற்றவர்கள், 'அது சரியன்று; அவன் நம்மோடு சேர்ந்தவனுயும் உலகவியல் தெரிந்தவனுயு மிருக்கின்றானதலின் அவனையும் அழைத்துச் செல்லவேண்டும்,' என்றார்கள். அதன்மேல் எல்லோரு மிணங்கி அவனையும் அழைத்துக்கொண்டு போனார்கள். அப்படி அந் நால்வரும் செல்லும்போது காட்டில் ஒரு சிங்கம் இறந்து கிடந்தது. அதைக் கண்டவுடன் மந்திரவித்தை கற்ற மூவரும், 'நாம் கற்ற வித்தையை இப்போது பரிசோதிக்க வேண்டும்; இந்தச் சிங்கத்தை எழுப்பிவிட்டு நம் மந்திர வன்மையைப் பார்ப்போம்,' என்று அதை யெழுப்பப் போனார்கள். அப்போது அவர்களால் தாழ்மையாகக் கருதப்பட்ட உலகவியல் தெரிந்தவன் 'அது கூடாது; அதனால் நமக்கபாயம் வரும்,' என்று கூறி அவர்களைத் தடுத்தான். அவ்வாறு தடுத்தும் அவர்கள் கேளாமல் அதனை யெழுப்ப மந்திரப் பிரயோகஞ் செய்தார்கள். உடனே உலகவியல் தெரிந்தவன் அவர்களோடிராமல் ஒரு பெரிய மாத்தின்மே லேறிக்கொண்டான். அவர்கள் அவ்வாறு மந்திரப் பிரயோகஞ் செய்யவே சிங்கமெழுந்து அம் மூவரையுங் கொன்று சென்றது. பின்பு உலகவியல் தெரிந்தவன் ஊர்போய்ச் சேர்ந்தான்." என்பதாம். இக் கதைகள் ஒன்றிற்கொன்று சிறிது விகற்பப்படினும் கருத்து ஒன்றேயாம். ஆதலின், எதையேனும் உதாரணமாக எடுத்துக்கொள்க.

---

"மெல்லினல்லா டோள்சேர்."

என்பதற் கேற்ப, இளையாளைக் கூடவேண்டு மெனல்.

93. போதவே நற்குணங்கள் போந்துந் தனைமூத்த
மாதரின்பந் தீதே மனுநெறிபார்—ஆதலினால்
துய்யபுகழ்ப் புன்னைவனச் சோமா! இளையாளாஞ்
செய்யமெல்லி னல்லாடோள் சேர்.

(ப - ரை) துய்ய - பரிசுத்தமாகிய, புகழ் - கீர்த்தியை யுடைய, புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, சோமா - பிரகாசத்திலும் குளிர்ச்சி செய்வதிலும் சந்திரன் போன்றவனே!, (உலகத்தில் இல்லறத்தி லிருந்து வாழ்வோன் தனக்கிளையாளாகிய மனைவியோடு கூடி வாழவேண்டும்; அங்ஙனம் வாழின் அவர்க்குத் தேகசுகமும் செல்வமும் புகழும் பெருகும். அவ்வாறின்றித் தனக்கு மூத்தவளைக் கூடினால், தேகவனப்புக் குறையும்; பல நோய்க ளுண்டாம்; ஆயுள் குறையும்; அவள் தனக்கடங்கி நடக்காமையாற் புகழு மின்றாம். இதுபற்றியே ஒளவையாரும், 'மெல்லிய (அதாவது இளமையான) இல்லாளாகிய பெண்ணோடு சேர்,' என்று பொருள்படுமாறு, "மெல்லினல்லாடோள் சேர்," என்று கூறினர். இந் நீதிப்படி மூத்த மாதர்களினிடத்தில், சகல நற்குணங்களும் பொருந்தியிருந்தாலும், அங்ஙனம்) போத - திருப்தியாக, நற்குணங்கள் - நல்ல குணங்களெல்லாம், போந்தும் - அவளிடம் பொருந்தியிருந்தும், தனை மூத்த - தனக்கு மூத்த, மாதர் - அப் பெண்களுடைய, இன்பம் - சேர்க்கை யின்பமானது, தீதே-தீங்கேயாம்; மனு நெறி-மனுதரும சாஸ்திரத்தையும், பார் - ஆராய்ந்து பார், (அதுவும் இங்ஙனம் மூத்த மாதரைக் கூடுதல் கூடாதெனப் பகரும்); ஆதலினால் - ஆகையினாலே, (நீ இந் நீதியை யுணர்ந்து மூத்த மாதரைக் கூடுதலை விலக்கி, இளையாளாம் - உனக் கிளையவளாகிய, செய்ய - செவ்விய, மெல் -

மெல்லிய, இல் - இல்லாளாம், நல்லாள் - நல்ல பெண்ணினுடைய தோள் - தோள்களை, சேர் - கூடுவாயாக.

(வி - ரை) போந்து - இறந்தகால வினையெச்சம்; இதில், புகு என்னு மேவற் பகுதியின் விகாரமாகிய போ - பகுதி, த் - சந்தி, த்-இறந்தகால இடைநிலை, உ - வினையெச்ச விகுதி; சந்தியால் வந்த தகர வல்லொற்று விகாரத்தால் நகர மெல்லொற்ருகப் 'போந்து' என்ருயது; இதிலுள்ள உம்மை உயர்வுசிறப்புப்பொருளது. தனக்கு என்பது 'தனே' என வந்தது உருபுமயக்கம். 'போதவே நற்குணங்கள் போந்துந் தனைமூத்த, மாதரின்பந் தீதே,' என்பதற் கேற்ப, முன்னே பல விஷயங்கள் இசையெச்சமாக வருவித்துரைக்கப்பட்டன. சோமன் - உவமையாகுபெயர்; புன்னைவனநாதன் சந்திரனைப் போன்ற பிரகாசமும் குளிர்ச்சியுமுடையவனுதலின், அவனை இங்ஙனம் 'சோமன்' என்ருர் ஆசிரியர். ஆத்திசூடிச் செய்யுளில், 'மெல்' என்பது இளமையை விளக்கும். இல் - மனை; இஃதிடவாகுபெயராய் அதற்குரிய பெண்ணையுணர்த்திற்று. மனைவி இளையவளா யிருந்தால், அவள் கணவனுக்கடங்கி நடப்பாளாதலின் இல்வாழ்க்கையில் திருப்தி யுண்டாம், அவளுடைய தேகதத்துவங் கெடாதிருக்குமாதலின் அவனுக்குத் தேகவனப்பும், நோயின்மையும், ஆயுள் விருத்தியு முண்டாம். மூத்தவளா யிருப்பின், அவள் கொண்டவனுக் கடங்காளாதலின் இல்வாழ்க்கையில் எப்பொழுதும் அதிருப்தியாகவே யிருக்கும்; அவளுடைய உடம்பின் தன்மை கெட்டிருக்கு மாதலின் நாயகனுக்கு அழகின்மையும், பிணியும், ஆயுட் குறைவு முண்டாம். இதுபற்றியே மனுதர்ம சாஸ்திரம், "இளையமாதரைக் கூடுதல் தகும்" என்றும், "மூத்த மாதரைக் கூடுதல் தகாது" என்றும் கூறுகின்கின்றன. ஆதலின், இளையமாதரோடு கூடி இல்வாழ்க்கை நடத்துதலே சிறந்ததாம்.

---

## "மேன்மக்கள் சொற்கேள்."

என்பதற் கேற்ப, உயர்ந்தோர் வார்த்தை கேட்பதால்
நன்மை யுண்டாமென்பதை விளக்கும்

### தசரதன் கதை.

94. ஆசிரியன் சொற்கேட்ட வன்றே தசரதனுர்
கோசிகன்பால் ராகவனைக் கூட்டியதாற்-றேசுபெற்ருர்
நாட்கமலைப் புன்னைவன நாதமகி பா! தருமங்
கேட்கின்மேன் மக்கள்சொற் கேள்.

(ப - ரை) நாள் - அன்றலர்ந்த, கமலை - தாமரைப் புஷ்பத்தில் வீற்றிருக்கின்ற இலக்குமி சேர்க்கையையுடைய, புன்னைவனம் - புன்னைவனத்தி லிருக்கின்ற, நாத மகிபா - தலைவனுகிய அரசனே!, (உலகத்தில் கீர்த்தியை அடைய விரும்புவோர் உயர்ந்தோருடைய வார்த்தையைக் கேட்டு அதன்படி நடக்கவேண்டும்; அங்ஙன நடப்பின் என்று மழியாப் புக ழுண்டாம்; இது குறித்தே ஔவையும், 'மேன்மக்கள் சொற்கேள்,' என்று கூறினள். இந் நீதியை அனுசரித்துப் பெரியோர் சொற்கேட்டு நடக்கத்தொடங்கி) தசரதனுர் - தசரதசக்கரவர்த்தியும், ஆசிரியன் - தம் குருவினுடைய, சொல் - வார்த்தையை, கேட்ட அன்றே - கேட்ட அப்பொழுதே, ராகவனை - தம்முடைய புத்திரராகிய இராமரை, கோசிகன்பால் - விசுவாமித்திர முனிவனிடத்தே, கூட்டியதால் - சேர்த்ததனுலே, தேசு பெற்ருர் - என்று மழியாக் கீர்த்தியை அடைந்தனர்; (ஆதலால், நீ இந் நீதியை யுணர்ந்து) தருமம் கேட்கின் - புகழுண்டாகும் தருமகாரியங்களைக் கேட்கப்புகுந்தால், மேன்மக்கள் - உயர்ந்தோருடைய, சொல் கேள் - வார்த்தையைக் கேட்டு அதன்படி நடந்து புகழை அடைவாயாக.

(வி-ரை) நாதமகிபன்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

தசரதர் ஆசிரியர் சொற் கேட்டு இராமரை விசுவாமித்திரரிடம் அனுப்பிய கதையாவது:—விசுவாமித்திரர் தவமியற்றுங் காலத்தில் அவருக்கு இராக்ஷதருடைய உபத்திரவம் அதிகமாயிருந்தது. அதனால், அதனை நீக்கிக்கொள்ளக் கருதி, அவர் தசரதர்பாற் சென்று தம்முடைய தவத்திற்குக் காவலா யிருக்கும் பொருட்டு இராம லக்குமணரைத் தம்முடன் அனுப்பும்படி வேண்டினர். அப்போது தசரதருடைய குருவாகிய வசிஷ்டரும் அவ்வாறே அவர்களை யனுப்பும்படி அந்தத் தசரதருக்குக் கூறினர். அந்த வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் தசரதன், இராமரையும், இலக்குமணனையும் விசுவாமித்திரருடன் கூட்டியனுப்பினர். அவர்கள் அவருடன் சென்று அவருடைய தவத்திற் கிடையூறு வராமல் காவல் புரிந்து இராக்ஷதருடைய ஹிம்சைகளை நீக்கி அந்த விசுவாமித்திரரிடம் வேண்டிய நன்மைகளை யடைந்தனர். அவ்வாறு தசரதர் தம் மைந்தரை, ஆசிரியர் சொற்படி விசுவாமித்திரர் பால் அனுப்பியபடியால் என்று மழியாப் புகழ் பெற்றனர்.

---

## "மைவிழியார் மனையகல்."

என்பதற் கேற்ப, பரத்தையரின் உறவை நீக்காது கொள்ளின் தீங்குவரு மென்பதை விளக்கும்

## விப்பிரநாராயணர் கதை.

95. விப்பிரநா ராயணன்முன் வேசிதன்மே லாசையினல்
இப்புவியிற் கட்டுண் டிழுக்குற்ருன்—தப்பலவே
சைவநெறிப் புன்னைவனத் தாடாளா! எந்நாளும்
மைவிழி யார்மனை யகல்.

(ப - ரை) சைவநெறி - சைவமார்க்கத்தையுடைய, புன்னைவனம் - புன்னை வனத்திலுள்ள, தாடாளா - நன்முயற்சியையுடையவனே!, (உலகத்தில் உள்ளன்பில்லா வேசி நேயத்தை

விரும்புவார்க்குப் பல வழியிலும் தீங்கே யுண்டாகும்; ஆதலின், அவ ருறவை அடியோ டொழித்தல் வேண்டும்; இதுபற்றி ஔவை யாரும், 'மைவிழியார் மனையகல்,' என்று கூறினர். இந் நீதியை உணராமல்) விப்பிரநாராயணர் - விப்பிரநாராயண ரென்பவர், முன் - முன்னே, வேசிதன்மேல் - பரத்தையின்மீது, ஆசையினால் - விருப்பம் வைத்ததனாலே, இப்புவியில் - இவ் வுலகத்தில், கட்டுண்டு - கட்டுப்பட்டு, இழுக்குற்றார் - தாழ்வடைந்தார்; தப்பல்ல - இது தவறன்று (அதாவது பொய்யன்று); (ஆதலின், இதன் மூலம், நீ தாசியுறவு கொள்வது தீங்காமென்பதை யுணர்ந்து) எந்த நாளும்-எத்தினத்திலும், மை விழியார் - அஞ்சன மெழுதப்பெற்ற கண்களையுடைய பரத்தையரது, மனை அகல் - வீட்டிற்குச் செல்வதை விட்டு நீங்குவாயாக.

(வி - ரை) தப்பு - தவறு; இஃதிங்கே பொய்யை யுணர்த்திற்று. குலமகளிர் சிறப்பு நடக்குங் காலங்களில் மாத்திரம் ஒவ்வொரு சமயம் மையணிவாராதலானும், பிறரை மயக்குதற் பொருட்டுத் தினந்தோறும் மையணிதல் பரத்தையர்க்கே உரிய வழக்க மாதலானும், இங்கு, 'மைவிழியார்' என்றது குலமகளிரைக் குறிக்காது பரத்தையரையே குறித்தது. இன்னும் அவர்கள் ஓராடவனுக்குள் ஐக்கியமாவதின்றிச் சுயேச்சையாக வீட்டிற் குரியராய் வாழ்தல் இயற்கையாதலின், 'மைவிழியார்மனை,' என்ற குறிப்பினாலும் பரத்தையரே யென்பது தேற்றமாம். அரசன்மனை, கொற்றன்மனை, சாத்தன்மனை யென்று ஆடவர்க்கு மனைமுதலியவற்றை உரிமையாக்கிக் கூறுதல் மரபேயன்றி, அரசன்றேவிமனை, சாத்தன்றேவிமனை யென்று குலமகளிர்க் கதனை உரிமையாக்கிக் கூறுதல் வழக்கின்று. விப்பிரநாராயணன் என்னும் பெயர் தொண்டரடிப்பொடியாழ்வார்க் குரிய நாமமாம். இவர் சரித்திரம் ஒவ்வொரு நூலிலும் ஒவ்வொரு விதமாக வருகின்றது.

அபிதானசிந்தாமணியில் வருவதாவது :—“இந்தத் தொண்டரடிப்பொடியாழ்வா ரென்பவர், கலியுகம், உ௦அசு பிரபவவருஷம், மார்கழிமீ, கிருஷ்ணபக்ஷம், சதுர்த்தசி, செவ்வாய்க்கிழமை கேட்டை நக்ஷத்திரத்தில், திருமண்டங்குடியில், ஸ்ரீ வைஷ்ணவராகிய ஒரு புரச்சூட ரென்பவருக்குப் புத்திரராக அவதரித்தவர்; இவர் அங்ஙனம் உற்பவித்து விப்பிரநாராயணர் என்கிற நாமம் பெற்று, கல்விகற்று, திருவரங்கத்தில் அரங்கநாயகருக்குத் திருமாலை கட்டும் கைங்கரியம் செய்துகொண்டு பெண்ணையும் ஆணுகப் பாவிக்கு மியல்புடையவராய்ச் சம்சார பந்தத்தி லகப்படாமலிருந்தனர். இவர் இப்படி யிருத்தலைப் பிராட்டியார் கண்டு, ‘பெண்ணையு மாணுகப் பாவிக்கும் இவரை மாயை என்ன செய்யும்?’ என்று பெருமானிடம் வினவ, அவர், ‘இவர் இப்படி யிருந்தாலும் பெண் மாயையைக் கடத்தல் இவரால் முடியாது; அதனை யுனக்குக் காட்டுகிறேன்,’ என்று இவரை மயக்கும் பொருட்டு, தேவதேவி யென்னும் தாசியை ஏவினர். அவள் அவ்வாறே சென்று இவரை மயக்க, இவர் எவ்விதத்தாலும் மயங்காதவராயினர். அதுகண்டு அவள், தானும் பெருமாளுக்குக் கைங்கரியம் செய்பவளாய் இவருட னிருந்தனள். இப்படி யிருக்கும் போது ஒருநாள் நல்ல மழை பெய்து தேவதேவியை நனைத்து விட்டது. அப்போது இந்தத் தொண்டரடிப்பொடி யாழ்வார் அவர்மீ திரக்கமுற்று அவளைத் தம்முடைய பர்ணசாலைக்குள் அழைத்துக் குளிர் காயும்படி செய்தனர். அங்ஙனம் அவள் குளிர் காய்ந்துகொண்டிருக்கும்போது இவர் அவளுடனே விருப்புடனே கூடி அவளை விட்டுப் பிரிய மன மிசையாதவரா யிருந்தார். அச் சமயத்தில் பெருமாள் பிராட்டியாருக்குக் காட்டினர். அதன் மேல், பிராட்டியார், இவரை அம் மாய்கையினின்றும் மீட்கும்படி வேண்டினர். அவ் வேண்டுதலுக் கிசைந்து பெருமாள் திருக்கோவில் பொன்வட்டிலை அந்தத் தாசியுடைய வீட்டிற் சேர்த்தனர்.

அப்போது அப் பொன்வட்டில் காணமற் போகவே, கோவிற் பரிசாரகர் தேடி, அது, தேவதேவியின் வீட்டி லிருப்பதை யுணர்ந்து, 'இஃ தெவ்வா றிங்கே வந்தது?' என்று வினவ, அவள், 'விப்பிரநாராயணர் இதனைக் கொடுத்தனர்,' என்றனள். அவர்கள் கோவிலதிகாரியிடம் இச் செய்கையைத் தெரிவிக்க, அந்த அதிகாரிகள் விப்பிரநாராயணர்மீது கோபங்கொள்ள, அச் சமயத்தில் பெருமாள், அர்ச்சகரிடம் ஆவேசித்து, 'இக் காரியத்தை நாமே செய்தோம்,' என் றுரைத்தனர். அதைக் கேட்டுக் கோவிலதிகாரிகள் அடங்கினர். பின்பு அந்தத் தொண்டரடிப்பொடியாழ்வார் விசனமுற்றுப் பாகவத தீர்த்தங்கொண்டு பெருமானைத் தொழுது நின்றனர். அப்பொழுது பெருமாள், 'தொண்டரடிப்பொடி,' என்று இவரை யழைத்துக் கடாக்ஷித்தனர். அதன்மேல், இவர், திருமாலை, திருப்பள்ளியெழுச்சி ஆகியவை அருளிச்செய்து, 105 திருநக்ஷத்திர மெழுந்தருளியிருந்து திருநாட்டுக் கேகினர்,'' என்பதாம்.

சிறப்புப்பெயரகராதியில்வருவதாவது:—''தொண்டரடிப்பொடியாழ்வார், சோழமண்டலத்தில் மண்டங்குடியிலே புரகூடனென்னும் அந்தணன் மகனாக அவதரித்த விஷ்ணு பக்தர்; இவர் வனமாலிகாம்சரெனக் குருபரம்பரை கூறும். இவர், பெருமாளுக்குப் புஷ்ப கைங்கரியஞ் செய்து வருகையில் இரண்டு தாசிகள் விவாதங்கொண்டு இவரை மயக்குவதாகச் சபதஞ் செய்து அவர்களுள் ஒருத்தி பலவாறு ஊழியம் புரிந்துவந்தனள். அங்ஙன மவள் புரிந்து வரும்போது இவர் அவள் மாயையில் மயங்கி அவளைக் கூடிச் சின்னாளிருந்து பின்னர் அவளால் வெறுக்கப்பட்டு வருந்தி விஷ்ணுமூர்த்தி யளித்த பொற்பாத்திரத்தால் மீண்டும் அவளோடு கூடி விரக்தியுற்றுப் பண்டைய தொண்டு புரிந்து முத்தியடைந்தனர்,'' என்பதாம்.

இவ் விரண்டு வகையுள்ளும், இச் செய்யுளில் கூறுகிறபடி இவர் கட்டுண்டு வருந்தினரென்ற செய்தி வரவில்லை. தாசியால் மயங்கி முன்னிருந்த தம்மியல்பு குன்றினரென்பது மாத்திரம் புலப்படுகின்றது. இவற்றில் வரும் விஷயங்கள் எவ்வாறிருப்பினும், இவர் தாசியால் மயங்கின ரென்ற விஷயம் இரண்டிலும் வருதலால், இவ்விரண்டு வகைச் சரித்திரங்களும் இச் செய்யுட்குப் பொருந்துமெனக் கொள்க. குருபரம்பரை முதலிய வேறு நூல்களில் இவர் தாசியால் கட்டுண்ட கதை காணப்படின் அதனை இச்செய்யுட் கருத்துக்குப் பொருத்திக்கொள்க. நம் நூல்களுள் இத்தகைய சரித்திரங்கள் ஒரேவிதமாக இல்லாமல் பல விகற்பங்களாகக் காணப்படுதல் அறிவுடையோர் மிகவும் விசனிக்கத்தக்கதே. இங்ஙனம் பலரும் பலவிதமாக எழுதி வைத்திருப்பதற்குக் காரணம் புலப்படவில்லை.

---

## "மொழிவ தறமொழி."

என்பதற் கேற்ப, சொல்லும் வார்த்தையைத் தருமத்தோடு கூடியதாகவே உரைக்கவேண்டு மென்பதை விளக்கும்

### புருஷாதி மிருகத்தின் கதை.

96. வீமனுட லிற்பாதி மெய்வழக்கிற் றோர்ந்துபுரு
டாமிருகத் தின்பங்கென் றுர்தருமர்—ஆமவர்போல்
பூமியெலாங் கொண்டாடும் பொய்யாத புன்னைவன
மே!மொ ழிவதறமொ ழி.

(ப - ரை) பூமி எல்லாம் - இவ் வுலகத்திலுள்ளவர்களெல்லோரும், கொண்டாடும் - துதிக்கின்ற, பொய்யாத - தன் வார்த்தை தவறாத, புன்னைவனமே-புன்னைவனத்திலுள்ள நாதனே!, ('மொழிவ தறமொழி,' என்று ஒளவை கூறிய நீதிக்கேற்ப, மனித

ராயினர், வழக்குத் தீர்க்கும்போதும் மற்றையவிடத்தும், சொல்வதைத் தருமமாகவே சொல்லவேண்டும்; அங்ஙனங் கூறி அறத்தைத் தேடின் என்றும் அழியாப் புகழ் நிலைநிற்கும்; இந் நீதியையனுசரித்து) தருமர் - தருமபுத்திரர், (வீமனை, புருஷாமிருகம் தொடர்ந்துவந்த காலத்தில் வழக்குப் பேசிப் பாரபக்ஷமில்லாமல்,) மெய் வழக்கில்-அந்த மெய்யான நியாயம் பேசுதலிலே, தேர்ந்து - நியாயத்தை ஆராய்ந்து தெளிந்து, (நியாயப்படி) வீமன் உடலில் பாதி - வீமனுடைய தேகத்திற் பாதிப்பாகம், புருடாமிருகத்தின்-புருஷாதிமிருகத்தினுடைய, பங்கு என்றார்-பாகம் என்று கூறிப் புகழடைந்தார்; (இதனாலே நீயும் மொழிவ தறமொழிய வேண்டுமென்னும் நியாயத்தை யுணர்ந்து) ஆம் அவர்போல் - அங்ஙனம் தர்மிஷ்டராகிய அவர்போலவே, மொழிவது - சொல்வதை, அறம் - தருமமாகவே, மொழி - என்றும் மொழிந்து கீர்த்தியடைவாயாக.

(வி - ரை) பூமி - இடவாகுபெயர்; அதிலுள்ள மனிதரைக் குறித்தது. புன்னைவனம்-இதுவும் இடவாகுபெயர்; புன்னைவன நாதனை யுணர்த்திற்று. அறமென்பதும் ஆகுபெயராய் அதனோடு கூடிய வார்த்தையை யுணர்த்திற்று.

புருஷாதி மிருகத்தின் கதையாவது:—தருமபுத்திரர் ஒரு சமயம் தம்முடைய யாகத்திற்கு, புருஷாமிருகத்தை அழைத்து வரும்படி வீமனை யனுப்ப, அவன் போய் அதனை அழைத்தனன். அப்போது அந்தப் புருஷமிருகமானது, வீமனை நோக்கி, "நீ, நான் புறப்படுவதற்குமுன் நாற்காதவழி முன் தள்ளிச் செல்ல வேண்டும்; அதன்மேல் நான் உனக்குப் பின்னே தொடர்ந்து வருவேன்; அப்படித் தொடர்ந்து வருங்காலத்தில் எனதெல்லைக்குள்ளாகவே நீ என்னிட மகப்பட்டுக் கொள்வாயானால் உன்னை நான் பக்ஷித்துவிடுவேன்; அவ்வாறு நீ அகப்படாமல் உன்னெல்

லேக்குப் போய்விடுவாயானால், நான் உன்னையொன்றுஞ் செய்யா மல் உனக்குப் பின்னே வந்து உன்னிஷ்டத்தை நிறைவேற்று வேன்,'' என்று சொல்ல, வீமன் அதற்கிசைந்து, அவ்வாறு நாற்காதவழி முன்னே சென்றான். அதன்மேல் புருஷாமிருகம் பின்னே தொடர்ந்தது. அங்ஙனம் தொடர்ந்த அது சிறிது நேரத் திற்குள் அவனைச் சமீபித்துவிட்டது. அவ்விதம் நெருங்கவே வீமன், ஆபத்தை நீக்கிக்கொள்ளும்பொருட்டு மந்திர பலத்துடன் தான் வைத்திருந்த எழு பருக்கைக் கற்களுள் ஒன்றைக் கீழே போட்டான்; அது விழுந்த விடத்தில் ஒரு சிவாலயமும், தீர்த்த மும் உண்டாயிற்று. அந்தப் புருஷாமிருகமானது, சிவாலயங் கண்டவிடத்தில் சிவதரிசனஞ் செய்யாமல் போவதில்லை யாத லால், அது, அந்தச் சிவாலயத்தைக் கண்டவுடனே, தீர்த்தத் தில் ஸ்நானஞ் செய்து கோவிலை வலம்வந்து சிவனைத் தரிசிக்கத் தொடங்கிற்று. அது சிவதரிசனஞ் செய்து வருவதற்குள், வீமன் நெடுந்தூரம் போய்விட்டான். அவ்வாறு சென்றும், புருஷாமிரு கம் சீக்கிரம் சிவதரிசனம் செய்துவிட்டு வீமனை நெருங்கிவிட்டது. அப்போது அவன் ஒரு கல்லைப் போட்டான். முந்தினபடியே கோவிலும் தீர்த்தமு முண்டாக அது சிவதரிசனம் செய்துவந்தது. இப்படியே வீமன் அது நெருங்கும்போதெல்லாம் ஒவ்வொரு கல் லைப் போட்டுத் தந்திரமாக அதன் கையி லகப்படாமல் ஓடி முடி வாக எழாவது கல்லைப்போட்டுவிட் டோடும்போது அந்த மிருகம் சமீபித்துவிட்டது. அங்ஙனம் சமீபித்த சமயத்தில், வீமனுடைய ஒரு பாதம் தன்னுடைய எல்லையிலும், மற்றொரு பாதம் புருஷா மிருகத்தின் எல்லையிலு மிருக்கும்போது அந்த மிருகம் அவனைப் பிடித்துக்கொண்டது. அப்போது வீமன், ''நான் என்னுடைய எல்லைக்கு வந்துவிட்டேன்; நீ இப்போது பிடித்தபடியால் உன்னு டைய சொற்படி செய்ய முடியாது,'' என்று சொல்ல, மிருகம், ''என்னுடைய எல்லையிற்றான் பிடித்தேன்,'' என்று தர்க்கமிட்

டது. இவ்வாறு வீமனுக்கும் மிருகத்திற்கும் வழக்குண்டாகவே, அம் மிருகம் வீமனுடனே சென்று தருமபுத்திரரிடம் தன்னுடைய வழக்கைத் தெரிவித்தது; வீமனும் தெரிவித்தான். தருமர் வீமனுடைய வாய்மொழியையும், மிருகத்தினுடைய வார்த்தையையும் கேட்டு வீமனுடைய ஒருகால் தம்முடைய எல்லையிலும், மற்றொருகால் மிருகத்தினுடைய எல்லையிலு மிருந்தபடியால் வீமனைத் தம்பியென்றும் நினையாமல் அவனுடைய உடலிற் பாதியை மிருகத்திற்குக் கொடுக்கும்படி தீர்ப்புச் செய்தார். அங்ஙனம் தீர்மானஞ்செய்த புண்ணிய விசேஷத்தால் அவர், தம் சரீரத்துடனே சுவர்க்கலோகஞ் சென்றார்.

---

## "மோகத்தை முனி."

என்பதற் கேற்ப, அன்னியமாதரின் இச்சையாகிய மோகத்தைக் கடிந்து நீக்கவேண்டுமெனல்.

97 தேவர் முனிவர்மண் ணோர்தென் புலத்தார்க் கும்மோ
பாவவித் தென்றோதும் பழமறைகள்—ஆவதனால்[கம்
வேளாள புன்னைவன வித்தகா! இத்தரையில்
மூளுமோ கத்தை முனி.

(ப - ரை) வேளாள - வேளாளர் குலத்திற் பிறந்த, புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, வித்தகா-அறிவுள்ளவனே!, தேவர்-விண்ணுலகத்தவர்க்கும், முனிவர் - இருடிகளுக்கும், மண்ணோர் - இப் பூமியிலுள்ளவர்க்கும், தென்புலத்தார்க்கும்-பிதுர்க்களுக்கும், மோகம் - மோகமானது, பாவவித்து என்று - பாவமூலமென்று, பழமறைகள்-பழைய வேதங்கள், ஓதும்-எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருக்கும்; ஆவதனால் - இவ்வாறு வேதங்கள் கூறுதல் உண்டாவதனாலே,(உலகத்தில் அன்னிய மாதரை விரும்புதலாகிய

மோகமானது மிகவும் கொடிதாம்; இதுபற்றி ஔவையும், 'மோக த்தை முனி,' என்று கூறினள். ஆதலின்,) இத் தரையில் - இப் பூமியில், மூளும் - பற்றி யெரிகின்ற, மோகத்தை - அன்னிய மாத ரிச்சையை, முனி - நீ கடிந்து விலக்கு.

(வி - ரை) தேவர், முனிவர், மண்ணோர் என்பவற்றில் குவ் வுருபும் எண்ணும்மையும் தொக்கன. தேவர்களில் இந்திரன் முதலி யோரும், முனிவர்களுள் விசுவாமித்திரர் முதலியோரும், மண் ணவரில் கீசகன் இராவணன் முதலியோரும், பிதுர்க்களுற் சில ரும் மோகத்தாற் கெடுதி யடைந்திருப்பதால் எல்லோருக்கும் 'மோகம் பாவ வித்து' என்றார் ஆசிரியர். இங்ஙனம் மோகங் கொடிதென்பதை,

"அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்
பிறன்றார நச்சுவார்ச் சேரா—பிறன்றாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்
றச்சத்தோ டிந்நாற் பொருள்."

என்னும் நாலடிச் செய்யுளா னுணர்க.

---

## "வல்லமை பேசேல்."

என்பதற் கேற்ப, எப்பொழுதும் தன் வல்லமை பேசலாகா தென்பதை விளக்கும்

## பூதனை கதை.

98. குழந்தையென்று மாயனைப்பேய் கொல்லமுலைப் பாலீ
ந்திழந்ததுயி ரென்பதுல கெங்கு—முழங்குதலால் [ந்
விருளா! புன்னைவன மேகமே! யாரிடத்தும்
மாறான வல்லமைபே சேல்.

(ப - ரை) புன்னை வனம் - புன்னைவனத்திலுள்ள, வீருளா- பெருமையாளனே!, மேகமே-ஈகையில் மேகத்தைப் போன்றவனே!, (உலகத்தில் எவரும், தாமே தம்முடைய சாமர்த்தியத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசலாகாது; அங்ஙனம் பேசின் ஒரு காலத்தில் தம்முடைய வல்லமை கெட்டு அவமானப்பட ஏது வுண்டாகும்; இதுபற்றியே ஒளவையும், 'வல்லமை பேசேல்,' என்று கூறினள். இந் நீதியை யுணராமையால், பூதனை யென்பவள், கிருஷ்ணனைக் குழந்தையென்று நினைத்து, 'அவனைக் கொன்றுவருவேன்' என்று தன் வல்லமையைத் தானே புகழ்ந்து பேசி அக் கிருஷ்ணனிடம் சென்று பால் கொடுத்து உயிர் விட்டனள்; அங்ஙனம்) பேய் - அந்தப் பூதனையாகிய பேயானது, மாயனை - கிருஷ்ணனை, குழந்தை என்று - பாலகன் என்று நினைத்து, கொல்ல - கொல்லும் பொருட்டு, முலைப்பால் ஈந்து-அவனுக்குத் தனப்பால் கொடுத்து, உயிர் இழந்தது என்பது - உயிர்விட்டதென்பது, உலகு எங்கும் - உலகத்தில் எவ்விடத்தும், முழங்குதலால் - பிரஸ்தாபகமாகச் சப்தித்துக்கொண்டிருப்பதனாலே' (நீ' தன் வல்லமை பேசுதல் எப்பொழுதும் தீங்காமென்பதை யுணர்ந்து)யாரிடத்தும்-எவரிடத்திலும், மாறான - இந் நீதிக்கு விரோதமான, வல்லமை - தன் வல்லமையை, பேசேல் - புகழ்ந்து பேசாதே.

(வி - ரை) பூதனை, பேய்த்தன்மை யுடையவளாதலின், 'பேய் முலைப்பா லீந்து இழந்ததுயிர்,' என்று அஃறிணைமுடிபிற் கூறினர் ஆசிரியர். கொல்ல - வினையெச்சம். இச் செய்யுளில் ஆத்திசூடி வாக்கியம், 'வல்லமை பேசேல்,'என வந்துளது. இதற்கேற்ப இங்குப் பொருள் கூறினும். 'வன்சொல் வழங்கேல்,' என்றும் பாடபேத முண்டு. இங்ஙனம், 'வன்சொல் வழங்கேல்' என்பதற்கு, 'நீ யாவரிடத்தும் கடுஞ்சொற்களைச் சொல்லாதே,' என்பது பொருளாம்.

பூதனையென்பவள், தன் வல்லமையைப்பற்றித் தானே புகழ்ந்து பேசிக் கிருஷ்ணனால் உயிரிழந்த கதையாவது:— பூதனை யென்பவள் ஓர் அரக்கி; இவள், கிருஷ்ணனுக்கு விரோதியாகிய கம்சன் ஏவலால், "கிருஷ்ணனைக் கொன்று வருவேன்" என்று தற்புகழ்ச்சி பேசிக் கோகுலத்திலிருந்த கண்ணனிடம் வஞ்சனையாகச் சென்று அவனைக் கொல்லும்பொருட்டுத் தன் தனப்பாலை அவனுக்கு ஊட்டினள். அப்போது அவளுடைய வஞ்சனையை கிருஷ்ணன் அறிந்து அவள் தனத்தில் பால் பருகுவார் போல நடித்துத் தனக் காம்பின் வழியாக, அவளுடைய உயிரையும் சேர்த்துண்டனர். அதனால் அவள் பிணமாயினள். இக் கதை பாகவதத்தில் விரிவாகக் காணப்படும்.

---

## "வாதுமுற் கூறேல்."

என்பதற் கேற்ப, ஒருவருக்கு முன்னே தர்க்க வார்த்தை பேசினால் அவமான முண்டா மென்பதை விளக்கும்

## விசுவாமித்திரன் கதை.

99. இந்திரன்முன் கோசிகன்வ திட்டருடன் வாதிலரிச்
சந்திரனைப் பொய்யனென்ற தப்பிதத்தால்—வந்தது
மாதவனே! புன்னை வனநாதா! வாயிடும்பால் [பார்
ஏதெனினும் வாதுமுற்கூ றேல்.

(ப - ரை) மா - சிறந்த, தவனே - தவத்தினையுடையவனே!, புன்னைவன நாதா - புன்னைவனத் தலைவனே!, (உலகத்தில் மனிதர் எவ்வளவு நூல்களைக் கற்றிருந்தாலும், மற்ற வித்தைகளில் எத்தகைய சாமர்த்திய முடையவர்களா யிருந்தாலும் ஒருவருக்கு முன்னே அகங்கரித்து ஒரு விஷயத்தைப்பற்றி நியாய விரோதமாக வாது பேசலாகாது; அங்ஙனம் பேசின் பின் தம்முடைய

கசுஷி ஒரு சமயத்தில் தோல்வியடைய அதனுல் மிக்க அவமான முண்டாகும்; இதுபற்றியே ஒளவையும், 'வாதுமுற் கூறேல்,' என்று கூறினள்; இதற்குதாரணமாக) கோசிகன் - விசுவாமித்திர முனிவன், இந்திரன் முன் - தேவர்க்கதிபனுக்கு முன்னே, வதிட்டருடன் வாதில் - வதிட்டருடனே செய்த தர்க்கத்தில், அரிச்சந்திரனை - திரிசங்கு புத்திரனை, (தன்னுடைய அகங்காரத்தினுலே) பொய்யன் என்ற - அசத்தியவான் என்று கூறிய, தப்பிதத்தால் - குற்றத்திஞலே, வந்தது - அம் முனிவனுக்கு ஈற்றில் நேர்ந்த அவமானத்தை, பார் - நீ ஆராய்ந்து பார்; (இதனுலும் அகங்கரித்து ஒருவருக்கு முன்னே தர்க்கம் பேசுதல் தீங்காமென்பது நன்கு விளங்கும்; ஆதலின், நீயும்) வாய் இடம்பால் - வாயகந்தையால், ஏதெனினும் - எதுவாயிருந்தாலும், முன் - ஒருவர்க்கு முன்னே, வாது கூறேல் - தர்க்கம் பேசாதே.

(வி - ரை) 'வதிட்டருடன் வாதில்' என்பதற் கிடையில், 'செய்த' என்னுஞ் சொல் இசையெச்சமாக வருவிக்கப்பட்டது. வந்தது - வினையாலணையும் பெயர். 'வாதுமுற் கூறேல்,' என்பதை 'முன்வாது கூறேல்,' என மாற்றுக. 'வாது' என்பதற்குத் 'தருக்கம்' என்பது பொருள்; நியாயம்பற்றிப் பேசுதல், அநியாயம் பற்றிப் பேசுதல் ஆகிய இரண்டிற்குமே வாது என்பது பொருளாயினும், இது பெரும்பாலும் அநியாயம்பற்றிப் பேசுதலையே குறிக்கும்; நியாயம்பற்றிப் பேசுவோர் அவ்வாறு அகங்கரித்து வாது கூறுர். இது அநியாயம்பற்றிப் பேசுதலா யிருப்பதை முன்னிட்டே, இது தகாச் செய்கை யென்றும், இதனை அவசியம் விலக்க வேண்டுமென்றும் ஒளவை இங்ஙனம், 'வாதுமுற் கூறேல்', என்று நீதி கூறினள். இவ்வாறு வாது என்பது அநியாயம் பேசுதலேயாம் என்பதை, மகா சத்தியவானுகிய அரிச்சந்திரனைப் பொய்யனென்று கூறி வதிட்டருடன் வாதிட்ட விசுவாமித்திரன் கதையே விளக்கிக் காட்டும். விசுவாமித்திரன் இங்ஙனம் வாது கூறித்

தன்னுடைய தவத்தையு மிழந்து அவமான மடைந்த கதையை நூலின் மூன்றுஞ் செய்யுளுரையில் எழுதப்பட்டிருக்கும் அரிச்சந்திரன் கதையா லுணர்க.

---

## "வித்தை விரும்பு."

என்பதற் கேற்ப, வித்தையை விரும்பிக் கற்றலின் உயர்வை விளக்கும்

## திருவள்ளுவர் கதை.

100. வள்ளுவரைக் கல்வியன்றோ வண்டமிழ்ச்சங் கஞ்செயிக்கத்
தெள்ளுதமிழ் நூலுதவி செய்ததெல்லாம்—உள்ளதன்றோ
சந்திரனே! புன்னைவனத் தாடாளா! பேரறிவாம்
புந்தியினில் வித்தைவிரும் பு.

(ப-ரை) புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, சந்திரனே-தன்னை யடுத்தாற் கின்பஞ் செய்வதில் சந்திரன் போன்றவனே!, தாடாளா - நன்முயற்சியை யுடையவனே!, (உலகத்தில் மனிதர் மேன்மையடைய விரும்பின் பலநூற் கல்விகளையும் விரும்பிக் கற்றுக்கொள்ளவேண்டும்; அங்ஙனம் கற்றுக்கொண்டால் அக் கல்வியின் பலத்தால் செயற்கரிய காரியங்களையும் செய்து கீர்த்தி பெறலாம்; இதுபற்றியே ஔவையும், 'வித்தை விரும்பு,' என்று கூறினள். இந் நீதிக் கிணங்க, திருவள்ளுவர் பன்னூல் கற்றதனால் சங்கத்தவரையும் வென்று கீர்த்தி பெற்றூர்; அங்ஙனம்) வள்ளுவரை-திருவள்ளுவநாயனாரை, வண் தமிழ் - வளப்பம் பொருந்திய தமிழையுடைய, சங்கம் - மதுரைச் சங்கத்தை, செயிக்க - வெல்ல, உதவி செய்தது - சகாயம் புரிந்தது, தெள்ளு - தெளிந்தெடுத்த, தமிழ் நூல் கல்வி அன்றோ - தமிழ்ப் பனுவற் படிப்பல்லவோ?, இதெல்லாம் - இச்செய்கை யெல்லாம், உள்ளது அன்றோ - என்

றும் நிலைபெற்றதல்லவா? (இதனை நீ ஆலோசித்துப் பார்ப்பா யாயின், 'வித்தை விரும்பு,' என்று ஔவை கூறிய நீதியின் உயர்வு நன்கு விளங்கும்; ஆதலின், நீ இதன் மூலம் வித்தையின் உயர்வை யுணர்ந்து) பேர் அறிவாம் - பெரிய உணர்ச்சியான, புந்தியினில் - உன்னுடைய புத்தியிலே, வித்தை - நூற்கல்வியை, விரும்பு - விரும்பிக் கற்கக்கடவாய்.

(வி - ரை) 'கல்வியன்றோ தெள்ளுதமிழ் நூலுதவி செய்தது,' என்பதை, 'தெள்ளுதமிழ் நூற்கல்வியன்றோ உதவி செய்தது,' என மாற்றுக. 'செய்ததெல்லாம்' என்பதற் கிடையில், 'இது' என்னும் சுட்டு வருவிக்கப்பட்டது;

"ஒருமையிற் பன்மையும் பன்மையி னொருமையும்
ஓரிடம் பிறவிடந் தழுவலு முளவே,"

என்னுஞ் சூத்திர விதிப்படி, 'இது' என்னும் ஒருமைப்பாலில் 'எல்லாம்' என்னும் பன்மைச்சொல் சேர்த்து 'இதெல்லாம்' எனக் கூறப்பட்டது.

திருவள்ளுவர் சங்கத்தவரை வென்ற கதையாவது:—இந்தத் திருவள்ளுவ ரென்பவர், ஆதி யென்பவளுக்கும், பகவன் என்பவருக்கும் மயிலாப்பூரில் இலுப்பைத் தோப்பில் பிரமாவின் அம்சமாகப் பிறந்து, தாய்தந்தையர் தம்மைவிட்டுச் செல்ல வருந்திய காலத்தில், தெய்வீகத்தால் கவிசொலுந் திறத்தை ஓதாதுணர்ந்து, அவர்களை நோக்கி,

"எவ்வுயிருங் காக்கவொரு வீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிரின் யானொருவ னல்லனே - எவ்வி
அருகுவது கொண்டிங் கலைவதே னன்னே
வருகுவது தானே வரும்."

என்னும் வெண்பாவைச் சொல்லி, அவர்களைப் பிரிந்து செல்லுமாறு செய்து, அவர்கள் சென்றபின், வேளாளரிடம் வளர்ந்து, பின்னர் அவர்களை விட்டு நீங்கி, ஒரு பனையடியி லிருந்து, மார்க்கசகாயன் என்னும் வேளாளனுடைய வேண்டுகோளுக்கிணங்கி, பஞ்சாக்ஷரத்தால் வேதாளத்தை ஓட்டி, அவன் பெண்ணாகிய வாசுகியை, மணலைச் சோறாகச் சமைக்கச் செய்து அவள் அவ்வாறே செய்ய அவளை மனைவியாக மணந்து, ஏலேலசிங்கரெனும் வர்த்தகரிடம் நூல் வாங்கி நெசவுத் தொழில் புரிந்து இல்லறம் நடத்தி, சிவபெருமானுடைய ஊர்த்துவ தாண்டவத்தைப்பற்றித் தேவர் வினவியதற்குத் தக்கவாறு விடை பகர்ந்து, ஏலேலசிங்கருக்கு ஞானோபதேசஞ் செய்து புத்திரப்பேறளித்து, அவர் பிள்ளைக்கு அழகாநந்தர் என்று பெயர் கூறி, கரைதட்டிய அவருடைய கப்பலை, 'ஏலையா" என இழுத்துப் போக்கி, பஞ்சம் வந்த காலத்தில், ஏலேலசிங்கர் கட்டிவைத்திருந்த நெல்லையெல்லாம் குறுணியேற்றமாக விற்கச்செய்து, அதனால் வந்த திரவியத்தை யுருக்கிக் கடலி விடுவித்து, அதனை ஏலேலசிங்கர் மீண்டும் பெறச்செய்து, பின்னும் பல விடங்கட்குச் சென்று பல அற்புதங்களை நடத்தி, மீண்டும் மயிலாப்பூ ரெய்திப் பரிபூரணமடைந்தவர்.

இவர் ஏலேலசிங்கரிட மிருக்குங்காலத்தில் ஏலேலசிங்கருடைய புத்திரராகிய அழகானந்தரும், வேறு சில பெரியோர்களும் இந்த வள்ளுவரை நோக்கி, "கற்றற்கெளிதாக உம்முடைய பெயரால் ஒரு நூல் செய்யவேண்டும்," என்று சொல்ல, இவர் அங்ஙனமே வேதாகம சாஸ்திரங்களின் சாரங்களைத் திரட்டி அறம், பொருள், இன்பம் என முப்பாலாக்கி, (கூ௩௩0) குறள் வெண்பாக்களால் திருக்குறள் என்னும் நூலை இயற்றியருளினர். அதன்மேல், அழகானந்தர் முதலாயினோர், இவரை நோக்கி, "நாயனாரே! இதைக்கொண்டு சங்கத்தாரை வெல்லலாம்; மதுரைக்குச்

செல்வீராக,' என்று கூறினர். அவர்கள் வார்த்தையைக் கேட்டவுடன் நாயனுர் அவ்வாறே புறப்பட்டு இடையில் ஒளவை எதிர்ப்பட, அவளேயும் அழைத்துக்கொண்டு இடைக்காடரைக் கண்டு அவரிடம், தாம் சங்கத்தாரை வெல்லும்பொருட்டுச் செல்வதைச் சொல்ல, அவர், "சிவபெருமான், 'இடையாலுங் கடையாலும் சங்கம் அழியக்கடவது,' என்று நக்கீரர் முதலிய புலவர்களின் பொருட்டுக் கோபங்கொண்டு சபித்திருக்கின்றனர்; அதனுல் அச் சங்கம் என்னுலும், உம்மாலும் அழிவுபடப் போகின்றது; ஆதலால், நாமும் உம்முடன் வருகின்ருேம்," என்று அவரும் இவருடன் புறப்பட்டனர். பின்பு நாயனுர் ஒளவையுடனும், இடைக்காடருடனும் சென்று மதுரையை அடைந்து, கோவிலே வலம் வந்து, சொக்கலிங்கப்பெருமானேயும் மீனுக்ஷியம்மையையும் தரிசித்து, சுவாமி சன்னிதானத்தில், பாண்டியராஜனும், மந்திரி பிரதானிகளும், மற்ற ஜனங்களும், ஒளவையாரும், இடைக்காடரும் கூடிய சபையில் வீற்றிருந்து, அவர்கள் கேட்கும்படி, திருக்குறளின் முப்பால்களேயும், அரங்கேற்றி முடித்தனர். அந்நூலேக் கேட்ட யாவரும் மிகுந்த ஆநந்த மடைந்து, நாயனுரைப் புகழ்ந்து கொண்டாடினுர்கள். அதன்மேல், நாயனுர், அங்கிருந்த எல்லோரும் தம்மைப் புடைசூழ்ந்துவரப் பொற்ருமரைத் தீர்த்தத்தில் வீற்றிருக்கின்ற அகங்காரிகளாகிய சங்கப் புலவரிடம் சென்ருர். அப்போது அவர்கள் இவரிடம் பல கேள்விகளேக் கேட்டார்கள். அவ் வினுக்களுக் கெல்லாம் இவர் தமிழ்ப் பாக்களினுலேயே தக்க விடை பகர்ந்தனர்.

பின்பு சங்கப்புலவர்கள், நாயனுரை நோக்கி, "வள்ளுவரே! நீர் நாங்கள் கேட்ட கேள்விகளுக்குத் தக்க விடை கூறினும், உம்முடைய குறளே நாங்கள் ஒப்புக்கொள்ளமாட்டோம்; நாங்க ளிருக்கும் இந்தச் சங்கப்பலகை உயர்ந்த நூல்களுக்கே இடங் கொடுக்கும்;

ஆதலின், குறளை இப் பலகையில் வையும்; இஃததனை யேற்றுக் கொள்ளுமாயின், நாங்களும் ஏற்றுக்கொள்வோம்,'' என்று சொல்ல, அவ்வாறே நாயனுர் தம்மாற் செய்யப்பட்ட திருக்குறளை அவர்களிருந்த சங்கப்பலகையில் வைத்தனர். அங்ஙனம் வைத்த வுடனே, அச் சங்கப்பலகையானது, தன்னிட மிருந்த புலவர்க ளெல்லோரும் பொற்றாமரைத் தீர்த்தத்தில் விழும்படி, திருக் குறட் புத்தகத்தி னளவாகச் சுருங்கி அக் குறளுக்கு மாத்திர மிடங் கொடுத்தது. உடனே அங்கு நின்ற எல்லோரும் அதிசயி த்து நாயனுரைப் புகழ்ந்தார்கள்; தண்ணீரில் விழுந்த புலவர்களும் கரையேறித் திருக்குறளின் மகிமையை உணர்ந்து நாயனுரைப் பலவாறு கொண்டாடித் திருக்குறளைப் புகழ்ந்து ஒவ்வொரு பாட ல்க ளடங்கிய நூலானது திருவள்ளுவமாலை யெனப் பெயர் பெற் றுச் சிறப்புற்றது. இன்னும் நாயனுர் மகிமையையும், திருக்குற ளின் மகிமையையும் திருவள்ளுவர் சரித்திரத்தில் விரிவாகக் காணலாம்.

---

## "வீடு பெறநில்."

என்பதற் கேற்ப, மோக்ஷத்தை யடைதற்குரிய வழியிலே நிற்றலின் உயர்வை விளக்கும்

## ஜனகன் கதை.

101. நிலையர் வுடல்பொரு ணீரினிறை கஞ்ச
மலரிலைபோ லெத்தனைநாள் வாழ்ந்தும்-இலகுபொருட்
பத்தியொன்றும் புன்னைவனப் பண்பா! சனகனைப்
நித்தியமாம் வீடுபெற நில். [போல்

(ப - ரை) இலகு-விளங்குகின்ற, பொருள் - மோக்ஷமாகிய பொருளின், பத்தி ஒன்றும் - விசுவாசம் பொருந்திய, புன்னை

வனம் - புன்னைவனத்திலுள்ள, பண்பா-நற்சிநேகத்தை யுடையவனே!, (உலகத்திலுள்ள மனிதர்கள்) எத்தனை நாள்-எவ்வளவு தினங்கள், வாழ்ந்தும்-ஜீவித்திருந்தும், உடல்-அவர்களுடைய தேகமும், பொருள்-செல்வமும், நீரில் - தண்ணீரிலே, நிறை - செழித்து நிறைந்திருக்கின்ற, கஞ்சம் - தாமரையின், மலர் இலைபோல் - பூவும் இலையும் தண்ணீர் வற்றியவுடன் அழிவதுபோல, நிலையா - காலம் முடிந்தபின் நிலைக்கமாட்டா; (ஆதலால், இவற்றிற் பற்று வைப்ப தொழித்து எப்பொழுதும் நிலைத்த பொருளாகிய முத்திப்பொருளைத் தேட முயற்சி செய்து அதன் வழியிலே நிற்க வேண்டும்; அங்ஙனம் நின்று முத்தியை அடையின் என்று மகலாப் பேரின்ப மெய்தி வாழலாம்; இதுபற்றியே ஔவையாரும், 'வீடு பெறநில்,' என்று கூறினர்; இந் நீதியைக் கடைப்பிடித்து ஜனகன் அரசனுயிருந்தும் நிலையற்ற பொருளாகிய இராஜாங்க ஐசுவரியத்திலே பற்று வைக்காமல் மோக்ஷ விருப்புடையனாய்த் தவஞ் செய்து என்று மழியாப் பெரும்பேறு பெற்றனன்; ஆதலின், நீயும் இந் நீதியை யுணர்ந்து) சனகனைப்போல்-அந்த ஜனக மகாராஜனைப் போல, நித்தியமாம் - என்றும் அழியாததாகிய, வீடு பெற - மோக்ஷத்தை யடையும்படி, நில் - அதற்குரிய தவத்தின் வழியிலே நிற்கக்கடவாயாக.

(வி - ரை) உடல், பொருள் என்பவற்றுள் எண்ணும்மைகள் தொக்கன. தாமரையின் மலரும், இலையும் குளத்தில் நீர் நிறைந்திருக்குமளவும் செழித்திருந்து ஒரு சமயத்தில் அந்நீர் வறண்டபோது காய்ந் தொழிந்துபோவதுபோல, மனிதர் தேகமும் பொருளும் அவர்கள் எத்தனை நாள் வாழினும், நற்கால முள்ளவரை செழித்திருந்து அக்காலம் மாறியவுடன் அழிந்துபோகக் கூடியன வாகலின், 'எத்தனை நாள் வாழ்ந்தும் உடல் பொருள் நீரில் நிறை கஞ்ச மலரிலைபோல் நிலையா,' என்றனர் ஆசிரியர்.

மோக்ஷம், அறம் பொருள் இன்பம் வீடு என்னும் புருடார்த்தங்கள் நான்கனுள் ஒன்ருகலானும், என்று மழியாதிலகும் இயல்பினையுடைய தாகலானும் அதனை, 'இலகு பொருள்' என்று கூறினர். 'வீடு' என்பதற்கு, 'விடுதல்' என்று பொருள்; அதாவது, உலகப்பற்றை விடுதலாம். இங்ஙனம் உலகப் பற்றை விடுதலே முத்தியாதலின், இதற்கு வீடு எனப் பெயர் ஏற்பட்டது. இந்த 'வீடு' என்பது முதனிலை திரிந்த தொழிற்பெயர்; படுதல் என்னுந் தொழிற்பெயர் தல்லீறு கெட்டு முதல் நீண்டு பாடு என்று ஆதல்போல, விடுதல் என்னுந் தொழிற்பெயரும், தல்லீறு கெட்டு ஆதி நீண்டு 'வீடு' என்ருயது.

ஜனகன் உலகப் பற்றின்றி முத்தி பெற்ற கதையாவது:— இந்த ஜனகன், அச்வரோமன் புத்திரன்; இவன் அரசாட்சியையடைந்தும் மோக்ஷ விருப்பினனுய்த் தவஞ் செய்து இராஜரிஷியாய் நற்பதவி பெற்றனன். சீதையை வளர்த்து, தக்ஷயாகத்தில் தம் வம்சத்தவரிடம் வீரபத்திரரால் வைக்கப்பட்ட வில்லை அவள் பொருட்டு இராமரை வளைக்கச் செய்து அவளை அவ் விராமருக்கு மணஞ் செய்து கொடுத்தவன் இவனே. இவன் ஒரு காலத்தில் நரகஞ் சென்று, அவ்விட மிருந்த பாபிகளைக் கண்டிரங்கி, ஹரஹர வென்னும் முழக்கஞ் செய்து அவர்களை அந் நரகத்தினின்றும் நீக்கினன்; இன்னு மிவன் சுகருக்கும் ஒரு சமயம் ஞானேபதேசஞ் செய்து மகா ஞானியானவன். 30-ஆம் செய்யு ளுரையிலும் இவனியல்பு கூறப்பட்டுளது.

---

"உத்தமனாயிரு."

என்பதற் கேற்ப, மனிதர் நல்லவராயிருத்தல்
உயர்வா மென்பதை விளக்கும்

வியாசர், விதுரர், வதிஷ்டர் ஆகியவரின் கதைகள்.

102. வேத வியாசன் விதுர னுருப்பசிதன்
காதன்மைந்த னன கனவதிட்டன்—நீதியைப்பார்
நேயத்தாற் புன்னைவன நீதிபரா! தாரணியி
லேயுத் தமனா விரு.

(ப - ரை) புன்னைவனம் - புன்னைவனத்திலுள்ள, நீதி பரா - நீதி பொருந்திய தலைவனே!, (உலகத்தில் மனிதர் மேன்மை யுள்ளவரா யிருக்கவேண்டுமானால், உத்தம செய்கை யுடையவர்களா யிருக்கவேண்டும்; இதுபற்றியே ஔவையும், 'உத்தமனா யிரு,' என்று கூறினள்; இந்நீதிக் கிணங்க,) வேதவியாசன் - வேதவியாச முனிவன், விதுரன் - விதுர மகாராஜன், உருப்பசிதன் - ஊர்வசியினுடைய, காதல் - ஆசை பொருந்திய, மைந்தனன - புத்திரனாகிய, கனம் - மேன்மை பொருந்திய, வதிட்டன் - வதிஷ்ட முனிவன், (ஆகியவர்கள் உத்தமரா யிருந்து செய்த) நீதியை - ஒழுங்கை, பார் - ஆராய்ந்து பார்; (இவர்களுடைய செய்கையினாலும் உத்தமனா யிருப்பதின் உயர்வு விளங்கும்; ஆதலின் நீ) தாரணியில் - இப் பூமியில், நேயத்தால் - எல்லோரிடத்தும் பொருந்தியிருக்கின்ற நேயத்தினாலே, உத்தமனா இரு - எப்பொழுதும் நன்மை யுடையவனாகவே யிருந்து வருவாயாக.

(வி - ரை) வேதவியாசன், விதுரன், கனவதிட்டன் நீதியைப் பார் என்னும் வாக்கியத் தொடர்களுக் கிடையில், 'ஆகியவர்கள் செய்த,' என்னுஞ் சொற்கள் வருவித் துரைக்கப்பட்டன.

வேதவியாசர் கதையாவது:—இவர், பராசருக்கு சத்திய வதி யென்னும் பரிமளகந்தியிடம் பிறந்த புத்திரர்; பிறந்தவுடனேயே தவத்திற்குச் சென்றவர்; வேதங்களை ஒழுங்கு செய்த காரணத்தால் வேதவியாசர் எனப் பெயர் பெற்றவர்; விநாயகர் எழுதப் பாரதங் கூறினவர்; பிரமசூத்திரங் கூறியவர்; தாயின் கட்டளை கடவாத மகா உத்தமரானவர்; உலக விஷயமே தெரியாத சுகருக்குத் தந்தையானவர்; தாயின் கட்டளைப்படி காசிராஜன் புத்திரிகளையும், அவர்களின் தோழியையுங் கூடித் திருதராட்டிரன், பாண்டு, விதுரன் ஆகியவர்களைத் தோற்றுவித்துக் குருவமிசத்தை விருத்தி செய்தவர்; பாண்டவர் வனத்தில் வசிக்குங் காலத்தில் ஆங்காங்குத் தோன்றி அவர்களுக்குத் தருமங் கூறினவர்; ஒருசமயம் தம்மைக் கண்டு பயந்து ஓடிய ஒரு புழுவின் வரலாற்றை யுணர்ந்து அப் புழுவானது பல பிறவி யெடுத்து முடிவில் அவ்வியேயனுய்ப் பிறக்க அருள் செய்தவர்; பாரதயுத்தத்தில் அபிமன்னன் இறந்ததைப்பற்றி வருந்திய தருமருக்குத் தேறுதல் கூறியவர்; பாரத யுத்தத்தால் வந்த தோஷந் தொலைய அசுவமேத யாகஞ் செய்யும்படி தருமரை யேவினவர்; பாரத யுத்தத்திற்குப் பின் திருதராட்டிரன் பாண்டவரை விட்டு நீங்கித் தவஞ் செய்கையில் அவனிடஞ் சென்று, அவனைத் தேற்றி, இறந்துபோன மைந்தரை வரவழைத்து அவனுக்குக் காட்டினவர்; இன்னும் அங்கே திருதராட்டிரனைக் காண வந்திருந்த பாண்டவர்க்குக் கர்ணன், அபிமன்னன், அரவான் முதலியவர்களைச் சுவர்க்கத்திலிருந்து வரவழைத்துக் காட்டினவர்; அவர்களுடைய பத்தினிகளைக் கங்கையில் வீழ்ந்து சுவர்க்கமடையச் செய்தவர்; இன்னும் இவருடைய உத்தம செய்கைகள் பலவுள; அவற்றை யெல்லாம் பாரதம் முதலிய பெருநூல்களிற் பரக்கக் காணலாம்.

விதுரன் கதையாவது:—இவன், யமனம்சமாக அம்பாலிகையின் தோழி வயிற்றில் வியாசருக்குப் பிறந்தவன்; இவன் மிக

வும் விவேகமுடையவனுதலின் விதுரன் என்னும் பெயரடைந்தனன்; இவன் மகா நீதிமான்; பாண்டவர்க்கு நாடு கொடுக்கும்படி துரியோதனனுக்கு அடிக்கடி புத்தி கூறியவன்; துரியோதனன் பாண்டவர்க்குத் தீங்கியற்றும்போதெல்லாம் அது கூடாதென்று தடுத்தவன்; ஸ்ரீ கண்ணபிரான், பாண்டவர்க்குத் தூது சென்ற காலத்தில் அவருக்கு விருந்திட்டு உபசாரஞ் செய்தவன்; நியாயங் கூறிய தன்னைத் துரியோதனன் நிந்தித்தப்படியால், "இந்த அனியாயமான பாரத யுத்தத்தில் இரேன்" என்று நகரத்தை விட்டு நீங்கித் தீர்த்தயாத்திரை செய்து யுத்தம் முடிந்து பாண்டவர் அரசியற்றுங் காலத்தில் நாட்டிற்கு வந்தவன்; துறவடைந்து நற்கதி பெற்றவன்; இன்னும் இவனைப்பற்றியே உத்தம கதைகளைப் பாரதத்தில் விரிவாகக் காணலாம்.

வசிஷ்டர் கதையாவது:—இவர் பிரமன் மானஸ புத்திரர்களுள் ஒருவர்; இவருடைய தேவி அருந்ததி; வைவச்சுத மனுவந்தரத்தில் இவர் சப்த ரிஷிகளில் ஒருவரா யிருந்தவர்; மிகுந்த தவத்திற் சிறந்தவர்; சூரியவம்சத் தரசர்களுக்குக் குருவானவர்; இவர் ஒருகாலத்தில் நிமியின் சாபத்தால் தேகமில்லாது வருந்தி, தம் பிதாவாகிய பிரமனிடம் சென்று தேகம் வேண்டினர்; அப்போது பிரமன், 'மித்திராவருணருடைய வீரியக்கலப்பால் உனக்குத் தேகமுண்டாம்,' என்று கூறினர். அதன்மேல் இவர், மித்திரனும் வருணனு மிருக்கும் வருணலோகஞ் சென்றனர். அப்போது ஊர்வசி மித்திரனிடம் வருவதாக முன்னரே வாக்களித்து அவனிடம் செல்ல, வழியில் வருணன் அவளைக் கண்டு மோகமுற்றுத் தன்னைக் கூடுமா றழைக்க, அவள் தான் மித்திரனுக்கு வாக்களித்ததைக் கூறி அவனுக் குடன்படாமல் சென்றனள். அது கண்டு வருணன் 'உனக்காக என் தேஜஸில் ஒருவன் உதிக்கவேண்டும்,' என்று சொல்ல, அவள் ஒப்புக்கொண்டு மித்திரனிடம்

போய்ச் சேர்ந்தனள். மித்திரன் அவளைக் கண்டு: "நீ நேரே என்னிடம் வராமல் வருணனிடம் சென்று வந்தபடியால், பூவுலகத்தில் புரூரவனுக்குப் பெண்டாகக்கடவாய்," எனச் சபித்தனன். அவள் அவ்வாறே புரூரவனை மணந்து ஆயுவைப் பெற்றாள். பின்னர் அவளாலே வருணனுக்கும், மித்திரனுக்கு முண்டான வீரியம் ஒரு குடத்திற் சேர்க்கப்பட, அதிலிருந்து மேற் கூறியபடி சென்ற வதிஷ்டர் மீண்டும் உடம்பு பெற்றார். இங்ஙனம் ஊர்வசியால் வெளிப்பட்ட மித்திரா வருணர் வீரியத்தால் வதிஷ்டர் உடம்பு பெற்றமையின் ஊர்வசி மைந்தன் எனப்பட்டார். இவர் சத்தி முதலிய நூறு புதல்வரைப் பெற்றார்; கல்மாஷபாதன் அரக்க வுருக்கொண்டிருக்கையில் அந்த நூறு புத்திரரையும் கொல்ல, இவர் புத்திரசோகத்தால் இறக்க முயன்று மலையினின்று வீழ்ந்தும், சமுத்திரத்திற் பாய்ந்தும், உயிர் நீங்காமல் திருமாலால் தேறினர்; தேவர் பொருட்டால் ஒரு சமயத்தில் தமது நேத்திராக்கினியால் அரக்கரை யெரித்தனர். அரிச்சந்திரன் பொருட்டு விசுவாமித்திரருடன் வாதிட்டு அவன் சத்தியவானென்பதை எல்லோருக்கும் விளக்கிக் காட்டினர்; இக்ஷுவாகு வேண்டப் பிரமனிடமிருந்து சரயுவைக் கொணர்ந்தனர். இன்னும் இவருடைய உத்தமச் செயல்கள் பலவுள. அவற்றைப் புராணங்களாலுணர்க.

---

## "ஊருடன் கூடிவாழ்."

என்பதற் கேற்ப, ஊராருடனே கூடி வாழுதலின்
உயர்வை விளக்குதல்.

103. ஊருந்தா யுஞ்சரியே யூரையன்றி யேதனிவாழ்ந்
தாருந்தா யைத்தனிவாழ்ந் தாருமொப்பார்-பாரின்பால்

பொன்னூரும் புன்னைவன பூபாலா! நீயிதெண்ணி
மன்னூ ருடன்கூடி வாழ்.

(ப - ரை) பாரின்பால் - இப் பூவுலகத்திலே, பொன்-இலக்குமியானவள், ஊரும் - தன்னிடத்தே தவழ்ந்து விளையாடுகின்ற, (செல்வச் சிறப்பையுடைய) புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, பூபாலா - இறைவனே!, (மனிதராயினோர், தாமிருக்கும் ஊராருடனே பகையின்றிக்கூடி வாழவேண்டும்; அங்ஙனம் வாழின், பலர் சகாயமு மேற்பட்டுத் தீங்கின்றியிருத்தற் கேதுவுண்டாம்; இங்ஙனம் ஊராருடனே கூடிவாழ்தலால் நலமுண்டாவதனாலே) ஊரும் - ஊரிலுள்ளவரும், தாயும் - பெற்ற அன்னையும், (நலஞ்செய்வதில்) சரியே - சமமாம்; ஊரை அன்றி - ஊராருடனே சேர்ந்து வாழுதலின்றி, (அவரோடு பகைகொண்டு) தனி வாழ்ந்தாரும் - தனித்து வாழ்ந்தவரும், தாயைத் தனி வாழ்ந்தாரும் - தாயைவிட்டுத் தனித்து வாழ்ந்தவரும், (சௌக்கியமற்றிருப்பதனாலே) ஒப்பார்-சமமாவர்; (இதுபற்றியே ஔவையும், 'ஊருடன் கூடிவாழ்,' என்று கூறினள். ஆதலின்,) நீ இது எண்ணி - நீ, 'ஊராருடன் கூடிவாழுதல் நலமாம்,' என்பதாகிய இந் நீதியை நினைத்து, மன் - பொருந்திய, ஊருடன் - ஊராருடனே, கூடி - பகையின்றி உறவாகி, வாழ் - வாழக்கடவாய்.

(வி - ரை) ஊர் - இடவாகுபெயர்; அதிலுள்ள மனிதரை யுணர்த்திற்று. 'தாயைத்தனி' என்பதற் கிடையில், 'விட்டு' என்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. புன்னைவன நாதனிடத்தில் எப்பொழுதும் இலக்குமி நீங்காமல் விளையாடுவா ளாதலின், 'பொன்னூரும் புன்னைவன பூபாலா,' என்றார் ஆசிரியர். ஊராருடனே பகையின்றிக் கூடிவாழின் அவர்கள் தாயைப்போல உதவுவார்கள்; அதனால், தாயினால் என்ன நல முண்டாகுமோ அந்த நல முண்டாகும்; ஊராருடனே பகைத்து அவரை விட்டு நீங்கித் தனியாக

வாழின், அவர் தீங்கு செய்யத் தொடங்குவர்; அதனுல், தாயை விட்டு நீங்கித் தனி வாழ்ந்தார்க்கு என்ன அசௌக்கிய முண்டாகு மோ அந்த அசௌக்கிய முண்டாகும்; ஆதலின், 'ஊருந்தாயுஞ் சரியே,' என்றும், 'ஊரையன்றி யேதனிவாழ்ந், தாருந்தா யைத் தனிவாழ்ந் தாருமொப்பார்,' என்றுங் கூறினர் ஆசிரியர். ஊரு டன் பகைத்தலால் தீங்குவரு மென்பதை, "ஊருடன் பகைப்பின் வேருடன் கெடும்,' என்பதா லுணர்க.

---

## "வெட்டெனப் பேசேல்."

என்பதற் கேற்ப, கத்தி வெட்டைப்போல் கடினமாகப் பேசலாகா தென்பதை விளக்கும்

### சிசுபாலன் கதை.

**104.** தருமருயர் வேள்வி தனிற்சிசுபா லன்பார்த்
தரியைநிந்தை சொல்லி யழிந்தான் - தெரிவதன்றோ
பார்புகழும் புன்னைவனப் பார்த்திபா! மேலோரைச்
சீர்மைதப்பி வெட்டெனப்பே சேல்.

(ப - ரை) பார் புகழும் - உலகத்தாரெல்லோரும் புகழ்ந்து துதிக்கின்ற, புன்னைவனப் பார்த்திபா - புன்னைவனத்திற்கு அரசனே!, (மனிதர் எவரிடத்தும் கத்தி வெட்டைப்போலக் கடின மாகப் பேசலாகாது; அங்ஙனம் பேசின் பலர் பகையும் ஏற்பட்டு நிச்சயமாகத் தீங்குண்டாகும்; இது குறித்தே ஔவையும், 'வெட் டெனப் பேசேல்,' என்று கூறினள். இந் நீதியை யுணராமை யால்,) சிசுபாலன் - சிசுபாலனென்பவன், தருமர் - தருமபுத்திர ருடைய, உயர் - உயர்ந்த, வேள்வி தனில் - இராசசூயயாகத்தில், அரியைப் பார்த்து - கிருஷ்ணனை நோக்கி, நிந்தை சொல்லி - பழிமொழி கூறி, அழிந்தான் - அக் கிருஷ்ணனுல் நாசமடைந்

தான்; தெரிவது அன்ருே - இச் சரித்திரம் எல்லோருக்கும் தெரியக்கூடியதல்லவா!, (ஆகையினுலே நீ) சீர்மை தப்பி - ஒழுக்கங் கெட்டு, மேலோரை - உயர்ந்தோரை, வெட்டு என - கத்தி வெட்டைப்போல் கடினமாக, பேசேல் - பேசாதே! (எவரோடும் இதமாகவே பேசிப் பலர் நேயத்தையுங் கொள்ளக்கடவாய்.)

(வி-ரை) பார் - இடவாகுபெயர். 'வெட்டெனல் மற,' என்றும் பாடம்; இதற்கு, "எவர் பெருந்தீங்கு செய்யினும் அவர்களைப் பார்த்து, 'வெட்டு' என்று கட்டளையிடும் கடின தண்டனையை மறந்துவிடு," என்பது பொருளாம். இது சிறுவர்க் கறிவுறுத்தும் நூலாதலின், இவ் விரண்டனுள் 'வெட்டெனப் பேசேல்,' என்பதே சிறந்ததாம். கடினமான சொல்லானது கத்தி வெட்டைப்போல வேதனை செய்யக்கூடிய தாதலின், அதற்கு அக்கத்தி, உவமை கூறினர்.

வெட்டனப் பேசிக் கேட்ட சிசுபாலன் கதையாவது:— இந்தச் சிசுபால னென்பான் சேதிநாட்டரசன்; கிருஷ்ணனுக்கு அத்தை பிள்ளை; இவன் சாத்துவதி யென்பவளுக்கும், தமகோஷன் என்பவனுக்கும் பிறந்தவன்; இவன் பிறக்குங் காலத்தில் மூன்று கண்களுடனும், நான்கு கரங்களுடனும் பிறந்தனன்; இவனுடைய அந்த விகார ரூபத்தைக் கண்டு அப்போது தாய் கலக்கமுற்றனள்; அச் சமயத்தில், "எவனுல் இவன் சாகப்போகின்ருனே அவன் மடியில் இவனை இருத்தினுல், இவனுக்கு அதிகமாக ஏற்பட்டிருக்கும் கண்ணும் கரங்களும் மறையும்," என்று அசரீரி கூறிற்று. அவ்வாறே அவள் கண்ணன் மடியி லிருத்த, அந்தக் கண்ணும், கைகளும் மறைந்தன. அதனுல் அவள் கண்ணனே தன் பிள்ளையைக் கொள்வாரென் றுணர்ந்து, 'அவரிடம் இச் சிசுபாலன் செய்யும் நூறு குற்றங்களைப் பொறுத்துக்கொள்ள வேண்டும்' என்று வரம் பெற்றுக்கொண்டனள். அதன்மேல் 'இந்

தச் சிசுபாலன், அதிகமாயிருந்த கண்ணும் கைகளும் மறையப் பெற்று மிகவும் வன்மையுடையவனாய் வளர்ந்து, ஒரு காலத்தில் வசுதேவன் அசுவமேதக் குதிரையைக் கட்டினான்; புருவென்பவன் மனைவியைக் கொள்ளை கொண்டான்; கிருஷ்ணனுடைய மாமன் மனைவியைத் தந்தவக்கிரனுக்காகச் சிறைபிடித்தான்; விசாலன் பெண்களைக் கவர்ந்தான்; கிருஷ்ணனுக்கும் பல தீங்குகளைச் செய்தான். கிருஷ்ணன், தாம் சிசுபாலன் தாய்க்குக் கொடுத்த வரத்தின்படியே அவனுடைய நூறு குற்றங்களைப் பொறுத்துக்கொண்டார். ருக்மணியின் கலியாணத்தில், இவன் கிருஷ்ணனால் ஜெயிக்கப்பட்டான். முடிவில், தருமர் இராசசூய யாகஞ் செய்யுங்காலத்தில் இவன் கிருஷ்ணமூர்த்தியுடன் வலுவில் வாதிட்டு அவரைக் கடினமாகப் பேசி அவருக்குக் கோபத்தை யுண்டாக்கி அவரால் கொல்லப்பட்டான். இவன் கிருஷ்ணனால் இறந்த கதை பாரதத்தில் விரிவாகக் காணப்படும்.

---

## "வேண்டுவினை செய்."

என்பதற்கேற்ப, பின்னே வருவதை யுணர்ந்து அதற்குத் தக்கபடி செய்யவேண்டுங் காரியத்தை முன்னே செய்யவேண்டு மென்பதை விளக்கும்

## இடைக்காடர் கதை.

105. ஆடரசா வேந்தாடா வாங்குடிசை வாசமதாத்
தேடுமிடைக் காடர்முன்பு செய்ததுபார்—நீடழகு
சார்ந்தபுகழ்ப் புன்னைவனத் தாடாளா! நன்றாகத்
தேர்ந்துகொண்டு வேண்டுவினை செய்.

(ப - ரை) நீடு அழகு - அதிகரித்த அழகானது, சார்ந்த - பொருந்திய, புகழ் - கீர்த்தியையுடைய, புன்னைவனம் - புன்னை

வனத்திலுள்ள, தாடாளா - நன்முயற்சியாளனே!, (உலகத்தில் மனிதராயினர், பின் வருவதை யுணர்ந்து, அதற்குத் தக்கபடி செய்யவேண்டிய காரியத்தை முன்னே செய்துகொள்ளவேண்டும்; அங்ஙனம் செய்துகொண்டால் மற்றையர் கஷ்டப்படுங் காலத்திலும் தாம் சௌக்கியத்தை யடையலாம்; இதுபற்றியே ஔவையும், 'வேண்டு வினைசெய்,' என்று கூறினள்; இந் நீதியைக் கடைப்பிடித்து,) ஆடு அரசா - தமக்கு ஆடே வேந்தாகவும், வேந்து ஆடா-அரசு ஆடாகவும், (கருதி) ஆம் - உண்டாகிய, குடிசை - சிறுகுடிலே, வாசமதா - வாசஞ்செய்யு மிடமாக, தேடும் - தேடிக்கொண்ட, இடைக்காடர் - இடைக்காட ரென்பவர், (பின்னே பஞ்ச காலம் வருவதை யுணர்ந்து அதற்குத் தக்க காரியத்தை முன்னே செய்து சௌக்கிய மடைந்தனர். அங்ஙனம்) முன்பு - முற்காலத்தில், செய்தது - செய்த காரியத்தை, பார் - நீ ஆராய்ந்து பார்; (இதனாலும், பின்னே வருவதற்குத் தக்க வினையை முன்னே புரியவேண்டு மென்பது நன்கு விளங்கும்; ஆதலின்,) நன்றாக - நன்மையாக, தேர்ந்துகொண்டு - பின்னே வருவதை ஆராய்ந் தறிந்துகொண்டு, வேண்டும் - அதற்குத் தக்கபடி முன்னே செய்யவேண்டும், வினை - காரியத்தை, செய் - முந்தியே செய்யக்கடவாய்.

(வி - ரை) இந்த இடைக்காடர் ஆடுகளை மேய்த்தலாகிய தொழிலையே அரசு செய்தலாகப் பாவித்தும், அரசை: ஆடுமேய்த்தற் றொழில்போல இழிவாகப் பாவித்தும், குடிசையையே தமக்குப் பெரிய அரண்மனையாக நினைத்தும் வந்தவராதலின், இவருடைய மனத்தினியல்பை விளக்கற்பொருட்டு ஆசிரியர், 'ஆடரசா வேந்தாடா வாங்குடிசை வாசமதாத், தேடுமிடைக் காடர்,' என்றார். இச் செய்யுளில், ஆத்திசூடி சூத்திரம், 'வேண்டு வினை செய்,' என்று வருகிறது. ஆத்திசூடியில், 'வேண்டி வினைசெ

யேல்,' என்று பாடம்; இதற்கு, 'பிறர் பொருளைக் கைக்கொள்ள விரும்பி அதற் கேதுவாகிய தீவினைகளைச் செய்யாதே,' என்பது பொருள்.

பின் வருவதுணர்ந்து வேண்டும் வினை புரிந்த இடைக் காடர் கதையாவது:—இந்த இடைக்காடர் தொண்டைமண்டலத்திலுள்ள இடையன் திட்டிலிருந்த இடையர். இவர் ஆடு மேய்த்தற் றொழிலையே உயர்ந்த தொழிலாக வெண்ணி ஆடுகளை மேய்த்துவந்தவர். இவர் ஒரு சமயம் பொதிகைமலைச் சாரலில் ஆடு மேய்த்திருக்கும்போது நவசித்தர்களில் ஒருவர் வந்து இவரிடம் பால் கேட்க, இவர் அவருக்கு அவ்வாறே பால் முதலியன கொடுத்து உபசரித்தனர். அதனால் அவர் மகிழ்ந்து, இவருக்கு ஞானோபதேசஞ் செய்து சென்றனர். அவ் வுபதேசம் பெற்ற பின் இவர் சித்தராயினர். அங்ஙனம் சித்தராயின இவர் ஒரு சமயம், 'மழையில்லாமையால் பன்னிரண்டு வருடங்கள்வரை நாட்டில்பஞ்ச முண்டாகும்' என்பதை முன்னரே யுணர்ந்து, தம் ஆடுகளுக்கு எருக்கிலை முதலியன தின்னக் கொடுத்துப் பழக்கி, குருவரகு என்னும் தானியத்தைச் சேற்றோடு கலந்து சுவர் வைத்துக் குடிசை யொன்று கட்டி அதிலே அந்த ஆடுகளை யடைத்துவந்தனர். இப்படி யிருக்கும்போது நாட்டிற் பஞ்சம் வந்து, ஆகார மகப்படாமல் உயிர்ப்பிராணிக ளெல்லாம் மாண்டொழிந்தன. அக் காலத்தில், இந்த இடைக்காடர் தாம் பழக்கி வைத்திருந்த பழக்கப்படி ஆடுகளுக்குத் தினந்தோறும் எருக்கிலையை ஆகாரமாகக் கொடுத்து அவற்றைக் குடிசையி லடைத்து, அவை எருக்கிலை தின்றதனாலுண்டாகும் தினவால் சுவரில் உடம்பைத் தேய்க்க, அப்போது அதிலிருந் துதிரும் சிறிது குருவரகென்னுந் தானியத்தைப் புசித்து இவர் மாத்திரம் வாழ்ந்து வந்தனர். இவருடைய ஆடுகளும் எருக்கிலை தின்று பிழைத்திருந்தன. இப்படி இவரும் இவ

ருடைய ஆடுகளும் பிழைத்திருக்கும்போது இவ் விசேஷத்தை யறியும்படி நவக்கிரகங்களாகிய ஒன்பதின்மரும் இவரிடத்துக்கு வந்தனர். அப்போதிவர் அவர்களை எதிர்கொண் டழைத்துப்போய் ஆட்டுப் பாலில் குருவரகைப் பாகஞ் செய்து அவர்களுக்கு விருந் திட்டுபசரிக்க, அக் கிரகதேவர்கள் நன்ருக வுண்டு, உண்ட மயக் கத்தால் நினைவற் றுறங்கினுர்கள். அத் தருணத்தில், அக் கிரகங் கள் மாறுபட்டிருத்தலே உலகத்தில் மழையில்லாமல் பஞ்ச முண் டானதற்குக் காரணமாதலால், அதை நீக்கும்பொருட்டு, அக் கிரக தேவர்களை மழை பெய்தற்கு வேண்டிய நிலையிற் சேர்த்த னர். உடனே மழை பெய்து நாடு செழித்தது. அதன்மேல் கிர கங்கள் விழித்தெழுந்து தம் நிலையை யடைந்தனர். இவர், சாரீ ரம் என்னும் வைத்தியநூல் இயற்றினர். இன்னும் இவருடைய சரித்திரங்களை நூல்களில் வருமிடத்துக் கண்டுணர்க.

---

"வைகறைத் துயிலெழு."

என்பதற் கேற்ப, விடியற்கால நேரத்தில் நித்திரை தெளிந் தெழுதற்குரிய காரணத்தை விளக்கி அதன் உயர்வு கூறல்.

106. செய்யமுகம் வாய்கைகால் தேகசுத்தி செய்துமெய்
யில், துய்யவெண்ணீ றிட்டரனைத் தோத்திரஞ்செய்-
துய்யும்வகைக், மாவெய்தும் புன்னைவன மன்னவா!
மையிரவி, லேவைக றைத்துயி லெழு.

(ப் - ரை) மா எய்தும் - இலக்குமி விரும்பிச் சேருகின்ற, புன்னைவனம்-புன்னைவனத்திலுள்ள, மன்னவா - இறைவனே!, ('வைகறைத் துயிலெழு,' என்று ஒளவை கூறிய நீதிப்படி மனித ராயினுர் விடியற்கால நேரத்தில் நித்திரை தெளிந்தெழவேண்டும்; அங்ஙன மெழுந்தால், தேகசுத்தி செய்துகொண்டு தெய்வவழி பாடு செய்து நோயற்ற வாழ்வெய்தி நற்கதி யடைய எது வுண்டா

கும்; ஆதலின், அவ்வாறே) செய்ய - செவ்விய, முகம்-முகத்தை யும், வாய் - வாயையும், கை - கரங்களையும், கால் - பாதங்களையும், தேகம் - உடம்பையும், சுத்தி செய்து - சுத்தம் செய்துகொண்டு, மெய்யில்-தேகத்தில், துய்ய - பரிசுத்தமாகிய, வெண் நீறு இட்டு-வெண்மையான விபூதி யணிந்து, அரனை - சிவனை, தோத்திரம் செய்து - துதித்து, உய்யும் வகை - பிழைக்கும்படி, மை - கரிய, இரவிலே - இராத்திரி காலத்திலே, (படுக்கும்போது) வைகறை - விடியற்கால நேரத்தில், துயில் எழு - நித்திரை தெளிந்து சோம்ப லின்றி எழுந்திருக்கக்கடவாய்.

(வி - ரை) முகம், வாய், கை, கால், தேகம் என்பவற்றில் எண்ணும்மைகள் தொக்கன. தேகம் என்பதில் மவ்வீறு கெட்டது. இச் செய்யுளில் ஆத்திசூடி சூத்திரம், 'வைகறைத் துயி லெழு,' என வருகின்றது. 'வைகறைத் தொழுதெழு,' என்றும் பாடபேத முண்டு. இதற்கு, 'விடியற் காலத்தில் எழும்போது கடவுளைத் தொழுது எழுந்திருக்கக்கடவாய்,' என்பது பொருள்.

---

"ஒன்னாரைத் தேறேல்."

என்பதற் கேற்ப, பகைவரை எப்பொழுதும் நட்பாளரென்று தெளியலாகா தெனல்.

107. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னார்
அழுதகண் ணீரு மனைத்தென் —றெழுசொலைப்பார்
தூயபுகழ்ப் புன்னைவனத் தோன்றலே! சொப்பனத்தி
லேயுமொன் னாரைத்தே றேல்.

(ப - ரை) தூய - பரிசுத்தமாகிய, புகழ் - கீர்த்தியை யுடைய, புன்னைவனம் - புன்னைவனத்தி லிருக்கின்ற, தோன்றலே - பெருமையிற் சிறந்தவனே!, (பகைவர் ஒருசமயம் தாழ்மை காட்டிவரினும் அறிவுடையார் அவர்களை நட்பாளரென்று தெளிய

லாகாது; அவர்கள் வணங்கிக் கும்பிடுகின்ற கைக்குள்ளும் கொல்லத்தக்க ஆயுதம் மறைந்திருக்கும்; அவர்கள் அழுத கண்ணீரிலும் அவ் வாயுதத்தைப் போன்ற கொலைச்செய்கை மறைந்திருக்கும்; இதுபற்றியே ஔவையும், 'ஒன்னாரைத் தேறேல்,' என்று கூறினள். இதற்கிணங்க) "ஒன்னார் - பகைவர், தொழுத - வணங்கிய, கையுள்ளும் - கரத்திற்குள்ளும், படை - கொலை செய்யத்தக்க ஆயுதம், ஒடுங்கும் - அடங்கி மறைந்திருக்கும்; அழுத - அவர் அழுததனால் வெளிப்பட்ட, கண்ணீரும் - கண்கலக்கநீரும், அனைத்து - அந்தக் கையைப்போல படை மறைந்திருத்தற்கு இடமாம்," என்று - என்று விளக்கிக் காட்டி, எழு - திருவள்ளுவர் வாக்கிலே எழுந்த, சொல்லை - நீதி வாக்கியத்தை, பார் - நீ ஆராய்ந்து பார்; (இதனாலும் பகைவரைச் செய்கையினால் நம்பலாகா தென்பதும், குறிப்பால் அவர் தன்மையை உணர்ந்து அறிவுடையோர் தம்மைக் காத்துக்கொள்ளவேண்டு மென்பதும் புலப்படும். ஆதலின், நீ) சொப்பனத்திலேயும்-கனவிலும், ஒன்னாரை - பகைவரை, தேறேல் - அவர் நடிப்பாக வணங்குவதால் நல்லாரென்று தெளியாதே, (குறிப்பால் அவர் வஞ்சகத்தையுணர்ந்து உன்னைக் காத்துக்கொள்வாயாக.)

(வி - ரை) தொழுத, அழுத - இவை பெயரெச்சங்கள். ஒன்னார் அழுதகண்ணீர் - இது ஒன்னாரால் அழப்பட்ட கண்ணீர் என விரியும்; ஆலுருபு தொக்கி செயப்பாட்டு வினை செய்வினையாக மாறிவந்த மூன்றும்வேற்றுமைத் தொகை. பகைவர் தோல்வியடைந்து வணங்குங் காலத்திலும் கைக்குள் ஆயுதத்தை மறைத்து வைத்திருப்பர்; வணங்கினர்களே யென்று அவர்களைச் சமீபத்தில் சேர்ப்பின், உடனே அவர்கள், மேற்பாய்ந்து அவ்வாயுதத்தாற் கொல்வர்; இன்னும் அவர்கள் கண்ணீர் வடித்துக் கொண்டும் வருவர்; அப்போது இரங்கி அவர்களைச் சேர்ப்பினும் சமீபித்து ஒரு தீங்கைச் செய்துவிடுவர்; ஆதலால், அந்தக் கண்

ணீரும் ஆயுதம் மறைத்துவைத்திருக்கும் கையைப் போன்றதே யாம். இதுபற்றியே, 'அழுதகண்ணீரு மனைத்து,' என்று கூறி ஞர் ஆசிரியர்.

"தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னுர்
அழுதகண் ணீரு மனைத்து."

என்பது திருக்குறள். இக் குறளையே இந்நூலாசிரியர், இச் செய்யு ளின் முதலிரண்டடியிற் கூறியிருக்கின்றனர்.

---

## "ஓதுவது வேதம்."

என்பதற் கேற்ப, வேதமே ஓதத்தகுவ தென்பதை விளக்கி வாழ்த்துக் கூறுதல்.

**108.** அந்தணர்கள் வாழி யறம்வாழி கீர்த்திநிலை
தந்தவர்கள் வாழி தவம்வாழி—சந்ததமும்
மானபரா! புன்னை வனநாதா! இவ்வகையே
தானோ துவதுவே தம்.

(ப - ரை) மானபரா - மானமுள்ள செயல் பொருந்திய வனே!, புன்னைவனநாதா-புன்னைவனத்திற்குத் தலைவனே!, (உலகத்தில் மனிதர் பலவித நீதிகளைக் கூறும் வேதத்தையே ஓதி யுணரின் பல நன்மைகளும் பெற்று முடிவில் நற்கதியை அடையலாம்; இதுபற்றியே ஔவையும், 'ஓதுவது வேதம்,' என்று கூறி னள்; ஆதலின்) இவ்வகையே - இந்த நூலிற் சொல்லிவந்த கிரமப் படியே (எல்லா நீதிகளையு முணர்ந்து) ஓதுவது-படிக்கத் தகுவது, வேதம் - இவ்வகை நீதிகளுக்கெல்லாம் இருப்பிடமாகிய வேதமாம்; (ஆதலின், நீயும் இந்த வேதத்தை ஓதி யுணரக்கடவாய்)-சந்ததமும்-தினந்தோறும், அந்தணர்கள் - வேதியர்கள், வாழி - வாழக்கடவர்; அறம் - தருமமானது, வாழி - வாழக்கடவது; கீர்த்தி நிலை - புகழுக் கிருப்பிடத்தை (அதாவது புகழ்ச் செய்கையை) தந்தவர் கள்-உலகத்தில் கொடுத்தவர்கள், (அதாவது செய்தவர்கள்) வாழி-வாழக்கடவர்; தவம் - பெரியோரால் செய்யப்படும் விரதமானது, வாழி - வாழக்கடவது.

(வி - ரை) வாழ்த்து ஈற்றில் வருதல் முறைமையாகலின், முன்னே வாழ்த்துக் கூறும் இரண்டடிகளைப் பின்னும், பின்னே வேத மோதுதலைக் கூறும் இரண்டடிகளை முன்னுமாக மாற்றிப் பொருள் கூறினும். வாழி - வியங்கோள் வினைமுற்று; வாழிய என்பதன் ஈற்றுயிர் மெய் கெட்டு இங்ஙனம் 'வாழி' என நின்றது;

"வாழிய வென்பத னீற்றி னுயிர்மெய்
ஏகலு முரித்தஃ தேகினு மியல்பே."

என்பது சூத்திரம். இவ் வியங்கோள் வினைமுற்று ஐம்பால் மூவிடங்களிலும், இறந்தகால மொழிய மற்றைய விரண்டு காலங் களிலும் வரும். பரம் - செயல்; 'மானபரா' என்பதற்கு 'மானம் பொருந்திய செய்கையை யுடையவள்' என்பது பொருள். மான மாவது பெருந்தன்மை. 'தானே துவதுவே தம்,' என்பதில், 'தான்' என்பது அசை. 'இவ்வகையே ஓதுவது வேதம்,' என்ற தனாலே, 'இந்நூலிற் பல நீதிகளும் கூறிவந்தபடியினாலே அவற் றையெல்லாம் நீ தெரிந்துகொண்டனை ஆதலின், இத் தெளிவின் படியே என்றும் ஓதத்தகுவது இவ்வகை நீதிகளுக் கிருப்பிடமாகிய வேதமாம்', என்பது பெறப்பட்டது. இதனைக் கூட்டி முடித்தற் பொருட்டு இதற்கு முன் பல விஷயங்கள் வருவித் துரைக்கப்பட் டன. இதில் ஆத்திசூடிச் சூத்திரம், 'ஓதுவது வேதம்,' என வரு கிறது. ஆத்திசூடியில், 'ஓரஞ் சொல்லேல்,' என்பது பாடம். இத ற்கு, 'நடுவுநிலைமை நீங்கி, பக்ஷபாதமாக வழக்குத் தீர்ப்புச் சொல் லாதே,' என்பது பொருள். இங்ஙனம் ஔவை பலவிதமாகக் கூறி யிருக்கமாட்டாள். ஒரேவிதமாகத்தான் கூறியிருப்பாள். எனினும், யிக்காலத்தவர் தங்கள் தங்கள் புத்திக் கிசைந்தவாறு செய்யுட்களை மாற்றிக்கொண்டனர் போலும்.

## ஆத்திசூடி வெண்பா மூலமும் உரையும்
முற்றுப் பெற்றன.

---

SECOND EDITION] [1000 COPIES

சிவமயம்

ஆத்திசூடி அருளிய

# ஔவையார் சரித்திரச் சுருக்கம்

ஔவையார் சோழியப் பிராமணராகிய பகவனு ரென்பவருக்கு ஆதியென்பவள் வயிற்றிலே பிறந்து, காவிரிப்பூம் பட்டினத்தில் பாணர்சேரியிலே வளர்ந்து, தமிழ்ப்புலமையுடையராய் விளங்கிய மாதுசிரோமணியார். பகவனரும் ஆதியும் தம்முட் செய்துகொண்ட சங்கேதப்படி, பிறக்கும் பிள்ளைகளையெல்லாம் அஃதஃது பிறக்கு மிடத்திலேயே வைத்துவிட்டுச் செல்வாராயினர். ஔவையைப் பெற்றவுடனும், தாய் "இச் சிசுவை எவ்வாறு விடுத்துப் போவேன்?" என்றிரங்கி நின்ருள். அப்போது ஔவையாராகிய அச் சிசு தாய் முகத்தை நோக்கி,

"எவ்வுயிருங் காப்பதற்கோ ரீசனுண்டோ வில்லையோ
அவ்வுயிருள் யானுமொன்றிங் கல்லேனே—வவ்வி
அருகுவது கொண்டிங் கலைவானே னன்னுய்
வருகுவது தானே வரும்."

என்னும் பாட்டை அற்புதமாகக் கூற, தாய் அதுகேட்டு அவ்விடத்தினின்றும் நீங்கினுள்.

ஔவையாருக்கு அதிகமான், திருவள்ளுவர், கபிலர் என மூன்று சகோதரரும், உறுவை, உப்பை, வள்ளி என

*

மூன்று சகோதரிகளு மிருந்தனர். ஔவையார் தமிழ்ப்புல மையோடு மதிநுட்பமும் உடையவர்; இல்லற வொழுக்கத்தை விரும்பாது தவத்தையே பாரமார்த்திகமாகக் கொண்டொழுகினவர்; சிறிதுகாலம் மதுரையிலும், சிறிதுகாலம் சோழநாட்டிலும், சிறிதுகாலம் சேரநாட்டிலும், நெடுங்காலம் அதிகனிடத்திலும், எஞ்சியகாலம் முனிவர் வாசங்களிலும் வசித்தவர்; அரசரையும் பிரபுக்களையும் பாடி அவர் கொடுக்கும் பரிசுகளைப் பெற்றுக் காலங் கழித்தவர். இவரால் பாடப்பட்டோர் அதிகன், சேரமான் வெண்கோ, தொண்டைமான், நாஞ்சில் வள்ளுவன், உக்கிரப்பெருவழுதி, இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி முதலியோர்.

தமது தேக மெலிவைக் கண்டிரங்கி அதிகன் கொடுத்த கருநெல்விக்கனியை வாங்கியுண்டவர். இக்கருநெல்விக்கனி யாவர்க்கும் எளிதிற் கிடைப்பதொன் றன்று; உண்டவர்க்குத் திடகாத்திரமும் தீர்க்காயுளும் தரும் இயல்பினது. இத்தகைய அற்புதக் கருநெல்விக்கனியைத் தான் உண்டு நலம் பெறாது இவருக்குக் கொடுத்த அதிகன் வண்மையன்றோ வண்மை!

"பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா
தாதனின் னகத்தடக்கிச் சாதனீங்கவெமக் கீந்தனையே."

எனப் புறநானூற்றில் வரும் ஔவையார் பாடலால் இவ்வுண்மை புலப்படும். இது ஔவையார் பாடியதென்பது,

"அமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த
வுரவுச் சினங்கனலு மொளிதிகழ் நெடுவே
லரவக் கடற்றானை யதிகன்."

எனச் சிறுபாணாற்றுப்படையில் வருவதாற் பெறப்படும். அவ் வதிகன்மாட்டுத் தாம் கொண்ட பேரன்பினால் அவனுடைய தூதாகத் தொண்டைமானிடஞ் சென்றவர். தொண்டைமான் தனது வலியை யுணர்த்தும் பொருட்டுத் தன் ஆயுதசாலையைத் திறந்து காட்ட, "இவ் வாயுதங்களெல்லாம் நெய்யிட்டு மாலை சாத்திப் பூசிக்கப்படுவனவாய்க் கதிர்கான்று விளங்குகின்றன; அதிகனுடைய ஆயுதங்களோ பகைவரைக் குத்தித் தினந்தோறும் பிடியும் நுதியும் சிதைந்து, கொல்லனுடைய கம்மியசாலையின் கண்ணவாம்" என்னுங் கருத்துற்ற பாடலைக் கூறித் தொண்டைமானைத் தலை குனிவித்த மதிநுட்ப முடையவர்.

இவர் உக்கிரப்பெருவழுதி காலமுதல் கம்பர் காலம் வரையும் ஜீவித்தவரெனப்படுதலால், இவருக்கு வயது எண்ணூற்றின் மேற்பட்ட தாதல்வேண்டும். கருநெல்லிக் கனி யுண்டு காயசித்தி செய்துகொண்டமையே இவ்வாயுள் நீட்டத்துக் கேதுவாம். திருமூலர் தினம் ஒன்றுக்கு இயல்பாக வெழுகின்ற 21,600 சுவாசங்களையும் 730 ஆக அடக்கி மூவாயிரம் வருஷம் உயிரோடிருந்தன ரன்றோ! இவ் விஷயம் யோகசாஸ்திரம் வல்லார்க் கன்றி மற்றோர்க்கு எளிதில் உண்மையாகமாட்டாது. அதுவுமன்றி, "மாந்தர்க்கு வயது நூறல்ல தில்லை" என்று வரையறுக்குந் தமிழ்ப்புல

வர்கள், தாமே சிறிதுங் கூசாது எதுவுங் கூறிச் சங்க காலத்திருந்த ஔவையார் கம்பர்காலத்து மிருந்தாரெனக் கூறும் துணிவொன்றே இதற்குப் போதிய சான்றும். எங்ஙனம் கொள்ளினும், திருவள்ளுவர் சகோதரியாராகிய ஔவையார் கடைச்சங்க காலத்தில் விளங்கினவர் என்பது கபில பரணர்களது பாடல்களால் நன்கு நிச்சயிக்கப்படும்.

ஆத்திசூடி, கொன்றைவேந்தன், வாக்குண்டாம், நல்வழி, ஞானக்குறள், அசதிக்கோவை, பந்தனந்தாதி முதலிய நூல்கள் இவர் செய்தனவேயாம். இவரைப்பற்றிய சிறு கதைகள் அநேக முள. ஔவையாரென்னும் பெயர் இவருக்கு இயற்பெயரன்றிக் காரணத்தாலிடப்பட்டதன்று. பாரதம் பாடிய வில்லிபுத்தூராழ்வாரும், "ஔவை பாடலுக்கு நறுநெய் பால்" என்னுஞ் செய்யுளிலே இவருடைய வாக்குப் பலிதத்தை வியந்து பேசியுள்ளார். இவருடைய வாக்குகள் சாபாநுக்கிரக முடையனவா யிருந்தமைபற்றியே, இவர் தமிழ்நாடெங்கும் வியாபித்த புகழும் நன்கு மதிப்பும் உடையராயினர். ஆயிரத்தெண்ணூறு வருஷங் கடந்தும், இன்றும் ஔவையா ரென்றாற் சிறுவரும் பெரு மதிப்புக் காட்டுவர். பண்டைக்காலத்துப் புலவர்களுள்ளே இவர் ஒருவர் பெயரே கல்வியறிவில்லாத சாமானியர் வாயிலுங் கேட்கப்படுவதாயிற்று.